# முத்தமிழ்வாணர்

உயர்நிலைப் பள்ளிப் படிவங்கட்குரியது

வித்துவான், கோ. அரங்கன்,
எழுதியது.

பத்மா பப்ளிஷிங் அவுஸ்
10, தெற்கு உஸ்மான் ரோடு,
தியாகராய நகர், சென்னை-17.

 [விலை ரூ. 1.

# முன்னுரை

முத்தமிழ்வாணர் என்று பெயர் பெற்றுள்ள இந்த நூல், முத்தமிழை நன்கு பயின்று பெற்ற அப்புலமையால் தம் வாழ்க்கையை இனிது நடத்தி வந்தவரையும், முத்தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வந்தவரையும் பற்றி உரைப்ப தாகும். இந்த நூல், உயர்நிலைப் பள்ளிகளில் 4, 5, 6 ஆம் படிவங்களில் பயிலும் மாணவ மாணவிகளுக்குப் பாரந்த படிப்பு நூலாகப் பயன்படும் முறையில் அதற்கேற்ற செந்தமிழ் நடையில் எழுதியதாகும். இந்நூல், சிறந்த தமிழறிவையும், தமிழ்வாணர் வரலாறுகளையும், தமிழ் மொழிப்பற்றையும் ஊட்டவல்லது.

இந்த நூலுள் நான்கு ஆண்பாலார் வரலாறுகளும், நான்கு பெண்பாலார் வரலாறுகளும் ஆக எட்டுப் பகுதி கள் அடங்கியுள்ளன. தமிழ் மொழியைக் கற்கப் புகுந்த மாணவ மாணவிகளுக்கு இந்த நூல் இன்றியமையாது வேண்டப்படுவதாகும்.

ஆதலின், இந்த நூலிற்கு அரசாங்கக் கல்வி இலாகாத் தலைவர்களும், உயர்நிலைப் பள்ளிகளிலுள்ள தலைமையாசிரி யர்களும், தலைமையாசிரியைகளும், தமிழ்ப் பண்டிதர் களும் முழுதும் ஆதரவு அளிப்பார்கள் என்று யான் முற்றும் நம்புகின்றேன்.

இங்ஙனம்,

**வித்துவான், கோ. அரங்கன்,**

தமிழ்ப்பண்டிதன்.

## பொருளடக்கம்

# முத்தமிழ்வாணர்

## 1. தமிழ்ச்சுவையூட்டிய தாய்

தமிழ் மக்கள், தமிழ்மொழி வழங்கிவந்த தமிழ் நாட்டை மூப்பெரும் பிரிவாகப் பகுத்திருந்தனர். அப் பிரிவுகள், சேர நாடு, சோழ நாடு, பாண்டியநாடு என்று பெயரிட்டு அழைக்கப்பட்டன. இந்தத் தமிழ் நாட்டிற்குப் பண்டைய நூல்கள் பலவும் நான்கு திசைகளிலும் எல்லையைக் குறித்துச் சென்றன. அந்த எல்லையாவது: "வடவேங்கடம் தென்குமரி" என்பன வடக்குத் தெற்கு எல்லைகள் ; வங்காள விரிகுடாவும், அரபிக்கடலும் கிழக்கு மேற்கு எல்லைகள் ; இந்த நான்கு எல்லைக்குட்பட்ட நாட்டைத் "தமிழகம்" அல்லது, "தமிழ் நாடு" என்று தமிழர் கூறுவர்.

இந்தத் தமிழ்நாட்டில் முடியுடை மன்னர் மூவரும், குறுநில மன்னரும், கொடையிற் சிறந்த வள்ளல்களும் வாழ்ந்து வந்தனர். இவர்கள் புகழை உலகில் பரப்பிப் பரிசில் வாழ்க்கையே தமது வாழ்க்கையாகக்கொண்ட பாணர் என்றொரு இனத்தார், அப்பொழுது வாழ்ந்து வந்தனர். இப்பாணர்கள், இசையிலும், தமிழிலும் நல்ல பயிற்சியுடையவராய்ப் புலமையிற் சிறந்து விளங்கினர். இவர்களுள், பெண்பாலர்கட்கு விறலியர் என்று பெயர். விறல் என்றால் (சத்துவம்) மெய்ப்பாடு என்று

பொருள். இம் மெய்ப்பாடு தோன்றப் பாடியாடுபவர் விறலியராவர்.

மேற்கூறிய மூன்று தமிழ்நாடுகளுள் ஒன்றுன சேர நாடு செய்த தவப்பயனுக அந்நாட்டில் பாணர் பெருங் குடியில் தமிழர்க்குத் தமிழ்ச்சுவையூட்டிய தாயாகிய ஔவையார், பன்னூருண்டுகட்கு முன்னர் தமிழ்மொழி செழிக்கத் தோன்றினுர். இவர், கருவிலே திருவுடைய ராய்ப் பிறந்தவராதலின், இளமைமுதல் நல்லறிவு படைத்து இயற்றமிழ்க் கல்வியைக் கற்றுக்கொண்டார்; பின்னர், தம்பாணர் குடிக்குரிய இசைத்தமிழ், நாடகத் தமிழ் நூல்களையும் முறையே பயின்று அதில் வல்லவ ராஞர்.

"தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம்
மாறிய பிறப்பிற் றேடி வருவபோல் வந்த வன்றே."

என்றபடி, ஔவையாரை இக்கல்விகள் யாவும் தாமே தேடி வந்தடைந்தன. ஔவையார், முதலில் இயற் றமிழில் வல்லவராய்ப் பின்பு, இசையிலும் திறமை வாய்ந்தவராய், நாடகக் கலையிலும் நன்கு தேர்ச்சிபெற்று விறல்பட ஆடும் பெருவிறலியராகவும் விளங்கினுர்.

ஔவையார் காலத்தில், ஆடவரேயன்றி மகளிரும் கல்வியில் தேர்ச்சிபெற்று, நல்லிசைப் புலமை மெல்லிய ராகப் பலர் விளங்கினர். அப்பெண்பால் புலவர்கள், பாடிய பாடல்கள் பல, சங்கநூல்களில் விளங்குகின்றன. அப்பெண் புலவர்களில் சிறந்த புலவர்கள் பெயர் வரு மாறு: பூதப்பாண்டியன் தேவியார், வெள்ளிவீதியார், ஆதிமந்தியார், பொன்முடியார், வெண்ணிக்குயத்தியார், நப்பசலையார், நக்கண்ணையார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, பாரிமகளிர், காக்கைபாடினியார் முதலி

யோராவர். இவர்கள் யாவரும் சிறந்த பாவலர்களாய் உயர்ந்த புலமை வாய்ந்திருந்தனர்.

ஒரு நாடு நாகரிகம், செல்வம், அறிவு இவற்றால் மேன்மையடைய வேண்டுமாயின், ஆடவர்களைப்போல் மகளிரும் சிறந்த கல்விகளைக் கற்று ஒழுக்கமுடையவ ராய்த் திகழ்தல் வேண்டும். ஔவையார் காலத்தில் தமிழ்நாடு சிறந்த நாகரிகத்திலிருந்தது என்பதற்குப் பெண்பாலார் பலர், கற்றறிவுடையரா யிருந்ததே சான் றாகும்.

ஔவையார், தமிழ் நாட்டில் வாழும் மக்களையும், அரசர்களையும் சீர்திருத்தி, நல்லொழுக்கம், அறம், நீதி, உண்மை, ஈகை முதலியவையுடையவராகச் செய்யப் பெரி தும் முயன்றுவந்தவர். இவர், குடத்துள் இட்ட விளக் காய்த் தாம் கற்றதோடு நின்றுவிடாமல், தமிழ்நாடெங் கும் சென்று, மக்கட்கு அறிவுரைகளைப் பலவகையில் எடுத்துரைத்து நல்வழிப்படுத்தி வந்தார். இவ்வாறு இவர் உலகிற்குத் தொண்டுபுரிவதுடன் தம் குலவாழ்க் கையாகிய பரிசில் வாழ்க்கையைக் கைவிடாதவராய்த் தமிழகம் எங்கும் பிரயாணம் செய்துவந்தார். தமிழ் நாட்டில், ஔவையாரிடத்திலும், அவர் பாட்டிடத்திலும் தக்க மதிப்புண்டு. அவர் மொழியும் அறிவுரைகளை விருப்பத்துடன் யாவரும் கேட்டு அதன்படி நடப்பர்.

இவர், தம் குலவாழ்க்கையை மேற்கொண்டவராய்க் கொடைத்திறம் மிக்க மன்னர்களிடந்தோறும், பெரு வள்ளல்களிடந்தோறும் சென்று, இன்னிசைத் தமிழ்ப் பாடல்களைப் பாடியும், விறல்பட ஆடியும் அவர்கட்குப் பெருமகிழ்ச்சியை யூட்டி, அவர்கள் மனமுவந்தளிக்கும் பரிசில்களைப் பெற்று வாழ்ந்துவந்தனர். ஔவையார்,

எளிய ஏழைகளையும், பெரிய செல்வமிக்க பணக்காரர் களையும் தன்னுள்ளத்தில் ஒன்றாக மதிப்பவர்; தமிழகம் செழிப்புற்று அறம்நன்கு வளர்ச்சியடைய வேண்டு மென்று எண்ணிச் சீர்திருத்தம் பலவும் செய்துவந்தார்; செருக்குடைய மாந்தரை ஒரு துரும்பாக எண்ணு மியல் பினர்; அருங்குண முடையாரைப் பெரிதாக மதித்து நடந்துகொள்வர்.

இவர் காலத்தில், சேர நாட்டைச் சேர்ந்த தகடூர் என்னும் ஊரைத் தலைநகராகக்கொண்டு அதியமான் நெடுமானஞ்சி என்னும் ஓர் அரசன், அவ்வூரைச்சார்ந்த நிலப்பகுதியை யாண்டுவந்தான். அவன் சேரர் மரபைச் சேர்ந்த அரசன்; கடையெழு வள்ளல்களுள் சிறந்த ஒரு வள்ளல்; அஞ்சாநெஞ்சமும் ஆண்மையுமிக்க ஒரு சிறந்த வீரன்; பெரிய வீரர்களாகிய மழவர் என்னும் ஒரு தொகுதிகொண்ட படைவீரர்களடங்கிய படையை யுடையவன்; இவ்வள்ளல் ஈதலிசைபட வாழ்தல் என்ற இரு தொழில்களிலும் ஈடுபட்டவன்.

இவன் ஒரு பெரிய வள்ளல் என்று, ஔவையார் பலர் வாயிலாகக் கேட்டறிந்தனர். இவனைச் சென்று காண இவர் விரும்பினார்; ஒரு நாள் ஔவையார் தகடூரை யடைந்தார்; அரசன் அரண்மனைக் கருகில் போகும் பொழுது அதியமான், ஔவையார் பெரு மையை நன்கு அறிந்தவனாதலின், தானே எதிர் சென்று வணங்கி இனிய முகத்துடன் வரவேற்று உபசரித்தான்; ஔவையாரோடு அளவளாவி உரை யாடினான்; அவர் கல்வி கேள்விகளில் இணையற்றவ ரென்பதைத் தன்னுள்ளமறிய நேரில் கண்டு மகிழ்ந் தான்.

கற்றாரோடு கற்றார் கூடி மகிழும் மகிழ்ச்சி, துறக்கத்து மகிழ்ச்சியினும் மேம்பட்டது என்பதை,

"தவலரும் தோல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பா மகல்வானத்(து)
உம்பர் உறைவார் பதி"

என்ற நாலடியார்ச் செய்யுளால் நாமறியலாம். அதியமான் பேருவகையடைந்து இவர் தன்னரண்மனையில் தன்னோடு பல நாளிருக்கவேண்டுமென்று எண்ணினான்.

ஆனால், ஔவையார், இவனிடம் பரிசில் பெற்றுக் கொண்டு புறப்பட்டுப் போகக் கருதி அந்த வள்ளலைத் தன் வாயாரப் பாடி வாழ்த்திப் பரிசில் வேண்டி நின்றார். அதியமான், இவர்க்கு நாம் பரிசிலீந்தால் இவர் விரைவில் போய் விடுவார்; இவரோடு நாம் அளவளாவி இருத்தல் இயலாது என்று பரிசில் கொடாது காலம் தாழ்த்தினன்.

ஔவையார், நான் இவனைப் பெரிய வள்ளல் என்று எண்ணி வந்தேனே! இவன், இனிமையொடு பேசி வீணே அனுப்பிவிடக் கூடுமோ? நம்மை இவன் ஒரு பொருளாக மதியாதவனோ? என்று பலவாறு அந்த வள்ளல் உள்ளக் கருத்தறியாது எண்ணினார். ஆயினும், நாம் விரைந்து ஒரு முடிவுக்கு வருதல் தவறு என்று, ஔவையார் தமக்குள் எண்ணி, அதியமான் அரண்மனையில் சில நாள் தங்கியிருந்தார்.

அதியமான் இவரைத் தன்னவையில் அழைப்பது இவர் பாடல்களைக் கேட்பது, இவரோடு நூல்களைட்

பற்றி ஆராய்வது, அளவளாவுவது, பெரிதும் மகிழ்ச்சி யடைவது, உணவு, படுக்கை, பணியாளர் இவ்வகை களால் நன்ருய் உபசரிப்பது, இத்துடன் நிறுத்தி விட் டான். இவர் விரும்பியபடி தக்க பரிசில் ஒன்றும் வழங்காமல் மேலும் காலம் நீட்டித்தான். இறுதியாக ஔவையார்க்கு 'இல்வு காத்த கிளியாஞேம்' என்று சினமிகுந்து, அவனே இனி நேரில் பார்ப்பதற்கும் விரும் பாதவராய் அதியமானுடைய வாயில் காவலனே நோக்கி, "ஏ வாயிற் காவலனே! பரிசில் வாழ்க்கையுடைய புலவர்க்கு அடைக்காத கதவுகளையுடைய வாயில் காவ லனே! பேருதவி புரிந்துவரும் அதியமானஞ்சி, தன் தரம் இத்தன்மையது என்று அறியாஞே? அல்லது எம் தரத்தையேனும் அறியான் போலும்! இவ்வுலகம் நிரம்ப அகன்ற இடமுடையது; இதன் கண் அறிவும், செல்வமும், ஈகையும், புகழுமுடையவர் நிரம்பப் பலரி ருக்கின்றனர்; நான் இவன் அருள் கிடைக்குமென்று நெடுங்காலம் இங்கு தாழ்த்திருந்தும், பலனின்றி வீணே கழிந்தது. சென்றது போக இனி யான், என்னுடைய யாழ் முதலிய கருவிகளை மூட்டையாகக் கட்டிக்கொண்டு இப்பொழுதே புறப்படுகின்றேன். இவனன்றிப் பிறர் உலகில் வள்ளல்களில்லையோ? எம்மை அன்போடு உப சரித்துச் சோறிடுவோர் எத்திசைச் செலினும் அத்திசை யில் பலருளர். இதனை அஞ்சியிடம் யான் கூறியதாகக் கூறுவீர்; யான் சென்று வருகிறேன்" என்று சினந்து கூறிவிட்டுத் தம் பாடல் கேட்டுப் பரிசில் ஈயும் ஈகை யாளரைத் தேடிக்கொண்டு ஔவையார், புறப்பட்டார்.

இவ்வாறு ஔவையார், கோபங்கொண்டு கூறிய மொழிகளைக் கேட்ட வாயிற் காவலர், இவ்வெம்பெரு மாட்டியின் கோபம் முடிவில் யாதாய் விளையுமோ?

என்று நடுங்கி அதியமானிடம், சென்று உரைத்தனர். காவலர் மொழிகேட்ட அதியமான் அஞ்சி, மிகவும் அஞ்சி ஔவையார் மனம் புண்பட நடந்து கொண்ட தம் பிழைக்கு நிரம்ப வருந்தினன். வருந்தியவன், ஔவையார் திருமுன் விரைந்து வந்து, தானறியாமல் செய்த பிழையை மன்னிக்க இன்சொல் லுரைத்து வேண்டினன்; அவர் முகம் நோக்கித் தாங்கள் அரண் மனைக்கு என்னுடன் எழுந்தருள வேண்டுமென்று அழைத்துச் சென்று, கொடைமன்றத்தில் சிறந்த ஆசன மிட்டு, அமரச் செய்தனன்; ஔவையார் எதிர்பார்த்த அளவிற்கு மேல் பரிசில்களை நிரம்ப வழங்கினன்; பொன் னும், மணியும், நெல்லும், ஆடைகளும், விருதுகளும் பணியாளரும், பலவும் கொடுத்து உபசரித்தனன்.

இவ்வாறு அஞ்சியால் அளவற்ற மதிப்புக்களைப் பெற்ற ஔவையார், இவன் உயர்ந்த உள்ளப் பான் மையை அறியாமல் இவனிடம் சினம் கொண்டோமே! நாமே "ஆறுவதுசினம்" என்று பாடிவைத்துப் பின் சினமாறாமலிருத்தல் அழகல்லவே! என்று தமக்குள் தாமே எண்ணிக்கொண்டு அதியமான் அஞ்சியின் முக நோக்க வெள்கி உவகையுடையவராய்த் தம் முள்ளத் தையே முன்னிலைப்படுத்தி, "இத்தகைய ஈகையாளனைப் பரிசில் கொடாமல் நீட்டித்தான் என்று முனிந்தோமே! இவ்வள்ளல், ஒரு நாளன்று பல நாளல்ல, பற்பல நாளும் பற்பல ரோடும் அடுத்தடுத்து இவனிடம் செல் லினும் முதல்நாள் கண்டபொழுது கொண்ட பேரன்பிற் சிறிதும் குறையாமல் ஒரு படித்தாய் இன் முகமும், இன்சொல்லும் உடையான்; இவன் விரைந்து பரிசில் தராமல் காலம் நீட்டிப்பினும், நீட்டியாது முன்வந்து தரினும், யானை தன் துதிக்கையில் கொண்ட கவளம்,

அதன்வாயினுட் செல்லுதல் தவருததுபோல, இவ்வுப காரி, நமக்கும், நம் போன்றவர்க்கும் பரிசில் தருதல் ஒரு நாளும் தவருது" என்று அவன், புலவர்களிடமும், இரவலர்களிடமும் எப்பொழுதும் ஒரு தன்மையாகக் கொள்ளும் அன்பையும், அருளையும் மிரம்பப் பாராட்டிக் கூறி, அதியமான் அஞ்சியின் கொடையை வாயார வாழ்த்திக் கொண்டாடி, அவ்வள்ளல் அரண்மனையில் பல நாள் தங்கியிருந்தனர். அஞ்சியும் ஔவையாரோடு நாடோறும் அளவளாவி 'இம் மிக்காரொடு தலைப்பெய் தலால் அறிபாதனவெல்லாம் அறியப்பெற்ருேம்' என்று உவகை யுள்ளத்தனய் வாழ்ந்து வந்தான்.

இவ்வாறு ஔவையாருடன் பழகி வாழ்ந்துவரும் நாளில், ஒரு நாள் அதியமானஞ்சி தன்னகர்க்கு அருகே யுள்ள ஒரு மலைப் பக்கத்திற்குச் சென்றிருந்தான். அம் மலையின் செங்குத்தான தாழ்வரையில் ஒரு பெரிய வெடிப்பில் முளைத்திருந்த ஒரு கருநெல்லி மரத்தைக் கண்டான். அம்மரத்தில் ஒரு கருநெல்லிப் பழம் நன்கு பழுத்து விளங்கிற்று. அந்தப் பழமுள்ள இடத்தை எந்த வகையாலும் அடைதல் முடியாதபடி இருந்தது. அதியமானஞ்சி, பற்பல பெரிய அரிய முயற்சிகளைச் செய்து அப்பழத்தைப் பறித்து எடுத்தான்.

அவன், அக்கனியை உண்டவர்கள் நெடுங்காலம் உயிர் வாழ்ந்திருப்பர் என்றறிந்தான். உடனே அவன் தன் உள்ளத்தில் எண்ணியதாவது; இக்கனியை நாமுண்டு உலகில் உயிர் வாழ்ந்திருப்பதைவிட, உலகில் வாழும் மக்கட்கு நல்லறிவையூட்டும் ஔவையார்க்கு ஈதலே மிரம்பப் பயனுடையது என்று எண்ணினன்; அங்கிருந்து அக்கனியுடன் புறப்பட்டுத் தன்னரண்

மனையை யடைந்தான்; வழிவந்த வருத்தத்தை நீக்கிக் கொண்டு தன்னுடைய சபையை யடைந்து அவ்விடத்திற்கு ஔவையாரை வரவழைத்தான்; ஔவையாரிடம் அக்கனியின் பெருமையைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் அவரிடம் கொடுத்து உண்ணும்படிச் செய்தான்.

ஔவையார், அதியமான் கொடுத்த கருநெல்லிப் பழத்தையுண்டு அவனோடு உரையாடி மகிழ்ச்சியடைந்தனர்; அதன்பின் தனக்கு அதியமான் கொடுத்த கருநெல்லிப்பழம் எப்படிப்பட்ட பெருமையுடையதென்று அறிந்தார்; இவன், இக்கனியைத் தானுண்டு நெடுங்காலம் உயிர் வாழ்ந்திருக்கலாமே! என்னிடம்கொடுத்து எதற்காக உண்ணச் செய்தான்? என்று பெருவியப்படைந்து, 'அதியமான் தன்னிலும் என்னைப் பெரிதும் மதித்திருக்கிறான் என்பது, இச்செயலால் தெளிவடைகின்றதல்லவா?' என்று தமக்குள் எண்ணிக் கொண்டார். பின்பு, ஔவையார் அவனருகிற்சென்று அவனை நோக்கி,

"ஆர்கலி நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி!
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே"

என்ற செய்யுளில் "அதியர் கோமானே! போர்வீரனே! செல்வமிக்க சீமானே! பெரிய மலையுச்சியிலிருந்த கருநெல்லி மரத்தில் பழுத்த அமுதமயமான இனிய நெல்லிக்கனி, கிடைப்பதற் கரியதென்று கருதாமலும், அதனை உண்டவர் நெடுங்காலம் வாழ்ந்திருப்பர் என்பதைக் கூறாமலும், உன் உள்ளத்தில் மறைத்து வைத்துச் சாதல்

நீங்க எமக்கு அளித்தாய்; இவ்வாறு கொடைப்பொரு ளில் மிகச் சிறந்த பொருளையும் எமக்கு நீ கொடுத்த படியால், நீலகண்டனாகிய சிவபெருமான், நஞ்சை யுண்டும் நிலை பெற்றிருப்பதுபோல, நீ நீண்ட ஆயுள் பெற்று இவ்வுலகில் வாழ்வாயாக" என்ற கருத்தமைந்த மேற்கண்ட பாடலைப்பாடி வாயார வாழ்த்தினார்.

இந் நிகழ்ச்சிக்குப் பின் ஔவையார், அதியமான் அஞ்சியிடம் பேரன்புடையவராய் அவனுக்குச் சிறந்த ஆருயிர்த் துணைவராய் வாழ்ந்து வந்தார். அஞ்சியும், முன்னினும் பன்மடங்கு மிகுந்த கேண்மையோடிருந்து வந்தான்.

"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு"

என்ற வள்ளுவர் வாக்குப்படி, குணக்கடலாகிய அதிய மான், ஔவையாருடன் கொண்ட நட்பு நாடோறும் வளர்ந்து வரத் தொடங்கிற்று. அதியமான் அஞ்சி, ஔவையாரோடு உரையாடிக் கேள்வி ஞானத்தில் மேன்மையடைந்து வருவதே தன் வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள் என்று முடிவு செய்து கொண்டான். ஔவையாரும், அஞ்சியுடனிருந்து அவனுடைய வீரம், ஈகை, முறை, அன்பு, அருள், செல்வம் முதலிய நற் குணங்களின் மேம்பாட்டைச் செய்யுட்களால் அவ்வப் பொழுது பாடித் தன் சீரிய புலமையைப் பயன் படுத்தி வந்தார். அதியமான்அஞ்சியைப் பாடுவதென்றால் ஔவையாருக்கு அயர்ச்சி தோன்றுவதில்லை. இவர் பாடலைக் கேட்பதில் அதியமானும் சலிப்படைவதில்லை. 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்பதை இவ்விருவர் களிடமும் தெளிவாகக் காணலாம். ஔவையார்,

அதியமான் அவையை நாடோறும் அலங்கரித்துவருவது டன், அவனுக்கு அறிவுத்துணையாயும் இருந்து வந்தனர். அதாவது: கல்வி புகட்டுவதுடன், நல்லறிவூட்டுவதும் அவர் செயலாக இருந்து வந்தன.

அதியமான்அஞ்சி, அரசியற்றுறையில் தாம் செய்யத்தொடங்கும் ஒவ்வொரு செயலையும், இவருடன் கலந்தே செய்து' வந்தான். ஔவையார், இவ்வளவு செல்வாக்குப் பெற்றிருந்த பொழுது காஞ்சி மாநக ரத்தை அரசாண்டு வந்த தொண்டைமான் என்னும் அரசன், தன்னைப் பெரிய ஆற்றலுடையவனாக எண்ணிய துடன், அதியமானஞ்சியைத் தன்னினும் மெலியவன் என்று கருதிச் சமயம் பார்த்துப் போரில் தாக்கச் சூழ்ச்சி செய்து வந்தான்.

தொண்டைமான், உள்ளக் கருத்தை யுணர்ந்த அஞ்சி, தன் வலிமை, தன் படைவலிமை, தனது உள்ளத் தின் பெருமிதம் இவற்றை ஒரு தூதுமூலம் தொண்டை மானுக்கு அறிவிக்கக் கருதினன் ; தூதுபோகத் தக்கவர் யாவர் என்று எண்ணினன்; அஞ்சா நெஞ்சமும், பிறர் உள்ளத்தை வசப்படுத்தும் நாவீறும், பாவன்மையும், அரசியலறிவும், பிறவும் வாய்ந்தவர் ஔவையாரே என்று துணிந்து ஔவையாரை அழைத்து அவனிடம் தூது போகும்படி, வேண்டிக் கேட்டுக் கொண்டனன். ஔவையாரும், நெஞ்சத்துத் துணிவுடையவராய் அப் பெருஞ் செயலில் பின்னடையாது தாம் போய் வருவ தாக ஒப்புக் கொண்டனர்.

அதியமானஞ்சி, தூதுவர்க்குரிய விருதுகள் பலவும் கொடுத்துப் பணியாளர்களையும் உடன் அனுப்பினன். ஔவையார், தன் நண்பன் அஞ்சியின் விருப்பப்படி

அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் சென்று காஞ்சி மாநகரை யடைந்தனர். அதன்பின், சிறிதும் தாமதிக்காமல் தொண்டைமான் அவையை அடைந்து, அவனை நேரில்கண்டார்; தான் அதியமானஞ்சியின் தூதாக வந்திருப்பதையும் அவனிடம் மொழிந்தனர்.

தொண்டைமான், சிறந்த புலவராயும், தூதராயும் வந்த ஔவையாரை வரவேற்று முகமன் மொழிந்து ஏற்ற ஆசனமளித்து வீற்றிருக்கச் செய்தான். ஔவையார், அவன் உபசரிப்பையெல்லாம் ஏற்றுக்கொண்டு அவன் அரண்மனையில் அன்று உணவருந்தி வழிவந்த களைப்பைத் தீர்த்துக் கொண்டு தங்கி யிருந்தார். பின்பு, தொண்டைமான், பகையரசரிட மிருந்து வந்துள்ள ஔவையாருக்குத் தன்னரண்மனைப் பெருவளங்களைக் காட்டவேண்டும் என்று கருதினன்.

தொண்டைமான், ஔவையாரை அழைத்துக் கொண்டு போய் ஒவ்வோரிடமாகக் காட்டிக் கொண்டே வந்து, தன் போர்க்கருவிகளின் மிகுதியையும், அவைகள் சீர்செய்து நிரல்பட வைத்திருப்பதையும் இவருக்குக் காட்டவேண்டு மென்று தனது ஆயுதச் சாலைக்கு அழைத்து வந்தான்; அங்கு சீர் செய்து, நெய்பூசி, உறைகளிலிட்டு, மாலைகள் சூட்டிப் பற்பல விதமாக அலங்கரித்து அணி அணியாய் வைத்திருக்கும் ஆயுதங்களின் தொகுதிகளையெல்லாம் காட்டினன். ஒருவர் உள்ளத்துக் கருத்துணர்ந்து பாடும் ஆற்றல் வாய்ந்தவரும், மிக நுண்ணறிவு அமைந்தவருமான ஔவைப் பிராட்டியாருக்குத் தொண்டைமான் உட்கருத்தை யுணர்தல் அரியதாகுமோ?

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்"

என்றபடி தொண்டைமான் கருத்தை முகக் குறிப்பால் உணர்ந்து இவன், மிக்க கர்வமுடையவனுகக் காணப் படுகிருன்; இவன் செருக்கை யடக்கி யறிவு கொளுத்தல் வேண்டுமென்று தமக்குள் நினைந்து அப்படைக் கலங் களைப்பார்த்து அவனை நோக்கி,

"இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்தி நெய்யணிந்து
கடியுடை வியனக ரவ்வே; அவ்வே
பகைவர்க் குத்தி கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ"

என்ருெரு பாவினைப் பாடி அவனுக்கு உணர்ச்சியுண் டாக்கினர். இப்பாடலில், "இப்படைக் கருவிகள்யாவும் போரில் பயன்படாமையால் மயிற்பீலியும், மாலையும் சூட்டப் பட்டுத் திரண்ட காம்புகள் செப்பனிடப்பட்டு நெய்பூசப்பட்டுக் காவலிட்டு அரண்மனைக்கண் ஒரு பயனின்றி வீணே வைக்கப்பட்டுள்ளன; தான் பெற்ற செல்வத்தைத் தான்மட்டும்நுகராமல் பலர்க்கும்பகுத்துக் கொடுத்துண்ணும் எம் அதியமானுடைய ஆயுதங்கள், பலமுறை போரில் பகைவரைத் தாக்கிக் கங்கும் நுனியும் முரிந்து, செப்பனிடக் கொல்லனது பணிக் களமாகிய சிறிய கொட்டிலை அடைந்திருக்கின்றன." என்ற கருத்துக்களை அமைத்து இவனுடைய படைக் கலங்களைப் புகழ்பவர் போல இகழ்ந்தும், அதியமான் படைக்கலங்களைப் பழிப்பவர் போலப் புகழ்ந்தும், குறிப்பு மொழிகளால் தொண்டைமானது போர்ப் பழக்கமே இல்லாத நிலைமையையும், அதியமானது ஓய் வின்றிப் போர் செய்து வரும் நிலைமையையும் எடுத்துக் காட்டித் தொண்டைமான் செருக்கை யடக்கினர்.

ஔவையார் கூறிய இம்மொழிகளைக்கேட்ட தொண்டைமான், மேலும் செருக்கடங்காதவனாய் ஔவையாரை நோக்கி, "எல்லாமுணர்ந்த எம்பெருமாட்டியே! அவ்வாறாயின் தங்கள் நண்பனான அந்த அஞ்சியின் நாட்டில் என்னோடு எதிர்த்து எதிர்நின்று போர்செய்யும் வலிமையுடையவரும் உளரோ?" என்று மிகவும் எளிமைதோன்ற வினவினான்.

அதற்கு அவர், "வேந்தே! இதுவரையில் ஒரு போர் முனையும் காணாத நீ போர்செய்யக் கருதி, எம் நாட்டின் மேல் படையெடுத்து வருவாயாயின், எம்முடைய நாட்டில் அடிக்குங் கோலுக்குச் சிறிதும் அஞ்சாது எதிர்த்துச் சீறிவரும் பாம்புபோன்ற ஆற்றலமைந்த இளையவீரர் பலருளர்; இத்தகையாரேயன்றி எங்கள் மன்றிடத்துத் தூங்கும் மத்தளத்தில் காற்றடித்தலால் உண்டான ஒலியைக் கேட்டவுடன் அது போர்ப்பறை என்று கருதிப் பெருமகிழ்ச்சி யடையும், போரில் பெரிதும் விருப்பமுடைய எம் தலைவனும் உள்ளான்" என்ற கருத்தமைந்த,

"எறிகோ லஞ்சா அரவி னன்ன
சிறுவன் மள்ள ருளரே யதாஅன்று
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்னும் என்னையு முளனே."

என்ற அழகான செய்யுளை அவன்முன் பாடினர். அதன் பின் ஔவையார், தொண்டைமான் மிகவும் அகங்கார முடையவன் என்றறிந்து, அவனைவிட்டுப் புறப்பட்டு அதியமானிடம் வந்து சேர்ந்தனர்; தான் தூதுபோய் வந்த செய்திகள் யாவையும், அதியமானிடம் கூறினர்.

பின்பு, ஔவையார் தகடூரில் அதியமானுடனிருந்து வரும்நாளில், திருக்கோவலூரை யாண்ட அரசனுன மலையமான் திருமுடிக்காரி என்பவன், பற்பல நாட்டரசர்களிடம் படை எடுத்துச்சென்று அவர்களைப் போரில் வென்றடக்கி வந்தான். இவ்வாறு இவன் பல மன்னர்களை வென்றபின் வீரச் செருக்குடையவனுய்ப் பெருமிதத்துடன் வாழ்ந்து வந்தான்.

அதியமானும் அத்தகைய வீரனுதலின், மலையமானது ஒப்பற்ற பெருமிதத்தைக் கேட்டு இவனைப் போரில் வெல்லக் கருதினன். அதியமானஞ்சி, அதற்காவன செய்துகொண்டு தன் படையுடன் சென்று திருக்கோவலூரை முற்றுகையிட்டான்.

அதியமான், படையுடன் வந்து மதிலை வளைத்தான் என்பதைக்கேட்ட காரிஎன்பவன், தானும்போர்செய்யப் படையைத் திரட்டிக்கொண்டு காரி என்ற தன் பெயரையேயுடைய தன் குதிரையில் ஏறிப் போர்க்களம் குறுகினன். அதியமானுக்கும், காரிக்கும் பெரும்போர் மூண்டது. இருவரும் மிக்க வீராவேசத்துடன் கடும் போர் செய்தனர். அதியமான் காரியைவிடப் பன்மடங்கு போர்செய்யும் திறமையுடையவனுதலால், தன் வாள் கொண்டு காரியின் படையை அழித்துவந்தான். காரியின் திறமையும், உடல் வன்மையும் அதியமான்முன் பயன்படவில்லை. நேரமாகவாக காரியின் படைகள் குறைந்துவரத் தொடங்கின. பற்பல உயிர்கள், வீணுக மடிந்துபோயின.

அப்பொழுது, அதியமானுடன் அங்கு உடன் சென்றிருந்த ஔவையார், அங்கு நடக்கும் போரில் அதியமானுடைய கடுங்கோபத்தையும், காரி படைகள் விரம்ப

அழிவதையும்கண்டார். உடனே அவர், இரக்கமடைந்து அதியமானுடைய ஆற்றலைக் காரியிடம் எடுத்துக்கூறி, கீழ்ப்படிந்து திறைசெலுத்தச்சொல்லி, இப்போரை இத்துடன் நிறுத்துவோம் என்று தமக்குள் எண்ணினர்.

ஔவையார், அருள் உள்ளமுடையவராய் மலையமான் திருமுடிக்காரியையும், அவன் படையிலுள்ள வீரர்களையும் நோக்கி, "அதியமானஞ்சி போர்செய்ய வந்து தன் உறையிலிருந்து உருவிய வாள், பகைவரது யாக்கையில் பதிந்து பக்கமும் நுனியும் தேய்ந்து தன் வடிவிழந்தன; அவனுடைய வேல்கள், குறும்பருடைய அரண்களை வென்று, அவர்களுடைய நாட்டையழித்தலால் காம்பும், ஆணியும் தளர்ந்து கெட்டன. இவன் பகைவருடைய கோட்டைக்கதவுகள், கணைய மரத்தால் தடுக்கப்பட்டுள்ளன. அதியமானுடைய யானைகள், அக்கதவுகளைக் குத்திப் பிளத்தலால் தம் தந்தங்களில் பூட்டியுள்ள பூண்கள் கழன்றன. அவன் குதிரைகள் போரில் பகைத்த வீரர்களுடைய மார்பு உருவழியும்படி ஓடி உழக்குதலால், இரத்தக் கறைதோய்ந்த குளம்புகளையுடையவாயின. அதியமான், கணக்கற்ற பெரும் படைகளையுடையவன்; கழல் வடிவாகவும், கிண்ணிவடிவாகவும் செய்யப்பட்ட பற்பல அம்புகள் துளைத்த கேடயம் உடையவன்; அவனால் கோபிக்கப்பட்டோர் போரில் பிழைத்து உயிருடன் போதல் அரிது; நீர்வள நிலவள மிக்க உங்கள் ஊர்கள், உங்கட்குரியவையாக வேண்டுவீராயின், அவனுக்குத் திறையை யளத்தல் வேண்டும்; என் சொற்படிச்செய்யாமல் திறை செலுத்த மறுப்பீராயின், உங்களை உங்கள் விருப்பப்படி நடந்துகொள்ள அவன் ஒருபொழுதும் விடமாட்டான். அவன் அளவற்றஆற்றலைநான்உள்ளவாறுஉரைத்தேன்; அதனை

நீங்களறியாமல் மேலும் போர்செய்ய நினைப்பீராயின், நீங்கள் அழகுபட, நன்கு வகிர்ந்த கூந்தலையுடைய உங்கள் மனைவியரை விட்டுப் பிரிதல் உறுதியாகும். ஆதலின், உங்கள் உறுதிப்பொருள் யாதென்று ஆராய்ந்து செய்மின்" என்று அதியமானுடைய பெரிய வீரத்தை விளங்க உரைத்தார். இவ்வாறு பகைவர் மீதும் அருள்மிகுந்த அம்மையார் அறிவுரைகளை அப்பகைவர் பொருட்படுத்தாமல் மீண்டும் போர்செய்தனர்.

போர் பெரும் போராகி யளவுகடந்த நிலையை யடைந்தது. காரி, பெரிதும் வெற்றியடைய விருப்பமுடையவன் ஆதலின், தன்னுயிருக்கும், பிறஉயிருக்கும் தீங்குவருவதைப் பொருட்படுத்தாமல் கடும்போர் செய்தான். அஞ்சியும் ஓபாமல் தன் வாள் கொண்டு காரியின் படைகளை வெட்டி வீழ்த்தினன்; முடிவில் காரி அஞ்சியிடம் போர்செய்ய அஞ்சிப் புறங்கொடுத்து ஓடினன். அவனுடைய படைகளில் அழிந்தன போக, மிகுந்துள்ளவை அச்சத்தால் நிலை கலங்கிக் கலைந்தோடின. அதியமான்போரில் வெற்றியடைந்து வெற்றி முரசை முழக்கினன்; கோவலூரை அதியமான் கைப்பற்றிக் கொண்டான். அவன் வெற்றியைப் பரணர் என்னும் புலவர் பெருமானும், ஔவையாரும் பலவாறு வியந்து புகழ்ந்தனர்.

ஔவையார், அப்பொழுதடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை; அவர் தம்முள்ளத்தில் எழுந்த பேருவகையை அதியமானிடம் தெரிவிக்க அவன்முன் வந்து அவனை நோக்கி "வெற்றிவீரனே! உன் முன்னோர்கள் தேவர்களைப் போற்றி வழிபட்டவர்; பற்பல வேள்விகள் செய்து விண்ணோரை மகிழ்வித்தவர்; பெறுதற்

கரிய கரும்பினை விண்ணுலகத்திலிருந்து மண்ணுலகத்திற்குக் கொணர்ந்தவர்; வீரக்கழலினையும், பனந்தாரினையுமுடைய நெடிய வேலேந்திய வீரர்; நீயும் உன் முன்னோரைப்போன்ற பெரிய சிறந்த வீரன்; சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்ற ஏழரசர்க்குரிய இலச்சினையைப் பெற்றவன்; பிறரால் நீக்கமுடியாத அரச உரிமையையுடையவன்; நீ மேற்கூறிய ஏழரசரையும் வென்ற அந்நாளிலும் உன் வெற்றியைப் பற்பல புலவர்கள் தம் வாயாரப் புகழ்ந்தனர். திருக்கோவலூரைக் கைப்பற்றிய இன்றும் உன்னுடைய வெற்றித் தெய்வம் வீற்றிருந்த இருதோள்களைப் பெரும்புலவனுைபரணன், தன் சிறந்த கல்வி முழுதும் தோன்ற மிகவும் அழகாகப் பாடினன்," என்று தாம் ஒரு செய்யுள்பாடி அதியமானஞ்சியைப் பெரிதும் மகிழ்வித்தனர்.

இவ்வாறு அதியமான், வென்று கோவலூரைக் கைக்கொண்டவுடன், சில நாள் கோவலூரில் தங்கித் தன்னாட்சி செலுத்தினான். ஒரு நாள் அங்கிருந்து புறப்பட்டு ஔவையாருடன் தகடூரை யடைந்தான். அப்பொழுது நெடுநாளாக மகப்பேறில்லாதிருந்த தனக்கு அருமருந்தன்ன அரிய மகன் பிறந்திருக்கின்றான் என்று அறிந்தான். அவ்வளவில் அவனடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. மகன் பிறந்ததும் தந்தை அம்மகவின் முகத்தைக் காண்பது மரபாதலின், அஞ்சியும், தனது போர்க்கோலம் களையாமலே அந்தப்புரமடைந்தான்; பச்சைப் பசுங்குழவியின் மலர்ந்த முகத்தைக்கண்டு அளவிலா மகிழ்ச்சியடைந்தான். ஔவையாரும், அதியமானுடன் சென்று அக் குழந்தையைப் பார்த்தார்;

அத்துடன் அவர் அதே சமயத்தில் அஞ்சியையும் நோக்கி அவனிருந்த நிலையைப் பின் வருமாறு கூறுகிறார்.

அஞ்சியின் கையில் உள்ளது வேல்; காலிலணிந் துள்ளது வீரக்கழல்; உடம்பிலெங்குமுள்ளதுவியர்வை; கழுத்தில் பகைவர் படைதைத்த ஈரம் புலராத பசிய புண்கள் இருக்கின்றன; தலையில் பனந்தோடும், வெட்சி மலரும், வேங்கைப் பூவும் இருக்கின்றன; பகைவர்களை வெகுண்டு நோக்கிய கண் தம் அரும்புதல்வனைப் பார்த்த பின்பும், அதன் சிவப்பு நீங்கவில்லை; ஆதலால், இவனது வெகுளிக்காளான பகைவர் பிழைத்தலும் உண்டோ? என வியந்து, அதியமானது வீரப்பொலிவைப் பாராட்டி யுரைத்தனர்.

அதியமான் தான் மகப்பேறு அடைந்ததற்காகத் தன்னாடு முழுதும் அலங்கரித்துக் கடவுளருக்குத் திரு விழாக்கள் நடத்திப் பெரிதும் மகிழ்ச்சியுடன் கொண் டாடினன். புலவர்களும், இரவலரும் நிரம்பப் பொன் னும், பணியும், ஆடையும், அணிகளும் பெற்று உவந் தனர்.

தகடூரில் அதியமான் இவ்வாறு பெருமகிழ்ச்சியில் திளைத்திருக்கும்பொழுது இவனால் வெல்லப்பட்டுத் தன் கோவலூரை இழந்த மலையமான் தான் இழந்த ஊரை எவ்வாறாயினும் மீண்டும் பெறஎண்ணிஅதற்கானதுணை தேடி யலைந்தான். முன்பு பல முறையும் தான் சென்று போரில் உதவி புரிந்துவந்த பெருவீரனான **சேரமான் பெருஞ்சேரலிரும் பொறை** என்னும் சிறந்த அரசனை யடைந்தான்; அவனிடம் தானடைந்த நிலையை எடுத் தியம்பித் தனக்குத் துணைபுரியுமாறு வேண்டினன். அவன், இவனிடம் நாம் பன்முறை போரில் உதவி பெற்

றுள்ளோம்; இவன் இதுவரையில் நமக்குச் செய்துள்ள நன்றியை நாம் ஒரு நாளும் மறப்பதற்கில்லை; என்று எண்ணி அவ்வாறே துணைபுரிய வருவதாக ஒப்புக் கொண்டான்.

அதன்பின், சேரமான், பெரும்படையோடு புறப் பட்டான்; புறப்பட்ட அவன், மலையமானை நோக்கி, கொல்லி மலையை ஆண்டு வரும் வல்வில்லோரி என்னும் வள்ளலை முதற்கண் வென்று அம்மலையைக் கைப்பற்ற வேண்டுமென்று உரைத்தான். மலையமான் அவ்வாறு போரிட உடன் பட்டனன். இருவரும் படையொடு சென்று கொல்லி மலையை வளைத்தனர்.

அப்பொழுது வல்வில்லோரி, தனக்கு உதவி புரியு மாறு அதியமானை வேண்டினன். அதியமான், தன் பகையையடக்க இதுவே சமயமென்றெண்ணித் தன் நட்பரசர்களாகிய சோழ பாண்டியர்களுக்குச் செய்தி சொல்லியனுப்பி, அவர்களையும் படையோடு வரும்படிக் கேட்டுக் கொண்டான். அதியமான் கருத்தின்படி அவர்களிருவரும் தம் படையோடு வந்தனர். அதிய மான் தம் படையோடு புறப்பட்டுச் செல்லும்பொழுது, துணைபுரியவந்த சோழபாண்டியர்களையும் அழைத்துக் கொண்டு கொல்லிமலையை யடைந்து ஓரியுடன் சேர்ந்து கொண்டான்.

அப்பொழுது சேரமானும் மலையமானும் ஒரு புறம் நிற்க, மற்றொருபுறம் சோழபாண்டியரும் அதியமானும் நிற்க இருதரத்தினும் கைகலந்து பெரும்போர் விளைந் தது. பெரும் படைகளுடன் பெரிய பெரிய வீரர்கள் தம் திறமைகளை முழுதும் காட்டிக் கடும்போர் புரிந் தனர். ஆயினும், பெரும் திறல் படைத்த பெருஞ்சேர

யிரும்பொறை, சோழபாண்டியர்களையும், அதியமானை யும் முறிய அடித்துத் துரத்தி விட்டான்; ஓரியைப் போரில் கொன்று வீழ்த்திக் கொல்லிமலையைக் கைப் பற்றிக் கொண்டனன். அப்போரில் தோற்றேடிவந்த அதியமான், *தகடூரில் தன்மதிலினுள் மறைந்து கொண் டான்.

கொல்லிமலையைக் கைக்கொண்ட பெருஞ்சேரல் இரும்பொறையும், மலையமானும் தம் படையோடு புறப் பட்டுச் சென்று தகடூர்மதிலை முற்றுகை யிட்டனர். அதியமான் புறத்தில் வந்து போர் செய்யாது கதவடைத் துக் கொண்டு மதிலுளிருந்தனன். அப்பொழுது ஔவை யார், பகைவர்களோ பெருமிதங்கொண்டு மதிலை வளைத்துள்ளனர்; அதியமானே, வெளியில் வந்து போரிடாமல் உட்புறத்திலேயே தங்கி யிருக்கின்றான்; இப்பொழுது நாம் வாளா இருத்தல் தக்கதன்று; என்று எண்ணி, அதியமானுக்கு அவனது பேராற்றலை யுணர்த் திப் போரில் மனம் செல்ல ஊக்கமூட்டக் கருதி, அவனி ருக்குமிடத்தை யடைந்து அவனை நோக்கி, "மலையை யடுத்து அதன் குகையில் வாழும்புலி சீறுமாயின், அதனை எதிர்த்து நிற்கவல்ல மான் கூட்டமும் உண்டோ? சூரியபண்டலம் ஒளிவீசி எழுமாயின் உலகில் இருள் முன்னிற்க வல்லதோ? மணல் பரக்கக் கல்பிளக்க நடக்க வல்ல பகட்டிற்கு அரிய துறைகளு முண்டோ? இல்லை யல்லவா? அவைபோல் பெருவீரனான நீ போர்க்களம் புகுந்தால் உன்னை எதிர்த்துப் போரிடவல்ல வீரருமுண் டோ?" என்று ஊக்கம் மிகும்படி யுரைத்தனர்.

ஔவையார் கூறிய துணிவுடைய மொழிகளைச் செவியிலேற்ற அதியமான் போர்க்கோலம் கொண்டு

மதிற்புறத்தே தோன்றினன்; கண்கொண்டு காணமுடியாதபடி பெரும்போர் செய்தான்; அந்த அமரில் பகைவர் எய்த அம்புகள் அவன் உடலில் பற்பல இடங்களில் தைத்துப் பெரும் புண்களையுண்டாக்கின; இறுதியில் சேரமான் விட்டவேல் ஒன்று மார்பிற்பாய அதியமான் விண்ணுலகடைந்தான்.

இந்த நிலையை நேரில் கண்ட ஔவையார், அடைந்த துயரத்திற்கு அளவே இல்லை; அதியமானுடன் நெடுங்காலம் உடனிருந்து பழகிய அவர் அவனது குணநலங்களைப் பலவாறு சொல்லிப் புலம்பினர். "அதியமான் பெருங் கொடையாளனாக இருந்து உணவைப் பலருக்கும் வழங்கியவன்; அன்புடன் என் தலையைத் தன் கையால் தடவி நலம் விசாரிக்கு மியல்பினன்; எம் ஆருயிர் நண்பனான அதியமான் மார்பில் தைத்த வேல், அவன் மார்பில்மட்டும் தைத்து நீங்கிவிடவில்லை; பாணரது பிச்சைப் பாத்திரத்தைத் துளைசெய்தது; இரவலர் கையைத் துளையிட்டது; புலவர் நாவையும் துளைத்துருவியது; எமக்கு மிக ஆதரவாக இருந்த எம்பெருமான், இப்பொழுது எங்கு சென்றனனோ அறியேன்! பெருவள்ளலை இழந்தேன்; இனி இத் தமிழகத்தில் பாடுவோருமில்லை; பாடுவோர்க்கு ஒன்று ஈவோருமில்லை" என்று இவ்வாறெல்லாம் சொல்லி மிகவும் வருத்தப்பட்டனர்; அவன் புகழைப் பாராட்டிக் கண்ணீர் விட்டனர்; அதியமானுக்கு நடத்தவேண்டிய ஈமச்சடங்குகளைத் தான் உடனிருந்து நடத்தினர்.

அதியமான் மகனான பொகுட்டெழினி என்பவன் தந்தையிறந்தபின் அரசனாக முடிசூடி நாட்டையாண்டு வந்தான். ஔவையார், அவனை நல்லமுறையில் நடத்தி

வந்தார். ஔவையார், பாரி மகளிரைக்கண்டு தம் தந்தையை இழந்து வறிய நிலையிலிருந்த அவர்க்கு ஆறுதல்மொழிகளைக்கூறி அவருடன் பலநாள் தங்கியிருந்து அவர்கட்குத் திருமணத்தை முடித்துவைத்தனர்.

இவ்வாறு ஔவையார், கல்விச் சிறப்பானும், ஒழுக்க மேம்பாட்டானும் தமிழ்நாட்டிலுள்ளார் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு அவர்கட்குத் தீந்தமிழில் ஆர்வமுண்டாகப் பல பைந்தமிழ்ப் பாக்களைப் பாடினர். இத்தகைய தமிழ்ப்புலமை வாய்ந்த பெண்மணிகள் நம் தமிழகத்தில் தோன்றி நம் நாட்டையும் மொழியையும் முதன்மையடையச் செய்தால்தான் தமிழ் மக்களாகிய நாம், நன்னிலையை யடையலாம்.

---

## 2. புகழ்வேண்டாப் புரவலன்

தமிழுலகம் ஈகைக் குணமுடையவரை என்றும் கொண்டாடும். இந்த ஈகைக்குணம் மக்கட்குப் பிறவிக் குணம் என்ப. திருவள்ளுவர், ஈதல் இசைபட வாழ்தல் என இருதொழில்களே மக்கட்குச் சிறந்தன என்பர்; இவற்றுள்ளும் இசைபட வாழ்தலைப் பிற்கூறி ஈதல் என்ற தொழிலை முற்படக் கூறியதனால் இதன் சிறப்பு நன்கு விளங்கும். பண்டைத் தமிழ்மக்கள் பலருக்கும் ஈதலில் ஒரு தனிப்பட்ட மகிழ்ச்சியிருந்தது. இதனை நாம் பழைய தமிழ் நூல்களில் பரக்கக்காணலாம்.

நம் முன்னோர், வறிஞருக்குப் பொருளீந்துவந்த கொடையாளர்களை வள்ளல் என்று பெயரிட்டழைத்தனர்; இந்த வள்ளல்களை முதல்எழுவள்ளல்கள், இடைஎழுவள்ளல்கள், கடையெழு வள்ளல்கள் என்று மூன்று வகையாகப் பிரித்திருந்தனர். கடையெழு வள்ளல்களின் வண்மையை நாம் சங்கநூல்களில் எங்கும் காணலாம். கடையெழு வள்ளல்களின்பெயர்கள்: பறம்பிற்கோமான் பாரி, கொல்லியாண்ட வல்வில்லோரி, மாரி ஈகைமறப் போர்மலையன் காரி, கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி, இவனை அதியமானஞ்சி என்பர், பெருங்கல் நாடன் பேகன், திருந்துமொழி மோசிபாடிய ஆய், கொள்ளார் ஓட்டிய நள்ளி என்பன.

இங்குக் குறிப்பிட்டுள்ள கடையெழு வள்ளல்கள் கொடையில் தலைசிறந்து விளங்கிய குரிசில்களாவர். இவர்கள் அருஞ் செய்கைகளைப்பற்றித் தனித்தனி ஒவ்வொரு நூல் எழுதத்தகும். ஆயினும், இங்கு ஏழாவ

தாக இறுதியில் குறிப்பிட்ட நள்ளியினருங்குணத்தைப் பற்றிப் பெருஞ்சித்திரனார் என்னும் புலவர்பெருமான்,

........................."ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவு நனிதீரத்
தள்ளா தீயும் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியும்"

என்று பாராட்டி வுரைந்துள்ளார். இப்பாடற் பகுதியின் பொருள்: நள்ளி ஆசைப்பட்டுத் தன்னை நினைந்து வரும் வறிஞர் வறுமைகெடத் தவிராமல் கொடுக்கும் வண்மையுடையவன்; பகைவரைத் துரத்தியோட்டும் வீரமுடையவன் என்பதாம்.

இரவலர் தம்மில்லத்தினின்றும் புறப்படும்பொழுதே நள்ளியிடம் சென்றால் நாம் தக்க பரிசில் பெறுவோம் என்று நினைந்து வருவாரென்றால், இவன் கொடைக் குணம் நன்கு விளங்குகின்றது. மக்கள் பிறப் பெடுத்த ஒவ்வொருவரும் பிறர்க்குப் பயன்படும் முறையில் தம் வாழ்க்கையை நடத்துதல் வேண்டும். சிலர் தம்மைத்தாம் நன்கு பாதுகாத்துக்கொண்டு பிறர்க்குச் சிறிதும் பயன்படாதவராய் நிலத்திற்குச் சுமையாக இருந்துவருவர். இவர்கள் புகழைச் சிறிதும் அடையாத உலோபிகள் என்று அழைக்கப் படுவர். பிறர்க்குப் பயன்படும் வாழ்க்கையினரை மூவுலகும் போற்றும். இக்கருத்தை நாம் நாலடியார்ச் செய்யுள் ஒன்றில் காணலாம்.

"கடிப்பிடு கண்முரசங் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்
அடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படுஞ் சொல்"

முரசம் அடித்தால் ஒருகாதம்வரையில் கேட்கும்; மேகம் இடித்தால் ஒரு யோசனைதூரம் கேட்கும்; சான்றோர் கொடுத்தார் என்று கூறும் புகழ்ச்சொல் மூவுலகமும் கேட்கும் என்கிறார்.

இவ்வாறு மூவுலகமும் கொண்டாடும் கொடையிற் சிறந்த கோமான் நள்ளி என்பவனைக் கண்டீரக்கோப் பெருநள்ளி என்றும், கண்டிற் கோப்பெருநள்ளி என்றும் கண்டிற் கோப்பெரு நற்கிள்ளி என்றும் அழைப்பர். இவன் தோட்டி என்னும் மலைக்கும், அதனைச்சார்ந்த மலைநாட்டிற்கும், காட்டுநாட்டிற்கும் தலைவன். இவனைப் பாடிய புலவர்: வன்பரணர், பெருந்தலைச் சாத்தனார் என்ற இருவருமாவர்.

சிறுபாணாற்றுப்படையிலும் அதன் ஆசிரியர் நத்தத் தனார், இவனைப் பாராட்டிப் புகழ்ந்து கூறியுள்ளார். அவர் அங்குக் கூறியுள்ள புகழ்மொழி யாவை எனில், தன்மனத்து நிகழ்கின்றவற்றை மறையாது கூறி நட்புச் செய்தோர் மனமகிழும்படி அவர்கள் இல்லறம் நடத்து தற்கு வேண்டும் பொருள்களை நாடோறும் கொடுத்து வரும் நள்ளி என்று கூறுகிறார். மேலும் அவர் போர்க் களத்தில் கொலைத்தொழிலால் விளங்கும் பெருமையை யுடைய கையினையுடையவன் என்றும், துளியையுடைய மழை, பருவம் பொய்யாமல் பெய்யும் உயர்ச்சியுள்ள காற்றுத்தங்கும் நெடிய சிகரங்களையுடைய மலைநாட்டை யுடையவன் என்றும் நள்ளியைப் புகழ்ந்து கூறுகின்றார். அச்செய்யுள்:

..............................“கரவாது
நட்டோ ருவப்பநடைப் பரிகாரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்

துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும்"

என்பதாம்.

வன்பரணர் என்னும் புலவர், புறநானூற்றில் ஒரு பாடலில் இவனைநோக்கி இயம்புவதாகக்கூறும் கூற்றில் "உன்னைப் பாடிப் பரிசில் நிறையப் பெற்றுவிட்ட படியால் உன்னைப் பாடிய எமதுநா பிறமன்னர் குணங்களைக் கூறுதலை அறியாததாயிற்று" என்று பாடியுள்ளார்.

இதனால், இவ்வள்ளல் புலவர்கள் வறுமைகெட வழங்கும் பெருங்கொடையாளன் என்பதும், புலவர்கள் இவனிடம் நிரம்பப் பரிசில் பெற்றுவிட்டபின் பிறரிடம் செல்லவேண்டிய குறையிராது என்பதும் நன்கு புலனும்.

இந்த வள்ளல் நள்ளி, நிரம்பக் கொடுப்பவன் என்பதை வேறொரு பாடலால் வேறொரு வகையில் கூறுகிறார் வன்பரணர். அப்பாடலின் கருத்துவருமாறு: அக்காலத்து மக்கள் பாடகரைப் பாணர் என்றழைப்பர். அப்பாணர்கள் பலரும் இவ்வள்ளலிடம் சென்று தம் வறுமைநிலை ஒழிய நிரம்பச் செல்வம் பெற்று விட்டபடியால் யாழை அவர்கள் கையில் எடுப்பது மில்லை, அவர்கள் அதைக் கையில் எடுத்துப்பாடாமையால் எந்தெந்தக் காலங்களில் எந்தெந்தப் பண்ணை வாசித்தல் வேண்டும் என்பதையும் மறந்தனர். இந்த நிலையை அடைந்த அப்பாணர் ஒரு நாள் யாழைக் கையில் எடுத்தனர்; எடுத்து மாலையில் மருதப்பண்ணை வாசிக்கத் தொடங்கினர்; காலையில் செவ்வழிப் பண்ணைப்பாடத்

தொடங்கினர். இவ்வாறு மாறுபட வாசிக்க நேர்ந்ததற்குக் காரணம், இந்த வள்ளல் நள்ளியின் பெருங்கொடையேயாகும். பாணர்கள் நாடோறும் பொருள் தேடவேண்டியிருந்தால் பாடிப் பாடிப்பழகுவர். அவர்க்குப் பொருள்தேட வேண்டிய அவசியமே இல்லாமல் போகவே யாழ் வாசிப்பதை அடியோடு மறந்து விட்டனர் என்று தெரியவருகின்றது.

இங்ஙனம் கொடையிற்சிறந்தகோமான், வேட்டை நாய்களும் வேடுவரும் சூழ்ந்துவரும் வேட்டை விருப்பினனாய்க் கானகம் புகுந்தான். காலையில் கானகத்துட் புகுந்தகாவலன் கொடிய விலங்குகளை வில்லால் எய்து விளையாடி வந்தான். இவ்வித வேட்டை விளையாட்டில் குறுநில மன்னர்க்கும் முடியுடை வேந்தர்க்கும் நிரம்ப விருப்பமுண்டு.

“அரிபடுத்துக் கலையினங்கள் தம்மைவாட்டி
ஆமாவும் மரையினமும் அதிரவோட்டிக்
கரிசெறுத்துச் சிவல் முதலாம் பறவைக்காதிக்
கான்முழுதும் பொடியாக்கித் திரியும் காலை”

என்றபடி அவ்வேந்தர்கள் வேட்டையாடும் பொழுது சிங்கங்களைக் கொன்று போடுவர்; ஆண்மான்களை ஆலையப் பண்ணுவர்; ஆமா என்னும் காட்டுப் பசுவையும் பெண்மானையும் அவ்விடம் விட்டோடச் செய்வர்; யானைகளை யழித்து விடுவர்; கவுதாரி முதலிய பறவைகளை யடித்து வீழ்த்துவர்; என்று கூறப்பட்டிருத்தலால் வேட்டையாடுவதிலும் விதியுண்டு என்பது, தெரிய வருகின்றது. கொடிய விலங்குகளைக் கொன்று போடுவதும், தீங்கு புரியா விலங்குகளை அதிர அப்புறம் ஓட்டிவிடுவதும், பெண் விலங்காயின் கொல்லாமல்

விட்டுவிடுவதும் வேட்டையாடுவதின் விதி என்று தெரிய வருகின்றது.

இவ்வாறு நம் நள்ளியும் முறையே அக்கானகம் முழுதும் வேட்டையாடி வந்தான். அவனுடன் வந்த வேட்டுவரும் அவன் உள்ளக் கிளர்ச்சிக் கேற்ப உடனாக இருந்து அத் தொழிலைப் புரிந்து வந்தனர். பெரிய விலங்குகளையும் மான்கணங்களையும் நெடுநேரம் வரையில் வேட்டையாடி நண்பகல்வர அத்தொழிலை நிறுத்தித் தான் வந்தவழியே திரும்பினன்.

திரும்பி இவன் வரும் வழியில் நல்ல நிழல் உள்ள ஒரு பலா மரத்தடியில் மிக்க வறுமையுடைய ஒரு புலவன் தங்கி யிருந்தான். அந்தப் புலவனே யான் என்று தன்னை வன்பரணர்கூறிக்கொள்ளுகிறார். அந்தப் புலவனிருந்த நிலையைப் புறநானூற்றுச் செய்யுள் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

அப்புலவன் ஆடை பருந்தினது கரிய சிறகையொத்துப் பல துண்டாகக் கிழிந்திருந்தது; பற்பல ஊர்கள் தோறும் நடந்து ஓய்ந்து இளைத்த கால்களையுடையவனாக அவன் காணப்பட்டான். வறுமைக்கிருப்பிடமான இப்புலவன் கண்ணெதிரே நம் வள்ளல் மானினங்களை வேட்டையாடிய பொழுது தெறித்த இரத்தக் கறையுள்ள வீரக்கழல் அணிந்த காலினையும், அழகிய நீலமணி விளங்கும் உச்சியையும், கையில் கட்டமைந்த வில்லினையுமுடையவனாய்த் தோன்றினான்.

ஆங்கு பலா மரத்தினடியில் அமர்ந்திருந்த புலவன், அச்செல்வத் தோன்றலைப் பார்த்தவுடனே கைகுவித்து வணங்கியபடியே எழுந்தனன். அவ்வாறு பெருமதிப்பளித்து எழுந்தவனை இவ்வள்ளல் கண்டனன்.

புலவன் மிக்க வறுமையுடையவனுகவும், வழிநடந்த களைப்புடையவனுகவும் காணப்பட்டான். அவன் நிலையைக் கண்ட நள்ளி, அப்புலவனைக் கைகவித்திருக்கும்படிப் பணித்தனன். புலவன், அப்பெருந்தகையாளன் மொழியை மறுக்க வொண்ணுது இருந்தனன்.

வள்ளல் நள்ளி, அப்புலவரது வறுமையடைந்த நிலையைக் கண்டு மிகவும் வருத்தப்பட்டான்; பின்பு, தனக்குள் எண்ணுவதாவது: "இறைவன் நன்கு புலமையடைந்த இப்புலவரை இவ்வளவு பெருஞ் சுற்றத்துடன் மிக்க வறுமை நிலையில் வைத்திருப்பது என் உள்ளத்தை மிகவும் வருத்துகின்றது; ஒரு துணி பல துணியாய் அழுக்குமலிந்த இவ்வாடையும், பசிமிகுதியால் வருத்தமுற்ற இவர் முகமும் இன்று யான் காண நேர்ந்ததே! முதன் முதல் இவர் பசியைத் தணிக்க வழி தேடுவேன்" என்று அவ்வள்ளல் முடிவு செய்தான்.

உடனே அப்பெருந்தகை தான் வேட்டையாடிக் கொணர்ந்த நெய்யிழுது போன்ற வெண்மையான நிணம் நிரம்பிய ஊனை வதக்கித்தர எண்ணினன். அப்பொழுது நள்ளி, தன் வேலையாட்களைக் கொண்டு அவ்வாறு ஊனைப்பக்குவம்செய்துதர, 'அவர்கள் வழிமயங்கி அலைகின்றனர்; எப்பொழுது வருவாரோ? நாம் உடனே இவரது பெரும் பசியைத் தணிக்க முயல வேண்டு' மென்று எண்ணினன்.

வள்ளல் தான்கருதியபடியே கடிதாகத் தன் கையால் கடைந்தெடுத்த நெருப்பில் தானே ஊனைப் பக்குவமாகச் சுட்டெடுத்து இலைப்பரிகலத்தில் வைத்துப் புலவரை அருகிலழைத்தனன்; அவர் முகம் நோக்கி, "நீவிர் நும் சுற்றத்துடனிருந்து பசிதீர இதனை அருந்து

வீர்" என்று வேண்டிக் கொண்டனன். இங்கு நம் வள்ளல் உள்ளப் பாண்மை எத்தகையது என்று எண்ணிப் பாருங்கள்.

புலவர் பெருமான், தம் பொருட்டு அப்பெருந்தகை அரிய அடிசிற்றொழில் புரிந்து அமைத்துக் கொடுத்த அமுதினும் இனிய ஊனைத் தன் சுற்றத்தாருடன் அருந்தினன்; தன் வயிற்றில் சுடும்பசி தீர்ந்து பெருமகிழ்வடைந்தனன்; மரம் நெருங்கிய குளிர்ந்த மலைச் சாரலில் தாழ்ந்து ஓடிவரும் அருவி நீரை அகங்குளிரப் பருகினன். இவ்வாறு பசி ஆறிய பின்பே உலகத்துப் பொருள்கள் புலவன் கண்ணிற்குத் தோன்றின; பசிப் பிணியின் ஆற்றல் முழுதும் நன்கு உணர்ந்த அப்புலவன், "என்னே! பசியின் கொடுமை! என்னே! வறுமையின் வஞ்சம்!! இப்பசிக்கு இவ்வளவு வலிமையுண்டு என்பதை,

"மானங் குலம் கல்வி வண்மை யறிவுடைமை
தானம் தவம் முயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம்"

என்ற உணர்ச்சிமிக்க செய்யுளால் உணரலாம். இவ்வாறு என்னை வருத்திய இப் பசிப்பிணிக்கு மருத்துவனாய் இப் பெருந்தகை இங்குவந்து தோன்றி, அதைப் பறந்து போகும்படிச் செய்தருளினன்" என்று பெருமகிழ்ச்சியை யடைந்தனன். அதன்பின், இப் புலவன் விடைபெற விரும்பும் பொழுது புலவனிடம் வள்ளல் வந்து, "ஐய! தற்பொழுது காட்டிலிருப்பதால் யான் விரும்பிய பொருள்கள் எல்லாம் தங்கட்குக் கொடுக்க முடியாதவனாக இருக்கிறேன்" என்று சொல்லித் தனது மார்பில்

அணிந்திருந்த முத்து வடங்களையுடைய ஆரத்தையும், முன்கையிலணிந்திருந்த கடகங்களையும் கழற்றிப் புலவ னிடம் கொடுத்தனன்.

அவ்வளவில் புலவன் வள்ளலைப் பார்த்து, "தங்கள் நாடு எது?" என்று வினவினன். அதற்கு வள்ளல் தம் நாட்டின் பெயரைக் கூற உடன்படவில்லை. உடனே "நும் பெயர் யாது?" என்று மீண்டும் புலவன் ஆவ லுடன் வினவினன். அப்பொழுதும் வள்ளல் வாய் வாளாதிருந்தனன். இவ்வாறு புலவன் வினவ, வள்ளல் வாளாதிருக்கக் காரணம் யாதெனில், தன்னுடும் பெயரும் அறிந்ததும் புலவன் தன்னைப் புகழத் தொடங்கி விடு வான் என்று பேசாதிருந்தனன். நள்ளி தன்னைப் பிறர் புகழ்வதை விரும்பாதவன்; பொருள் கொடுத்துப் புகழ் பெறும் வாணிகத் தொழிலில் வெறுப்புள்ளவன்; ஆத லின் புலவன் வினுக்களுக்கு விடை சொல்லாமல் அவ் விடம் விட்டகன்றனன். விடை கூருததுடன் அவ் விடம் விட்டு விரைவில் அவ் வள்ளல் கண் மறையச் சென்றனன். இந் நிகழ்ச்சி கண்ட புலவர் தனக்குள் ஆழ்ந்து எண்ணித் தன் சுற்றத்தாரை நோக்கி, "இவ்வள் ளல் வரையா ஈகையும், புகழ் விரும்பாமையும் கவனித் தீர்களா! எவ்வளவு உயரிய நோக்கமும், பரந்த உள்ளமு முடையவராக இவர் விளங்குகிருர்! ஆலயம், மடம் முதலியவற்றைக் கட்டுவோர் அவற்றின் வாயிற்புறத்தில் கல்லில் தம் பெயரைப் பெரிய எழுத்தில் வரைந்து வைக்கின்றனரல்லவா? சிலர் சிறிது பொருள் கொடுப் பினும் தாம் கொடுத்ததாகப் பிறரிடம் விளங்கத் தாமும் உரைத்துப் பிறரையும் உரைக்கும்படித் தூண்டுகின் றனரே! இவர் உணவு வேண்டுமென்று நாம் இவரைக்

கேளாதிருந்தும், இவரே உணவைத் தம் கையால் பக்குவம் செய்து உதவினர்! எங்கட்கு ஏதேனும் பொருள் உதவுவீர் என்று வினவாதிருந்தும் ஆரத்தையும், கடகங்களையும் கழற்றி உதவினர்.

"இலனென்னும் எவ்வ முரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள"

என்ற குறளில் கூறியுள்ள குலனுடையான் இவனே யன்றோ? இவ்வாறெல்லாம் தானே முன் வந்து கொடுத்த கொடையாளன், சிறிதும் புகழை விரும்பாமல் விரைந்து ஏகியதை எண்ணிப் பார்த்தால், இத்தகையாளனை நாம் இனி எங்குக் காணமுடியும்? வள்ளல்களில் இவனை ஒப்பாரை யாம் இவ்வுலகில் காண்டல் அரிது.

இனி நாம் இவ்விடம் விட்டுச் செல்வோம்" என்று மொழிந்து கொண்டே எழுந்து நடந்தனன். அவ்வாறு நடந்து போம்பொழுது, புலவன் எதிர் வந்தவரை வினவி, அவ் வள்ளலை நள்ளி என்றும், அவன் தோட்டி என்னும் மலையையும், அம்மலையைச் சார்ந்த நாட்டையும் ஆளும் அரசன் என்றும் அறிந்து கொண்டான். ஒரு வறிஞன் புதையல் கண்டதுபோல் நள்ளியின் பெயரை யறிந்ததும், அவனைத் தன் கையிலுள்ள யாழில் இசையுடன் புகழ்ந்து பாடத் தொடங்கினன்; தன்னுடன்வரும் சுற்றத்தாரையும் பாடச்சொல்லினன்; அவர்களும், இவன் கூறுமுன்னமே மனமகிழ்ந்து தம் வாயார நள்ளியின் வண்மையைப் புகழ்ந்து பலவாறு பாடியாடினர்.

புகழை யான் விரும்பேன் என்ற கருத்துடையாரையே உலகம் பலவாறு புகழ்ந்து கொண்டாடும்

என்பது, நாம் கண்கூடாகக் கண்ட உண்மையல்லவா? இரணியனைப்போல் என்னைப் புகழ்ந்து' பேசாவிடின் உங்கள் வாழ்வு கெடும் என்று வலிந்து கூறிக்கொள் வோரை நேரில் அவர் சொல்லுக்காகப் புகழ்ந்து கூறிப் பின், மறைவில் முடிந்த வரையில் நன்ருயிகழ்ந்து பேசு வதையும் நாம் கேட்டிருக்கிருேம்.

இங்கு நள்ளி, கானகத்தின் இடையில் சந்தித்த புலவர், வன்பரணர் என்ற புலவராவர். வேறு, பரணர், நெடுங்கழுத்துப் பரணர் என இரு புலவருளர்; ஆதலின், இவர் வன்பரணர் என்று அழைக்கப்பட்டார். நள்ளி இவரது பசியை நீக்கத்தானே தன்கையால் ஊனை வதக்கிக் கொடுத்தான் என்று தெரிய வருதலால், இன்றி யமையாத சிற்சில சமயங்களில் வேலையாட்களை எதிர் பாராமல் தாமே எப்பணிகளையும் செய்யும் ஆற்றல் அமைதல்வேண்டும். இங்கு மகாத்மா காந்தியின் உட் கோள் அமைந்திருத்தல் உற்று நோக்கத்தகும். அருச் சுனனுக்குத் தன் தேரைச் செலுத்த ஒரு சமயம் சாரதி இல்லாதபொழுது, அவன் மனைவி சுபத்திரைசாரதியாக இருந்தாள் என்று நூல் உரைக்கும். உடல் வலிமை மிக்க வீமனும், விராடமன்னனுக்குச் சமையல்காரனுக இருந்தான் என்று தெரியவருகின்றது. அவ்வாறே நளன், இருதுபர்ணனுக்கு அடிசிற்றொழிலாளனு யிருந் தான் என்பது தெரியவரும்.

இது இழிதொழில், இதனை நாம் செய்யலாகாது, வேலையாட்கள் வந்துதான் செய்யவேண்டுமென்று நள்ளி யிருந்திருப்பானுயின், வன்பரணர் பசிமிகுதியால் பெருவருத்த முற்றிருக்கவும் கூடும். வீதிகளில் விரைந்து ஓடிவரும் வண்டியின் கீழ் அகப்பட்டுக்கொள்

ளும் நிலையில் ஒரு சிறு குழந்தையிருப்பின் வேலைக்காரி வந்தே எடுக்கவேண்டுமென்று ஒரு தாய் இருப்பாளா? அந்த நிலையில் தாயினும் தண்ணளிமிக்க நம் வள்ளல் பசியால் துடிக்கும் வன்பரணரையும், அவர் சுற்றத் தாரையும் உணவைத் தன் கையால் பக்குவம் செய்து கொடுத்துக் காப்பாற்றினுர். "உண்டிகொடுத்தோர் உயிர் கொடுத்தோரே." ஈகை பல துறையுடையது; ஆயினும், உண்டி ஈகை உயர்ந்ததன்றே? அந்த ஈகையை யுடையவரை உயிர் கொடுத்தோர் என்ருர்.

பொருட் கொடை எவ்வளவு கொடுப்பினும் போதும் என்ற உள்ளம் உண்டாகாது. உணவுக்கொடை போதும் என்ற உள்ளம் உண்டாகச் செய்யும் வலிமை யுடையது. நள்ளி இங்கு இவ்விருகொடைகளையும் கைக் கொண்டிருந்தவன்; தன்னை யடைந்தவர் தரித்திரத்தை அவரிடம் தரித்திருக்காதபடி ஓட்டியவன்; ஆதலின், இவனை இவன் காலத்திலும் இவனது பிற்காலத்திலும் புகழ்ந்து பேசுபவர் நிரம்ப இருந்தனர்.

"ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதிய மில்லை உயிர்க்கு"

# 3. மாங்கனி உதவிய மங்கை

தமிழ் நாட்டில் வாழ்ந்த முடியுடைவேந்தர் மூவரைப் பற்றிப் பற்பல நூல்கள் நமக்கு அறிவிக்கின்றன. இந்த மூவேந்தர் நாட்டுள் சோறுடைய சோழ நாட்டைச் சிறப்புறப் பலரும் கொண்டாடுவர். அத்தகைய சோழ நாட்டில் வாணிகத்தால் மிக்கவளம் பெற்றோங்கிய காரைக்கால் என்னும் கடற்கரையோரத்திலுள்ள திருப்பதி ஒன்றுண்டு. இத்திருப்பதியில் ஈசன் திருவடியை மறவாத சிவநேசச் செல்வனய் விளங்கிய தனதத்தன் என்னும் பெயர் வாய்ந்த ஓர் வணிகன், குறைவற்ற செல்வமுடன் வாழ்ந்து வந்தான்.

இத் தனதத்தன் முன் செய்த தவத்தின் பயனாலும், சிவபெருமானருளாலும் இவனுக்கு ஒப்பற்ற பேரழகு வாய்ந்த ஓர் பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தையின் முகத்தில் தூய குணங்களுக்கு இருப்பிடம் இப் பெண் குழந்தை என்றறியத்தக்க தெய்வ ஒளி வீசிற்று. பெற்றோர்கள், அக்குழந்தைக்குப் **புனிதவதி** என்ற பெயரைப் பெயர்ப்பொருத்தமுற இட்டனர். அக்குழந்தையைப் பெற்றோர்கள், பெறுதற்கரிய நிதி பெற்றதாக எண்ணி மிகவும் அருமையாக வளர்த்து வந்தனர். குழந்தையும், நாளொரு மேனியாக வளர்பிறைச்சந்திரனையொப்பப்படிப்படியாய் வளர்ந்து வந்தது. இப்பெண் குழந்தையைப் பார்த்தவர் யாவரும் இவளென்ன திருமகளோ, அல்லது பார்வதியோ என்று வியப்படைந்தனர். இக்குழந்தை பேதைப் பருவங்கடந்து பெதும்பைப் பருவம் அடைந்தனள்.

பெதும்பைப் பருவத்தில் சிறந்த கல்வி கேள்வி களில் வல்லவளாய்ப் புனிதவதி விளங்கினுள். இவ ளது தாய்தந்தையர், இவள் அழகிலும், கல்வியிலும் சிறந்திருப்பதை நேரில் கண்டு மனமகிழ்ந்தனர்; இவள், பெதும்பைப் பருவமுங்கடந்து மங்கைப் பருவமடைந் தனள்; இவள் பெற்ருேர் இவள்குணத்திற்கும், திருவுக் கும்ஏற்ற கணவனைத் தேடியறிவதில் கருத்தைச்செலுத் தினர். அப்பொழுது நாகைப்பட்டினத்தில் பெருஞ் செல்வமுற்று விளங்கிய பெரியவணிகனுன நிதிபதி என்ற வணிகன் மகனுன பரமதத்தன் என்பவனுக்குப் புனிதவதியை மணம் பேசச் சான்ருேர், தனதத்தனிடம் வந்தனர். வந்த அப்பெரியோர்கள், நாகைப்பட்டினத்து வணிகனுன நிதிபதியின் மகன் பரமதத்தனுக்குப் புனித வதியாரை மணஞ் செய்துதரும்படி வேண்டினர். தன தத்தன், தன் குலத்திற்கும், திருவுக்கும் ஏற்ற இடமாக இருந்தபடியால் சான்ருேர் விருப்பப்படி மணஞ் செய்து தர இசைந்தனன்.

தனதத்தன், புனிதவதியாரைப் பரமதத்தனுக்குக் கொடுக்க இசைந்தவுடன் இச்செய்தியைச்சான்ருேர்கள் நிதிபதியிடம் சென்று கூறினர். நிதிபதி, தனதத்தன் பெண்தருவதாக வாக்களித்தது கேட்டுப் பெரும் சிறப் புப் பெற்றவன் போல் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தான். உடனே, அவன் பரமதத்தனுடைய திருக்கலியாணத் திற்கு வேண்டிய பொருள்களைச் சேர்த்தான்; மேலும் தனக்கு மருமகளாகப் போகும் புனிதவதியார்க்கு உயர்ந்த ஆடை யணிகளை யெல்லாம் வாங்கினுன்; சுற்றத் தார்க்கெல்லாம் திருமண வோலைகளைச் செலவிட்டான்; வதுவைக்கு வேண்டிய தொழில்கள் யாவும் செய்தான்;

மணம் புரியும் நாள் நெருங்கப் பெருஞ் சுற்றத்துடன் பணைமுரசம் ஆர்ப்ப, ஏனைய வாத்தியங்கள் முழங்க காரைக்கால் என்னும் பதியை வந்தடைந்தான்.

தன்னூருக்கு அருகில் நிதிபதி தன் சுற்றத்தோடு வந்தடைந்தான் என்று கேட்டவுடன் தனதத்தன் தன் சுற்றத்தாருடன் மங்கலவாத்தியங்கள் முழங்க எதிர் சென்று வரவேற்றான்; வரவேற்றுத்தன் அழகிய மணி மாடத்துள் அழைத்துப் போய்த் தக்க ஆசனத்தி லிருக்கச் செய்தான். இவர்கள் முன்பே குறிப்பிட் டிருந்த திருமண நாள் வர, அன்று சான்றோர்கள் தெளிந்த நூல்விதிப்படித் திருமணச் சடங்குகளைச் செய்யத் தொடங்கினர். மணவோரை வந்ததும் மயில் போன்ற சாயலுடைய புனிதவதியாரை மணமாலை சூடிய அக்காளைக்குச் சுற்றத்தார், திருமணம் செய்து வைத்தனர்.

இத்திருமணம் மிக்க சிறப்புடன் நடந்தேறிற்று. திருமணத்திற்கு வந்தவர்களை நன்கு உபசரித்து அனுப்பிய பின், தனதத்தன் தன்மகள் தன் குடிக்கு அரும் புதல்வியாதலால் தன்னுடனிருக்க வேண்டு மென்று கருதினான்; தன் மகளும் மருமகனும் காரைக் காலிலேயே யிருக்க வேண்டினான்; அதற்கு நிதிபதி யுடன்பட்டான்.

தனதத்தன் தன் மாளிகைக்கு அருகில் தன் மகளுக்கு ஒருபெரிய மாளிகையை யமைத்தான். அம்மாளிகையில் ஒரு நல்ல நாளில் தன் மகளையும், மருமகனையும் குடிபுகச் செய்தான். அங்கு இவ்விருவர்களும், குடிபுகுந்து இன்பமாகத் தமது வாழ்க்கையை நடத்திவரத்

தொடங்கினர். நிதிபதியின் புதல்வனான பரமதத்தன், தன் மனைவளம் பெருக்கி வாணிபம் செய்து இல்வாழ்க்கையில் மேம்பாடுற்று வாழ்ந்து வந்தான்.

அங்கு அவன் இல்வாழ்க்கையின் அருந் துணைவியாய் வாழ்ந்துவந்த புனிதவதியார், சிவபெருமான் திருவடிக் கீழ் அன்புடன் நற்குணவதியாக இல்லறம்நடத்தி வந்தார். இவ்வாறு இவர் இல்லற வாழ்க்கையை நடத்தி வரும்பொழுது சிவனடியார்கள் வந்தால் நல்ல திருவமுதளித்து, ஆடையும், பொன்னும், நவமணியும் அவரவர் தகுதிக்கேற்ப உதவி வந்தார். அத்துடன் சிவ பக்தியில் நாளுக்கு நாள் புனிதவதியார் சிறந்து விளங்கினார்.

ஒழுக்க நெறியில் தவறாத பரமதத்தனைக் காணச் சிலர் அவனிடம் வந்தனர்; வந்தவர் பரமதத்தனைக் காணும்பொழுது இரண்டு மாங்கனிகளைக் கொடுத்துக் கண்டனர். பரமதத்தன் அவற்றைப் பெற்றுக்கொண்டு அவர்களுக்கு வேண்டும் குறைகளை முடித்துக் கொடுத்தான். பின்பு, அப் பழங்களைத் தன் பணியாளிடம் தந்து தன் இல்லத்திற்கு அனுப்பினான். தன் கணவன் அனுப்பிய மாங்கனிகள் இரண்டையும் புனிதவதியார் கைக்கொண்டு, ஓரிடத்தில் அவற்றைச் சேமித்து வைத்தார்.

அரவப்பணிபூண்ட அரன் அன்பர் ஒருவர், அன்று அரும்பசியால் வாடி, புனிதவதியார் இல்லத்தை யடைந்தார். அங்கு வந்தடைந்த அந்த மெய்த் தொண்டர் நிலையைக் கண்ட அவ்வம்மையார், "ஈசனடியார் பசியைத் தீர்ப்பேன்" என்று எண்ணிக் கொண்டு பாதங்கள் விளக்கிக் கொள்ளத் தண்ணீர் உதவினார்; பின்பு

அவர் வழிவந்த இளைப்பை யாற்றிப் பீடமிட்டு அமரச் செய்து பரிகலமும் இட்டனர்; வந்த அன்பர் பசிமிகுதியைக் கண்டார்; அவர் பசிக்குக் கறியமுதுகளாகாமல் அன்னம்பட்டும் சமைத்திருந்தார்; ஆனால், அப்பொழுது அவர், "ஈசனடியாரே நல் விருந்தாக வந்தபொழுது பேறிதன்மேல் பெறத்தக்கதில்லை" என்று எண்ணினார். உடனே தன் கணவன் வைத்திருக்கும்படிக் கொடுத்திருந்த இரண்டு மாங்கனிகளில் ஒன்றை மன மகிழ்ச்சியோடு அவர் பரிகலத்தில் படைத்து அமுது செய்வித்தார். மூப்பின் மிகுதியாலும், பசியின் மிகுதியாலும் சோர்வடைந்து அங்குவந்த அத் தொண்டர் மிக்க சுவையுடைய அடிசிலை மாங்கனியோடினிது அருந்தினர்; பின்பு, அவ்வம்மையின் வள்ளன்மையை வாயார வாழ்த்தி மனமகிழ்ந்து இருப்பிட மடைந்தனர். உணவருந்தி அத் தொண்டர் சென்ற பின், பரமதத்தன் தன் தொழில்களை முடித்துக் கொண்டு வீட்டிற்கு வந்தான்; வந்தவுடன் தூய நீரில் நீராடி நீறணிந்து கொண்டு கடவுட் பூசை செய்துவிட்டு உணவருந்த அமர்ந்தனன்.

கற்புடைய அவ்வம்மையார் அன்புடன் இனிமையான அடிசிலைத் தம் கணவர்க்கு ஊட்டத் தொடங்கினர். சுவையுடைய கறிகளுடன் இன்னடிசிலை அவ் வணிகர் அருந்தும்பொழுது முன்பே தன்னிடம் அனுப்பியிருந்த மாங்கனிகளில் மிகுந்திருந்த ஒரு கனியைக் கொண்டுவந்து கலத்திலிட்டார். மனைவியாரிட்ட கனியை யருந்தியபொழுது அக்கனி சுவைமிக்கிருந்தமையால் "யான் கொடுத்தனுப்பிய பழங்களில் இன்னும் ஒன்றிருக்குமே அதனையு மிடுக" என்றான். உடனே மற்றொரு பழத்தையும் கொண்டுவரச் செல்பவர்போல்

அவ்விடத்தைவிட்டு அம்மையார் வேறோரிடத்திற்கு வந்தார்; இரண்டாவது பழம் அவரிடமில்லை; அதை முன்பே ஒரு அடியார்க்குப் பரிகலத்திலிட்டு உண்ணும் படிச் செய்து விட்டாரல்லவா? கணவனிட்ட சட்டளைப்படி வேறொரு கனி வேண்டுமென்று ஈசன் திருவடிகளை நினைத்தார். உடனே அடியார்க்குத் துன்பம் வந்தவிடத்து உதவும் விடையுடைய எம்பெருமானருளால் இவர் கையில் ஒருஅதிமதுரக் கனி வந்தடைந்தது.

இவ்வாறு கிடைத்த கனியை எடுத்துவந்து மிக்க மகிழ்ச்சியுடன் புனிதவதியார் கணவருடைய உண்கலத்திலிட்டார். அப்பழத்தை அவ்வணிகர் உண்டார்; இதற்கு முன்னுண்ட பழத்தினும் அதிக சுவையுடனிருந்தது கண்டு புனிதவதியாரை நோக்கி, "இது முன்னிட்ட மாங்கனி போன்றதன்று; இக் கனியைப்போன்ற கனியை மூவுலகிலும் பெறமுடியாது; நீ இக் கனியை எவ்விடத்தில் பெற்றாய்" என்று வினவினார்.

இவ்வினாவிற்கு விடைகூற முடியாமல் அவ்வம்மையார், நெடுநேரம் மனம் கலங்கினார்; இறைவன் அருளுடன் அளித்ததை வெளிப்பட விளம்புவது ஏற்றதன்று என்றும், கணவன் வினாவிற்கு உண்மை விடை கூறாதிருப்பது மெய்ம்மையன்று என்றும் எண்ணி 'இருதலைக்கொள்ளி எறும்புபோல்' பெருந் துயரமடைந்தனர். உடனே இவர் ஒருவாறு தேறி செய்தபடி சொல்லுவதே கடன் என்னும் ஒழுக்கமுடையவராய் இறைவனை மனத்தால் வணங்கிக்கொண்டு நடந்தபடியே கூறிவிட்டார்.

ஈசனருள்தான் கனி கிடைத்ததற்குக் காரணம் என்று அம்மையார் கூறவும் அச்சொல்லில் தெளிவடை

யாதவனுய்க் கடவுளருளால் கிடைத்திருப்பின் இவ்வாறுன கனி மற்றென்றை அவ்விறைவனருளால் இப்பொழுது வரவழைத்துக் கொடு பார்ப்போம் என்று கூறினன். உடனே அம்மையார் அவ்விடம் விட்டகன்று பணியணியும் பரமனைப் பரவி “எல்லாம் வல்ல இறைவனே இப்பொழுது மற்றொரு கனி யருள்செய்யாவிடில் என்னுரை பொய்யாம்; என் சொல்லை உண்மையாக்குவது தங்கள் கடன்” என்று வேண்டினர்.

பக்தர்களைக் கைவிடாது காக்கும் கறைக்கண்டன், அம்மையார் விரும்பியபடி ஒரு மாங்கனியை யளித்தனன். இவ்வாறு வேண்டிப் பெற்ற மாங்கனியை அம்மையார் தம் கணவன் கையில் கொடுத்தனர். அக்கனியைக் கண்டவுடன் பெருவியப்படைந்து பரமதத்தன் தன் கையில் வாங்கிப் பார்த்தான்.

அம்மையார் கையிலிருந்து அவருடைய கொழுநன் கைக்கு வந்தவுடன் அந்த மாங்கனி மறைந்து போயிற்று. உடனே, அவ்வணிகர் தலைவன் துணுக்குற்று பயங்கொண்டு நடுங்கினன்; அன்று தொட்டு அம்மையாரைத் தெய்வமாக எண்ணித் தொடர்பு நீங்கி வாழ்ந்து வந்தான். எவ்வாறுயினும் இவரை விட்டு விலகி விடவேண்டுமென்ற எண்ணம் வணிகன் உள்ளத்தில் ஊன்றிவிட்டது; இக் கருத்தை நிறைவேற்ற ஒரு உபாயம் தேடினன்; கடல் மீது மரக்கலம் ஊர்ந்து சென்று நிதிதேடி வருவதாகக் கூறினன்; உடனே சுற்றத்தாரைக் கொண்டு மரக்கலம் அமைப்பித்தான்; அம்மரக்கலத்தில் கலம் அமைக்கும் கம்மியரையும், பற்பல பண்டங்களையும் நிரம்ப ஏற்றிக் கொண்டு புறப்படும் பொழுது கடற்கிறைவனை வணங்கி விட்டு நல்ல நாளில் கப்பலேறிப் போனுன்.

பரமதத்தன், வாணிபம் செய்யக்கருதிய நாட்டை நோக்கிக் கடலில் பிரயாணம் செய்து, அந்த நாட்டை யடைந்து கணக்கற்ற ஊதியங்களை யீட்டிய பின் சில காலம் அங்குத் தங்கியிருந்து மீண்டும் அக்கலத்தில் ஏறிக் கன்னிநாட்டில் ஒருபட்டினத்தை வந்தடைந்தான்.

பரமதத்தன், அப்பட்டினத்தில் வந்து தங்கித்தான் ஈட்டிய பொருள்களை யெல்லாம் ஓரிடத்தில் கொண்டு வந்து சேர்த்தான்; அவ்வூரில் வாழும் ஒரு வணிகன் மகளைத் திருமணம் செய்துகொண்டு இல்வாழ்க்கையை நடத்தி வந்தான். அப்பொழுது இவன் குபேரன் என்று சொல்லும்படிப் பெருஞ்செல்வம் பெற்றுக் கப்பல்வாணிபஞ் செய்து வாழ்ந்து வந்தான். அச்சமயத்தில் அவன் இரண்டாம் மனைவி ஒரு அழகிய பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்பெண் குழந்தைக்குத் தான் தெய்வம் என்று எண்ணித் தொடர்பு நீத்துவந்த முதல் தேவியின் பெயரையிட்டழைத்து வந்தான்.

பரமதத்தன், இங்கு இவ்வாறு வாழ்ந்துவந்த பொழுது காரைக்காலில் புனிதவதியார், கற்பொழுக்கத்திற் சிறந்து மனையறம் தவறுமற் செய்து வந்தனர். அம்மையாரின் சுற்றத்தார்கள், 'செல்வந்தேடக் கப்பல் மீது போன பரமதத்தன், பொருளை நிரம்பச் சம்பாதித்துக் கொண்டு மீண்டும் பாண்டியநாட்டிலுள்ள ஒரு நகரத்தில்வந்து தங்கிவிட்டான்; அளவிலாநிதியும் தேடிப் படைத்துள்ளான்' என்று கேட்டறிந்தனர். உடனே தக்க சுற்றத்தாரைப் பரமதத்தன் உள்ள நகரத்திற்கு அனுப்பிச் செய்திகளை யறிந்து வரச் செய்தனர்.

சென்றவர், பரமதத்தன் நிலைமைகள் யாவும் அறிந்து வந்து கூறினர். தனதத்தன் சுற்றத்தார் பலரும்

ஒன்று கூடிப் பரமதத்தன் உள்ள ஊருக்குப் புனித வதியாரைக் கொண்டு போய் விடலாமென்று எண்ணி னர்; உடனே அவரை ஒரு சிவிகையில் ஏற்றி நாற்புறமும் திரையை வீழ்த்திப் பெண்மணிகள் சூழ்ந்துவரச் சில பகல் பயணம் செய்து பரமதத்தன் தங்கியுள்ள நகர்க்கருகில் வந்தடைந்தனர். இவ்வாறு இவர்கள் புனிதவதியாருடன் வந்தடைந்ததைப் பரமதத்தனுக்குச் சொல்லியனுப்பினர்.

இச்செய்தியைக் கேட்டறிந்ததும் பரமதத்தன் உள்ளத்தில் அச்சங் கொண்டு இளைய மனைவியுடனும், அவள் வயிற்றில் பிறந்த மகளுடனும் புறப்பட்டுப் புனிதவதியாரை எதிர்கொள்ள வந்தான். வந்தவன் மனைவியோடும், மகளோடும் புனிதவதியார் திருவடியில் வீழ்ந்து பணிந்து, "யான் உமதருளால் வாழ்ந்து வருகின் றேன்; இந்த இளங்குழந்தைக்கு உம்முடைய பெய ரையே வைத்துள்ளேன்" என்று தெரிவித்தான்.

தம் கணவர் தன்னை வணங்கக் கண்ட அம்மையார் தம் சுற்றத்தாரிடம் சென்று ஒதுங்கி நின்றார். அப் பொழுது புனிதவதியாரின் கிளைஞர்கள் பரமதத்தனை நோக்கி, "உன் திருமனைவியை நீ வணங்கிய காரண மென்ன?" என்று வினவினர். பரமதத்தன் அவர்களை நோக்கி, "இவர் மானிடராய்த் தோற்றமளித்த போதி லும், இவர் தெய்வமே யாவர். இதனை யானறிந்த பின்பே இவரோடு யான் தொடர்பு நீங்கி யகன்றேன்; இப்பொழுது யான் பெற்றுள்ள மகவுக்கும், இவர் பெய ரையே வைத்திருக்கின்றேன்; தெய்வமாதலால் அவ ரைப் பணிந்தேன்; நீங்களும் வணங்குவீராயின் நன்மை பயக்கும்" என்றான். இம்மொழியைக் கேட்ட சுற்றத் தார், ஒன்றும் தோன்றாமல் நின்றனர்.

அப்பொழுது புனிதவதியார், இறைவன் திருவடிகளைப் போற்றிச் சிந்தையால் தியானம்செய்து கடவுளை முன்னிலையாக்கி, "இறைவனே, இங்கு என் கணவர் கொள்கை இது என்றறிந்தேன்; இவர் பொருட்டுயான் தாங்கிய வனப்புடைய தசைப்பொதியாகிய இவ்வுடலை மாற்றி, எனக்குப் பேய் வடிவைக் கொடுத்தருள்வீர்" என்று வேண்டினார். இறைவன் உடனே அவ்வாறே அருள் செய்ய அவருடைய அழகிய வடிவம் நீங்கி மண்ணுலகத்தவரும், விண்ணுலகத்தவரும் வணங்கும் பேய் வடிவங்கொண்டார்.

அப்பொழுது வானத்திலிருந்து மலர்மழை பொழிய துந்துபியொலிக்க தேவரும், முனிவரும் கொண்டாடினர்; பூதகணங்கள் கூத்தாடின. சுற்றத்தார் தொழுது அஞ்சியகன்றனர். அப்பொழுது சிறந்த ஞானமுண்டாகி இறைவன்மீது அம்மையார், **"அற்புதத்திருவந்தாதி"** என்னும் பிரபந்தம் அருளிச் செய்தார். அதன் பின்பு **இரட்டைமாலை யந்தாதி**யையும் இயற்றியருளினார்.

முப்புரம் எரித்த முழுமுதலைக் காணவேண்டுமென்ற விருப்பத்தால் கைலைமலையையடைய எண்ணிப் புறப்பட்டார். இவரை இடைவழியில் கண்டவர், வியப்படைந்து அஞ்சியோடினர். அப்பொழுது இவர், 'இறைவன் என்னையறிவாராயின், உண்மையறியமாட்டாத மாக்களுக்கு யான்எவ்வுருவாக இருந்தால் என்ன?" என்று நினைத்து ஏனையோர் மொழிகளைப் பொருட்படுத்தாமல் கைலையை நோக்கிச் சென்றனர்.

வடதிசையின் கண்ணுள்ள எல்லாத் தேசங்களையும் கடந்து வேகமாகச் சென்று, சூலபாணி பார்வதியோடு தங்கியிருக்கும் ஒளியுடைய கைலைமலையை

யடைந்து காலால் ஈசன் கைலையை மிதிக்கலாகாதென்று தலையால் நடந்துசென்றார். இவர் தம் தலையால் நடந்து மலையின்மேல் ஏறும்பொழுது இமயவல்லியார், தமது திருக்கண்களால் நோக்கினர்.

பார்த்த அம்பிகை, உடனே தம் திருவுள்ளத்தில் அதிசயித்து எம்பெருமானை நோக்கி, "எம்பெருமானே! இக்கைலையில் அதோ தலையினால் நடந்தேறும் என்பு உடைய யாக்கையின் அன்பை என்னென்பேன்!" என்று வியப்புடனருளிச் செய்தனர். அம்மொழி கேட்ட அங்கணர், "அம்மையே! வரும் இவள் நம்மைப் பேணும் அம்மைகாண்! இந்தப் பெருமைவாய்ந்த வடிவமும் நம்மை வேண்டிப் பெற்றனள்" என்றார். இவ்வாறு இவர் மொழியும்பொழுது காரைக்காலம்மையார் அருகு வந்து அணைய ஈசன் அவரை நோக்கி, "அம்மையே!" என்று ஒருமொழி உலகம் எல்லாம் உய்ய அருளிச்செய்தார். அப்பொழுது அம்மையும் "அப்பா" என்று அழைத்து அவர் பாதத்தில் வீழ்ந்து, அன்புடன் பணிந்தார். இறைவன் இவரை நோக்கி, "என்னிடம் நீர் வேண்டுவதென்ன?" என்று வினவினார். அதற்கு அம்மையார், இறைவனை நோக்கி இறைஞ்சியபின் இயம்புகின்றார்.

"இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை [என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து [பாடி
அறவா! நீ ஆடும்போதுன் அடியின்கீழ் இருக்க" என்றார்.

முதலில் கடவுளிடத்து அழியாத அன்பு வேண்டும் என்று வேண்டினார்: அதன்பின் உலகில் பிறப்பு

எடுக்காதபடி அருள்புரிய வேண்டினர்; ஒருகால் பிறக்கும்படி நேர்ந்தால் ஈசனை மறவாதிருக்க வேண்டினர்; இறுதியாக அவர் நடனமாடுகையில் அவர் திருவடியின்கீழ் மகிழ்ந்து பாடிக்கொண்டும், அவர் தரிசனத்தை எப்பொழுதும் கண்டுகொண்டும்இருக்க வரந்தர வேண்டினர்.

எம்பெருமான், அவ்வாறே அருள் கொடுத்து அவரைநோக்கித் "தென்திசையில் நன்செய் வயல்சூழ்ந்த பழைய ஊராகிய திரு ஆலங்காட்டில் நாம் ஆடும் நடனத்தை நீ எப்பொழுதும் கண்டு ஆனந்தமுடன் நம்மைப் பாடிக்கொண்டிருப்பாய்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

இவ்வாறு இறைவனிடம் வரம்பெற்ற அம்மையும், பரம்பொருளிடம் விடைபெற்று வணங்கிவிட்டுத் திரு ஆலங்காடு வரையில் தலையால் நடந்து சென்றார். அம்மையார் அப்பதியை யடைந்தவுடன், அளவிலா ஆனந்தமடைந்தார்; திருஆலங்காட்டில் எம்பெருமான் அண்டமுற நிமிர்ந்தாடும் கோலத்தைக்கண்டு உள்ளம் உருகிப் பதிகங்கள் பாடியருளினர்.

இவ்வம்மையார் சிவனடியார்களில் சிறந்தவராவர். நேரில் கைலைக்குச் சென்று இறைவனைக் கண்டு தரிசித்தவர்; கைலையைக் காலால் மிதிக்கலாகாதென்று தலையால் நடந்துசென்றவர்; இறைவன் இவரை "அம்மை" என மதுரமான மொழியால் அழைக்கும் பேறு பெற்றவர்; எம்பெருமான் ஆடும் சேவடிக்கீழ் என்றும் இருந்துவருகின்ற இணையிலாச் சிறப்புப் பெற்றவர்; இவர் பதிகங்களை நாம் பாடி இருமை இன்பமுமடைவோமாக.

---

# 4. தமிழ் முழுதறிந்த தக்கோன்

தமிழ்நாட்டு வேந்தர்களாலும், வள்ளல்களாலும் தமிழ்நன்கு வளர்க்கப்பட்டு வந்தது. பாண்டிய நாட்டில் பெரும்பாலும் தமிழ் வளர்ந்ததாயினும், ஏனைய சேர சோழ நாடுகளிலும் தமிழ் புறக்கணிக்கப்படாமல் செவ்வனே போற்றிப் பாதுகாக்கப்பட்டு வந்தது. தமிழ் மொழிமீதும், தமிழ் நாட்டின்மீதும், தமிழ்ப் புலவர் மீதும் பெரிதும் அன்புடையவராக மூவேந்தரும் வாழ்ந்துவந்தனர்.

ஒரு நாடு மேன்மையடைய அந்நாட்டு மொழியை நன்கு போற்றி வளர்த்தல் வேண்டும். அந்த நாட்டு மக்களும், அரசனுடனிருந்து துணை செய்வதுடன் அம்மொழி வளர்ச்சியில் ஊன்றிய கருத்துடையவராயிருத்தல்வேண்டும். மொழியை வளர்த்தல் என்றால் எப்படி வளர்க்கவேண்டும்? என்ற வினா எழக்கூடும். முதன்முதல் அம்மொழியைக் கற்றாரிடத்து நன்மதிப்புவைத்து அவர்களைச் சீர்பெற நன்றாய் நடத்தல்வேண்டும்.

நம் தமிழ்நாட்டில் தமிழ்மொழியைக் கற்றாரிடம் சிற்சில ஆண்டுகளாகத் தமிழ்மக்களுக்கே மதிப்பில்லாமலிருந்துவருகிறது. தமிழ் மக்களே தமிழைக் கற்றார்க்கு நன்மதிப்புக் கொடாமற்போனால் பிறர் எங்கு அவரை மதிக்கப்போகின்றனர். இவ்வாறு இவர்கள் தமிழைக் கற்றவரை இழிவாகக் கருதுவதற்குப் பல காரணங்களிருப்பினும், ஆங்கிலமொழி நம்நாட்டில் வந்து தோன்றி வேரூன்றி முதன்மை பெற்றதே முக்கிய காரணமாகும். அது தமிழர் உள்ளத்தையே முற்றிலும் வேறு வகையாக மாற்றிவிட்டது.

பள்ளிகளில் கல்விகற்கும் மாணவர்கட்குத் தமிழ் மணி நேரத்திடமும், தமிழாசிரியரிடமும், தமிழிடமும் மிக்க வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. வகுப்பில் ஒரு சிலர்க்கு விருப்பமிருப்பினும் பல மாணவர் வெறுப்புடையவராக இருக்கின்றனர். ஒருசிலர்க்குத் தமிழினிமை தோன்றி விருப்பம் இருக்கலாம். அவரைப் போல் வகுப்பிலுள்ள மாணவர் அனைவர்க்கும் தமிழ் நம் தாய்மொழி என்ற ஆர்வம் தோன்றுதல் வேண்டும். இளைஞர்முதல் முதியர்வரை யாவர்க்கும் தமிழ் மொழியிடம் என்று விருப்பம் உண்டாகின்றதோ, அன்றுதான் சங்ககாலத்திலிருந்த நல்ல நிலையை நம் தமிழ்மொழி அடையும்.

தமிழ் என்ற சொற்குப் பொருள்கூறவந்த நிகண்டு ஆசிரியர், "தமிழென்ப இனிமை நேர்மை தமிழெனும் பாடைக்கும் பேர்" என்று கூறிப்போந்தார். இங்கு இந்த நிகண்டு தமிழ்எனும் சொற்கு முதலுரை இனிமை என்றுரைக்கின்றது. தமிழிற் கினிமையுண்டு என்பதை மக்கள் எப்படி அறிந்துகொள்ள முடியும்? தமிழ்நூல்களைக் கையால் தீண்டிக் கண்ணால் பார்த்து உள்ளத்தால் நினைத்து உணர்ச்சியாலுணர்ந்து நாவினால் சுவைத்துப் பார்த்தால்தான் அதன் இனிமை அவரவர் அறிவிற்குத் தக்கபடி புலப்படும். தமிழ் நூல்களையே விலைக்கு வாங்குவதுமில்லை; நூல் நிலையங்கட்குச்சென்றால் தமிழ்ப் புத்தகங்களைக் கண்ணால் காண்பதுமில்லை; தப்பித் தவறித் தம் தடக்கையில் தீண்டினால் தீட்டு என்று நினைப்பவர் எப்படித் தமிழில் ஆழ்ந்துகிடக்கும் இனிமைகளைச் சுவைத் தறிய முடியும்?

ஒரு சிலர், தமிழில் என்ன இருக்கிறது? தமிழில் நூல்கள் வேறு இருக்கின்றனவா? அவைகள் என்ன

நூல்கள்? பெரிய புராணம் என்றால் அது எதைப்பற்றிக் கூறுகின்றது? என்று பற்பல வினாக்கள் கேட்கின்றனர். நன் மதிப்புமிக்க ஒரு தமிழ்ப் பெரியோரை வேறு துறையில் பட்டம்பெற்றுள்ள திருநீறு அணியும் ஒருதமிழர், பெரிய புராணம் எத்தனை (சேப்டர்) கொண்டது? என்று கேட்டதாக அறிந்திருக்கின்றேன். திருநீறு பூசும் ஒரு தமிழர் இவ்வாறு வினவுவார் ஆயின், அவர் தாய் மொழிப் புறக்கணிப்பை என்னென்று இயம்புவது?

தமிழ் நாட்டில் தமிழராகப் பிறந்தவர், பிறமொழிகளை வாழ்க்கை காரணமாகப் படிக்கநேரிடினும், தாய் மொழியைப் புறக்கணித்தல் தகாது.' சென்றதுபோக இனியாகிலும் தமிழர், தமிழை இகழாதிருக்க இறைவன் அவர்க்கு அறிவூட்டுவானாக.

நிகண்டில் கூறியபடி இரண்டாவது பொருள் நேர்மையாகும். நேர்மை என்பது ஒழுங்காகும். ஒவ்வொரு தமிழனிடமும் நல்லொழுக்கம் குடிகொண்டிருக்கும். ஒருவனிடம் நல்லொழுக்க மில்லாவிடின் அவன் தமிழன் என்று எண்ணத் தக்கவனல்லன். மூன்றாவது உரையாகத் தமிழ்மொழி என்று கூறியுள்ளது; தமிழ் உரத்த குரல்கொண்டு ஒலிக்கப் பெறாமல் காதுக்கு இனிய ஒலிகளால் ஒலிக்கக்கூடிய இனிய மொழியாகும். இத்தகைய இனிய மொழியை நாள் தோறும் பயில்வோர் இனிமையுடனும், நேர்மையுடனும் நடைமுறையில் நடந்து கொள்ளவேண்டும்.

தமிழ் நாட்டில் முடியுடை வேந்தர் மூவரும், தமிழரையும், தமிழ்ப் புலவரையும் ஆதரித்ததுடன் தமிழ் மொழியைத் தாமே நன்கு கற்றிருந்தவராவர். வள்ளல்

களாயிருந்து தமிழ் பண்டிதர்களைப் பொருள் கொடுத்துப் பாதுகாப்பவர் நிரம்பத் தமிழின் சுவையை யுணர வேண்டுமாயின் தாமும் புலவர்களாக இருந்தால்தான் முடியும். இம்மொழியிலுள்ள அருமை பெருமைகளைத் தாமே உழைத்துக் கற்று, அதன் சுவையைச் சுவைத்துள்ளோர்தான் உள்ளபடி தமிழ்ப் புலவர் திறமையை முழுதும் உணர்ந்தறிய முடியும்.

அரிசில் கிழார் என்று ஒரு பெரிய புலவரிருந்தார். இவர் இருந்த ஊர் அரிசில் என்பது. கொள்ளிடத்தின் வடக்கே அரியலூர் அல்லது அரியில் என்று வழங்கும் ஓரூரின் பெயர், அரிசில் என்பதன் மரூஉவாக நினைக்க இடந்தருகின்றது. சகரம் நின்ற இடத்தில் யகரம்வந்து நிற்பதுண்டு. கிழார் என்பது, வேளாளர்க்குரிய சிறப்புப் பெயர். ஆதலால் இவர் வேளாண் மரபினர் என்று தெரிய வருகின்றது.

இவர் காலத்திலிருந்த தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை இப்புலவர் பதிற்றுப் பத்திலுள்ள எட்டாம் பத்தால் பாடியுள்ளார். இவர் இந்த எட்டாம் பத்தை இச்சேர வேந்தன் முன் பாடியவுடன் அவன் அதில் அமைந்திருக்கும் சொற்சுவை பொருட்சுவைகளை யுணர்ச்சி ததும்பச் செவியாரப் பருகினான். அவ் வேந்தன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை; அவன் தமிழின் அருமை பெருமைகளை நன்கு கற்றறிந்த சிறந்த மொழியறிஞன். இச்சேர வேந்தன், எட்டாம் பத்து முழுதும் செவியாரக் கேட்டவுடன் புலவர்க்குப் பரிசில் இப்பாடற் கேற்றபடி எதைத்தருவது என்று சற்று தனக்குள் எண்ணினான். அவ்வளவில் அவன் உள்ளத்தில் இப்பாடற்கு ஏற்ற பரிசிலாகத் தன் செல்வம் முழுதும் கொடுப்பினும் ஈடாகாதென்று கருதினான்

உடனே தானும் தன் பட்டத்துத் தேவியும் அரண்மனைக்கு வெளியேவந்து நின்று, புலவரை நோக்கித் தன் கையிலுள்ள பொருள் எல்லாம் கொள்வீர் என்று கூறி, ஒன்பது நூறாயிரம் காணம் பொன்னும், அரசு கட்டிலும் அவர்க்கே சொந்தமாகக் கொடுத்தனன். அரிசில் கிழார், பெருவியப்படைந்து அவ் வேந்தன் பரந்த உள்ளத்தைப் பல படப் பாராட்டினர்.

பின்பு, புலவர் அரசனிடம் அணுகி அரசியலைப் புலவன் பெற்று யாது பயன்? அரசு கட்டிலில் வீற்றிருக்குந்தகுதி அத்தகுதியுடையார்க்கே அமைதல் வேண்டும். ஆதலின், யான் உன்னை இரந்து இவ்வரம் தரவேண்டுமென்று வேண்டுகிறேன் ; அவ்வரமாவது நீயே மீண்டும் அரசுகட்டிலில் அமர்ந்து அரசாட்சியைக் கைக்கொண்டு ஆளவேண்டுமென்று வேண்டினர்.

புலவர் சொல்லிற்கு மதிப்புக் கொடுத்து, அச்சேர வேந்தன் மீண்டும் அரசு கட்டிலேறி யமர்ந்தான். அவ்வளவில் புலவரைப் பொருள் கொடுத்துப் போக்கிவிடத் துணியாமல், தன்னருகே அமைச்சராக இருந்து வருமாறு வேண்டிக் கொண்டான். அரசன் வேண்டுகோட்படி அரிசில்கிழார் அமைச்சரா யமைந்தார்.

பெருஞ் சேரலிரும்பொறை புலவர் பாட்டிற்குத் தன் அரசாங்கச் செல்வம் முழுதும் கொடுப்பானாயின், அவன் அவர் பாடலில் கொண்டிருந்த மதிப்பு எத்தகையதென்று நாம் இயம்ப முடியும்?

இது ஒரு புறமிருக்க அரசியலே தன்னை வந்தடையும் பொழுது அவ்வரசியலை அற்பமாக மதித்து,

“கம்பமத யானைக் கழுத்தகத்தின் மீதிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்”

என்ற துறவுள்ளமுடையவராய் அரிசில் கிழார், அர சாட்சியை வேண்டாமென்று மறுத்து, மீண்டும் அவனே அரசு ஆளும்படி இரந்து பெற்றவரம், எத்தகையது என்று எண்ணிப் பாருங்கள்! சேரவேந்தன் அப்பொழுது அப் புலவரை விடாது தனக்கே அமைச்சராக்கிக் கொண்டது, தமிழ்மொழி மீதிருந்த பற்றல்லவா? "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்பது இங்கு எண்ணத் தக்கது. இவ்வரலாற்றை நாம் படிப்பதால் இவ்விருவர் குணங்களின் சிறப்பு, இத்தகையது என்று நாமறியலாம்.

இச்சேர வேந்தன், அரிசில் கிழாரிடம் மட்டும் இவ் வாறு நடந்து கொண்டான் என்பதில்லை. தமிழ்ப் புலவர் யாவரிடத்திலும் பேரருளுடையவனாக இருந்து வந்தான். இவ்வேந்தன் செய்த மற்றொரு வியப்பான செய்தியும் உண்டு; அச்செயல் யாதெனில்:

டண்டையரசர்கள் தம்மிடமுள்ள வேல், வாள், வில், தண்டு, செங்கோல், குடை, அரியணை, வீரமுரசு இவைகளை ஏற்ற இடங்களில் வைத்து அவைகட்குக் கடவுள்தன்மை யுண்டென்று பூசிப்பர். இப் பொருள் களை நன்மதிப்புடன் நடத்துவர். பகைவர் இவற்றை இகழ்வாராயின், அவர்களை உயிருடன் விடமாட்டார்.

பாரதப் போரில் பதினேழாம் நாள் அருச்சுனன் கன்னனை விரைவில் கொல்லவில்லை என்று அவனை நோக்கித் தருமன், அவனையும், அவன் வில்லையும் இகழ்ந்து பேசினார். உடனே விசயன் தன்னை இகழ்ந் ததை விடத் தன் கையிலுள்ள "காண்டீபம்" என்னும் வில்லை இகழ்ந்து பேசிய தன் மூத்த அண்ணனை தருமன் தலையை இப்பொழுதே இந்த வில்லால் துணிப்

பேன் என்று எழுந்திருந்தான் என்று நாம் கேட்டறிந் திருக்கிறோம்.

முற்காலத் தரசர் தம்மினும் தம்முடைய அரச சின்னங்களைச் சிறப்புறப் போற்றி வந்தனர் என்றறிய லாம். இப்பொழுதும் முருகனைப் போலவே அவன் அங்கையில் பற்றும் வேலுக்கு அபிஷேகமும், அலங்கார மும், பூசையும் நடத்துவதை நாம் நேரில் பார்க்கிறோம்.

நாம் இது காறும் எடுத்துக் கூறிவந்த சேரமான் தகடூர் எறிந்த பெருஞ் சேரலிரும் பொறை, தெய்வம் போல் பக்தி கொண்டு பூசித்து வந்த வீர முரசம் எவ் வாறு அமைந்திருந்தது என்பது, புறநானூற்றில் படித்து இன்புறத்தக்கது. அம்முரசம் கரியமரத்தால் செய்திருத்தலால் இருட்சி பொருந்திய அதன் பக்கங்கள் அழகாகப் பொலிந்து விளங்கின. அம்முரசம் நன்கு வாரப்பட்டக் குற்றந்தீர்ந்தவாரால் வலித்துப் பிணிக்கப் பட்டிருந்தது; மயிலினது தழைத்த நெடிய பீலிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது; பொன்னால் செய்யப்பட்ட உழிஞை மாலைகளைச் சூட்டப் பட்டிருந்தது; இதன் அலங்கரிக்கப்பட்ட தோற்றம் கண்ணைக் கவரத்தக்கது. இம்முரசத்திற்கு இரத்தப்பலி கொடுப்பதுமுண்டு.

இம்முரசத்திற்கு அரசனமர்வது போன்ற ஒரு உயர்ந்த அரியணையுண்டு. இந்த முரசு கட்டிலில் இதனை வைத்திருப்பது வழக்கம். இம்முரசு கட்டிலும் அரச னுடைய அரியணை போல் சிறந்த மதிப்புடையது. ஒரு நாள் வீரர்கள், இம்முரசு கட்டிலிலிருந்த வீரமுரசத்தை நீராட்டிவர நீர்நிலைக்கு எடுத்துச் சென்றிருந்தனர்.

அப்பொழுது அம்முரசு கட்டில் பூவேலைகள் செய்த சிறந்த எண்ணெய் நுரைபோன்ற மெல்லிய

மேல் விரிப்பால் போர்க்கப்பட்டிருந்தது. முரசு அப்புறம் எடுத்துச் சென்றிருந்த படியால் முரசு கட்டிலின் மேற் புறம் வெற்றிடமாகக் காணப்பட்டது.

பழுமரம் தேடும் பறவைபோல் வள்ளல்களை நாடிச் செல்வதே புலவர் தொழிலாக இருந்த அந்நாளில் மோசிகீரனார் என்னும் ஒரு சிறந்த புலவர், நெடுந்தூரம் வழிநடந்து இளைத்துக் களைத்து, அரசன் கோயிலை வந்தடைந்தார். அடைந்தவர் மெல்ல மெல்ல இட்டடி யிட்டுக் களைப்புடன் இம்முரசு கட்டிற்கருகே அடைந் தார். மெல்லிய மேல் விரிப்புடன் உயர்ந்த பீடம் போல் திகழும் முரசு கட்டிலைப் பார்த்தார். அதன் மேல் ஏறிச்சற்று நேரம் அதில் படுத்துறங்கலா மென்று எண்ணினார். வழி நடந்து வந்த வருத்தத்தால் அது முரசு கட்டில் என்பதைப் புலவர் கவனிக்க வில்லை; உடனே அடியிட்டேறி அதிற்படுத்தார்; படுத்த உட னேயே உடற்றளர்ச்சியால் உறங்கி விட்டார்.

பின்பு, சற்று நேரத்திற்கெல்லாம் சேரமான் ஏதோ வேலையாக அவ்வழியே வந்தான்; புலவர் பெருமான் முரசு கட்டிலில் ஏறிப்படுத்து உறங்குவதை உற்று நோக்கினான். அரசனுடன் வந்தவர், புலவர் மாண்டார்; இது திண்ணம்; இனி இவர் பிழைக்கப் போவதில்லை; என்று நடுநடுங்கினர். அரசரோ புலவர் உடம்பின் களைப்பையும், அயர்ச்சியையும், உடலெங்கும் வியர்வை பெருகி ஓடுவதையும் உற்று நோக்கினார்; விரைந்து தானே ஓடி ஒரு விசிறியை எடுத்து வந்து தாமே தங்கை யால் எதிர் நின்று விசிறத் தொடங்கி இடைவிடாது கைநோயாமல் விசிறிக் கொண்டிருந்தார்.

இந்நிகழ்ச்சியைக் கண்டார், பெருவியப்புற்று என்னே அரசர் பெருந்தகையின் தயை! என்னே இவர் அருள்! என்னே இவர் தமிழ்ப் புலவரிடம் கொண்டுள்ள கருணை! நாம் சற்றுமுன் எண்ணிய எண்ணம் வேறு; இப்பொழுது இவர் செய்யும் செய்கை வேறு; இப்பெருந்தகையைப் புற்றி நாம் கொண்ட கருத்து மிகவும் தவறானதாகும் என்று எண்ணினர். அரசர் கருத்திற்கு மாறாக இவர்கள் அருகில் அணுகி விசிறியைக் கேட்டுத்தாம் வாங்கி வீசவும் பயமுடைய வராய் வேந்தன் சீரிய குணக்கடலில் மூழ்கிக் கண்ணீர் வடித்துச் சூழ்ந்து நின்றனர்.

நெடிதுறக்கம் கொள்ளா உணர்ச்சிமிக்க அப் பெரும் புலவர், விரைவில் விழித்தெழுந்து பார்க்கும் பொழுது அரசர் செய்யும் அரும்பணியைக் கண்டார். அரசர் உள்ளப் பான்மையைப் பாராட்டுவதா, அல்லது இவரைப் புகழ்ந்து ஒரு பாடலிலமைத்துப் பாடுவதா என்று மனமாரப் பெரிதும் மகிழ்ந்தனர். உடனே சேர மானை ஒரு புறப்பாட்டிலமைத்துப் பாடத் தொடங் கினர்.

அப்பாடலில் பின்வருமாறு கருத்தமையப் பாடியுள் ளார். “வெற்றி பொருந்திய வேந்தே! யான் ஏறி உறங் கும் இடம் எது என்று இப்பொழுதுதான் பார்த்தேன்; வீரமுரசு தங்கும் இக்கட்டிலில் அடியிட்டு ஏறுதல் தகாது; அத்துடன் அதனை அவமதித்து, முரசு, நீராடி வரும் முன் யான் இக்கட்டிலின் மேல் ஏறிப் படுத்து உறங்கினேன்; இந்தப் பெரும் பிழைக்கு நுமக்குக் கோபந்தோன்றி வாளை வாங்கி இருகூறாக என்னைத் துணித்தெறிய வேண்டியது நியாயமாகும். அவ்வாறு

செய்யாமல் என்னை மன்னித்து உயிர்ப்பிச்சை உதவினீர்; இப்பிழையை வேருெருவன் செய்திருப்பானுயின், தங்கள் வாளுக்கிரையாகி மாண்டிருப்பான்; ஒரு தமிழ்ப் புலவன் இப் பிழையைச் செய்ததால் உயிரோடிருக்க நேர்ந்தது; தேவரீர் தமிழ் மொழியை முழுதுங் கற்றறிந்துள்ளதற்கு இப்பொழுது என்னை மன்னித் தருளிய செயல் ஒன்றே போதுமானது.

நான் தமிழறிந்திருந்து பயனில்லை; நீவிர் தமிழின் சுவையைச் சுவைத்திராமலிருப்பீராயின் யான் மாண்டு போய் நெடுநேரமாயிருக்கும். தமிழைக்கற்றுத் தமிழ் கற்றவனை ஆதரிக்கவேண்டுமென்றிருந்த நும் எண்ணம் நீடு வாழ்க.

அத்துடன் அணுகவந்து சாமரம் கொண்டு, டவியைத் தாங்கும் புயத்தால் புலவன் உடல் குளிர நீவிரே எதிர் நின்று வீசியருளினீர்; நும் செயல் உடல் உள்ளம் உயிர் மூன்றையும் குளிரச் செய்தது; பரந்த புகழை இப்பாரில் பரப்பியவர்க்கே துறக்க வாழ்க்கை கிட்டும் என்று நீவீர் பெரியோர்களிடம் கேட்டறிந்திருப்பதால் இச்செயல் செய்தீர் என்று யான் நினைக்கின்றேன்" என்ருர்.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பில்
வலவன் ஏவா வானவூர்தி எய்துப"

என்பது, இக்கருத்தே கொண்டு பாடப்பட்டதாகும்.

அரசனிடம் வேலைக்காரர்களுக்குக் குறைவில்லை; ஒருவனைக் கொண்டு புலவர் எழுந்திருக்குமளவும் விசிறக் கட்டளையிட்டால் அதன்படி நடக்கும்; ஆனுல், சேரமான் அவ்வாறு பிறரை ஏவாமல் தானே தமிழ்

கற்ற பெரியார்க்குப் பணி செய்ய வேண்டு மென்னும் அவாவால் இவ்வாறு தொண்டு புரிவானாயின் வேந்தன் தண்ணளியை என்னென்று யாம் இயம்புவது !

சேரமான் தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும் பொறை என்ற பெயர் வாய்ந்த இவ்வேந்தன், அரிசில் கிழார்க்கு ஒன்பது நூறாயிரம் காணம் பரிசில் வழங்கினான் என்ற வரலாற்றால் இவன் பெருங்கொடையாளன் என்பது தெரியவரும்.

ஔவையாரை ஆதரித்த பெருவீரனான அதியமானஞ்சியைப் போரில் வென்று அவனது நகரமாகிய தகடூரைக் கைப்பற்றினான் என்பதால் இவன் அதியமானை விடச் சிறந்த பெரிய வீரன் என்பது அறியக் கிடக்கின்றது.

அரிசில் கிழாரை அப்புறம் போகவிடாமல் தன்னருகில் அமைச்சராக இருக்க வைத்தான் என்பதாலும், மோசிகீரனாருக்குக் கவரிப்புத்திரத்தானே தன் கையால் விசிறி வீசித் தொண்டு புரிந்தான் என்பதாலும் தமிழ்ப் புலவரிடம் பேரன்பு உடையவன் என்பது விளங்குகின்றது.

மோசிகீரனார் பெரும்பிழை செய்து முரசுகட்டிலில் ஏறிப் படுத்துறங்கியவரை நேரில் தானே தன் கண் காணக் கண்டும், அவரிடம் தன்னருள் காட்டிச் செய்த பெரும் பிழையை மன்னித்து விட்டான் என்பதால் பேரருளுடைய உள்ளம் உடையவன் என்பது புலப்படுகின்றது.

ஒரு சீரிய வேந்தனிடம் அமைந்திருக்க வேண்டிய கை, வீரம், அன்பு, அருள் என்ற நற்குணங்கள் பல

வும் நம் சேரமானிடம் அமைந்துள்ளன. இவனைப் போலவே இவன் தேவியும் அருள் உள்ளம் உடையவள் என்பது தெரிய வருகின்றது. அரிசில் கிழார்க்கு இவர் தன்னிடம் உள்ள பொருளெல்லாம் கொடுத்துஅரசியலை யும் தந்து தன் அரண்மனையை விட்டுவெளியேறிய பொழுது இவர் தேவியும் இவருடன் மனமிசைந்து இவர் செய்யும் இச்செய்கைக்கு உடன்பட்டார் என் பது, "தானும் கோயிலாளும் புறம் போந்து நின்று கோயிலி லுள்ளவெல்லாம் கொண்மின் என்று" என்ற தொடர் வாக்கியம் பதிற்றுப்பத்து என்னும் நூலில் காணப்படுவதால் கோயிலாள்—பட்டத்தேவி என்று பொருள்படுவதால் இவ்விருவருடைய குணங்களும் ஒற்றுமையுடையன என்பது நன்கு புலப்படும். கொடை யுள்ள முடைய தலைவனுக்கு ஏற்ற தலைவி கிடைப்பதும் ஒருபெரிய நல்வினை யல்லவா ? இந்த வகையிலும் நம் சேரவேந்தன் புண்ணியவான் என்பது தெரிய வரு கின்றது.

---

# 5. சூடிக்கொடுத்த சுடர்க்கொடி

நம் தமிழ் நாட்டில் உள்ள பெண்பாலாரிற் சிலர் கற்புக்கு எடுத்துக் காட்டாய் விளங்கினர். சிலர் கடவுட் பக்திக்கு உதாரணமாய்த் திகழ்ந்தனர். பின் சொன்னவர்களுள் சிறந்தவர் நம் ஆண்டாள். அவரைப் போலக் கடவுட் பக்தியிற் சிறந்தவர் ஒருவருமில்லை. அவர், தமிழ்ச்சங்கமிருந்த செந்தமிழ் நாடாகிய பாண்டிநாட்டிலுள்ள ஸ்ரீ வில்லிபுத்தூர் என்னும் திருத்தலத்தில் அவதரித்தார்.

ஸ்ரீ வில்லிபுத்தூரில் விஷ்ணுசித்தர் என்னும் பெரியார், ஒரு அழகிய பூந்தோட்டம் அமைத்து அதில் மலரும் மலர்களை மாலைகளாகக்கட்டி அவ்வற்றை ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ள திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் வடபெருங் கோயிலுடையானுக்கு அணிவித்து, மகிழ்ந்து கொண்டிருந்தார். அவர் அக்காலத்துப் பாண்டியனான வல்லப தேவனின் அவையில், வைணவமே சிறந்த நெறியென்று உறுதிப்படுத்தி, அவனால் ஏற்படுத்தப் பட்டிருக்கும் பொற்கிழியையும், பெரியாழ்வார் என்ற பெயரையும் அடைந்தார். பிறகு அவர் எம்பெருமானைப் பூமாலைகளாலன்றிப் பாமாலைகளாலும் பாடிப் பெரிதும் மகிழ்வடைந்தார்.

இங்ஙனமிருக்கையில், ஒரு நாள், பெரியாழ்வார் தமது தோட்டத்தில் மலர்களைப் பறித்துக் கொண்டிருக்கும் போது, ஒரு குழவியின் அழுகுரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தார்; சிறிது தூரத்தில் ஒரு துளசிச் செடியின் கீழ் ஒரு அழகிய பெண் மகவு இருக்கக் கண்டார். உடனே மகிழ்ச்சியினால் பூரிப்படைந்து, அக்

குழந்தையை எடுத்துக் கொண்டு தமது வீட்டிற்கு வந்தார். அக் குழந்தைக்குக் கோதை என்று பெயரிட்டு வளர்த்து வந்தார்.

அக் குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தாள். ஆனால், அவள் மற்றக் குழந்தைகளைப் போலல்லாமல் கடவுளிடம் மிகுதியாகப் பக்தி கொண்டிருந்தாள். எப்பொழுதும் திருமாலையே பாடிக் கொண்டும், அவனது குணங்களை நினைத்து மகிழ்ந்து கொண்டும் வளர்ந்து வந்தாள்.

இப்படிப் பலநாட்கள் செல்ல, கோதை மங்கைப் பருவத்தை யடைந்தாள். அப்பொழுது எம்பெருமானது குணங்களையே நினைந்து நினைந்து அவரையே மணப்பது என்ற முடிவுக்கு வந்துவிட்டாள். ஒருநாள் பெரியாழ்வார், வழக்கம் போலக் கடவுட்குச் சூட்டும் மலர்மாலைகளைப் பூக்கூடையில் வைத்திருந்தார். அதைப் பார்த்த கோதையார், 'நாம் திருவரங்கப் பெருமானுக்கு ஏற்ற தலைவியாவோமா' என்று நினைத்து அம் மலர் மாலைகளைத் தன் கழுத்திற் சூட்டிக்கொண்டு கண்ணாடி யெதிரில் நின்று, தன்னழகைக் கண்டு, மகிழ்வடைந்து, பிறகு அம்மாலைகளைக் கழற்றி யாருமறியாதவாறு மறுபடியும் பூக்கூடைக்குள் வைத்துவிட்டாள்.

பெரியாழ்வார் அதையறியாமல் வடபெருங்கோயிலுடையானுக்குக் கொண்டு போய்ச் சூட்டினார். அன்றையதினம் எம்பெருமான் மற்றைய தினங்களில் காட்சியளிப்பதைவிட அதிகமாய் என்றுமிலாத பொலிவுடன் விளங்கினார். மலர்மாலைகளின் நறுமணம் நெடுந்தூரம் வீசியது. கோயிலிற் பணியாளரெல்லாரும்

பெருவியப்புற்றனர். இங்ஙனம் அளவிலாக் கடவுட் பக்தி வாய்ந்த கோதை, ஒவ்வொரு நாளும் தான் சூட்டிக் கொண்டு பின்பு மலர்மாலைகளைப் பூக்கூடையில் வைப்பார்; அவற்றைப் பெரியாழ்வார், அத்தலத்தில் திருக்கோயில் கொண்டுள்ள அச்சுதனுக்கு அணிவிப்பார்.

ஒரு நாள் கோதை இங்ஙனம் மலர் மாலைகளைச் சூட்டிக்கொண்டு கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருக்கையில், தற்செயலாக அங்குவந்த பெரியாழ்வார் பார்த்து, அளவிலாச் சினங்கொண்டு தன் மகளைப் பார்த்து, "என்னரு மருந்தன்ன செல்வியே, நீ எத்தகைய காரியம் செய்தாய்? இந்தப் பூமாலைகளை நான் எப்படித் திருமாலுக்குக் கொண்டுபோய் அணிவிப்பேன்? இவ்வாறு நீ செய்யலாமா?" என்று கூறிக் கடிந்து பேசியபின் சினந்தணிந்து, மீண்டும் நந்தவனத்திற்குச் சென்று வேறு மலர்களைக் கொய்து அவைகளை மாலைகளாகக் கட்டிக்கொண்டுபோய் அடியார்க்கு எளியனான அமலனுக்கு அணிவித்தனர். அம்மாலைகளை அணிந்துகொண்ட திருமாலது திருமுகம் வெறுப்பைப் புலப்படுத்தியது. அதைக்கண்டு அச்சமடைந்த பெரியாழ்வார், கோதையை இதற்குக் காரணம்யாதெனவினவ, கோதையும் ஒன்றும் பேசாதிருந்து விட்டாள். அன்றிரவு திருமால் பெரியாழ்வாரின் கனவிற்றோன்றி, "நீர் ஏன் கோதை சூடியளிக்கும் மலர்மாலைகளை எனக்குச் சூட்டவில்லை? அவள் நம்முடைய தலைவியாகிய பூமாதேவி என்று அறிந்துகொள்வீர்" என்று கூறிவிட்டு மறைந்தார். உடனே பெரியாழ்வார், விழித்தெழுந்து "நம் கோதை நம்மை ஆண்ட ஆண்டாளாக அவதரித்திருக்கின்றாள் என்று எண்ணி மகிழ்வடைந்தார்.

அன்றுதொட்டுக் கோதைக்கு ஆண்டாள், சூடிக் கொடுத்தசுடர்க்கொடி என்ற பெயர்கள் வழங்கலாயின.

ஆண்டாளும், பாற்கடலில் பள்ளிகொள்ளும் பரமனையே அடைய அவாக் கொண்டார். தன் தோழிகளிடம் "நான், அழகிய மணவாளனை அடைவதற்கு வழியைக் கூறுவீராக" என்று வினவினார். அவர்கள் "தாயே, முன்பு திருமாலானவர், திருவாய்ப்பாடியில் கண்ணனாக அவதரித்தபோது கோவியர் கண்ணனையடைய நோன்பு நோற்றனர். அதுபோலத் தாமும் செய்தால், தாமரைக்கண்ணனையடையலாம்" என்றுகூறினர். அவ்வாறே கோதையாரும் நோன்பு நோற்கத் தொடங்கி, "மார்கழித் திங்கள்" என்று ஆரம்பிக்கும் திருப்பாவை என்னும் முப்பது பாடல்களை அருளிச் செய்தார்.

கோதையார் அருளிச்செய்த திருப்பாவை என்னும் முப்பது பாடல்களையும் ஒவ்வொருவரும் படித்து அறிந்துகொள்ளவேண்டும். இக்கருத்தை விளக்கி,

"ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு"

என்றொரு தனிப்பாசுரத்தின் பகுதி தெரிவிக்கும். திருப்பாவையறியாதவரை நிலவுலகம் சுமந்திருப்பதும் வீண் என்று இதன் பொருள்.

இத்திருப்பாவை கோவியர்கள் கண்ணனையடைய எவ்வாறு பாவை நோன்பு நோற்றனர் என்பதைத் தெரிவித்துக்கொண்டே போகும். அக்கோவியர் நோற்ற பாவை நோன்பு என்பது யாதெனில், யமுனை நதியின் கரையில் மணலால் பாவைசெய்து கோவியர்கள் பூ,

சந்தனம் இவற்றால் அலங்கரித்து நிவேதனப் பொருள்களை வைத்து நிவேதனம்செய்து வழிபாடு இயற்றுவர். இப்பாவைக்குக் காத்தியாயினி என்று பெயர். ஆகவே இந்நோன்பு காத்தியாயினி நோன்பாகும்.

இந்த நோன்பை நோற்க இக்கோவியருள் சிலர், விடியற்காலையில் எழுந்து மற்றவரைத் துயிலெழுப்புவர். நாம் பெறும்பேறு மற்றவரும் பெறவேண்டுமென்ற நற் கருத்துடையவராய்த் தம்போன்ற இளைய பெண்கள் யாவரையும் எழுப்பி உடன் கூட்டிக்கொண்டு பாவை நோன்பிற்குச் செல்வர். இவர்கள் மிக்க தூயவராயிருந்து இந்த நோன்பை நோற்பார் என்பதைக் கீழ்க்கண்ட பாசுரப்பகுதி தெரிவிக்கும்.

"நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி........"

என்றபடி இவர்கள் நாட்காலையில் நீராடி நெய்பால்களை யுண்ணாமல் கண்ணிற்கு மையிடாமல் மலர் மாலைகளைச்சூடாமல் பாபச்செயலையும் கொடுஞ்சொற்களையும் கூறாமல் அறச்செயல்களை முடிந்த வரையில் செய்து வருவர் என்பது இதனாலறியலாம். இவ்வாறு இவர்கள் கண்ணனைவாயினால் பாடி, மனத்தினால் சிந்தித்து வழிபடுவர். அவ்வெம்பெருமானையே பாடி, 'உன்னோடு உற்றோமேயாவோம்; உனக்கே நாங்கள் ஆட்செய்வோம்' என்று வேண்டுவர். இவ்வாறு இவர் வேண்டிப் பெற்றதென்ன என்று பார்ப்போம். "மற்று நம் அவாவை மாற்று" என்று வேண்டுகின்றார்; தங்கள் அவாவறுக்க வேண்டுகின்றனர்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்ற இக்குறளின் கருத்துப்படி கோவியர் கொண்ட விருப்பம் அவா அறுத்தலாகும். திருப்பாவை, இங்கு வாழும் பொழுது இன்பத்தோடிருந்து, பின் துறக்கத்துச் செல்லும் பொழுது பேரின்பத்தையளிக்க வல்லது. இதனைத் திருப்பாவை முப்பதும் தப்பாமே உரைப்பார், திருமாலருளால் 'எங்குந் திரு அருள்பெற்று இன்புறுவர்' என்பதால் அறியலாம். அவ்வாறே கோவியர் இன்புற்றனர். அப்படியே தானும் இன்ப மடைய ஆண்டாள், ஸ்ரீ வில்லிபுத்தூரே ஆயர்பாடி யாகவும் தம் தோழிமார்களே கோவியர்களாகவும், வடபெருங் கோயிலுடையானை கண்ணனாகவும் கொண்டு தன்னை அந்த ஆய்ச்சியர்களில் ஒருத்தியாக நினைத்துத் திருப்பாவையைப் பாடத் தொடங்கினர்.

ஆய்ச்சியர் செய்கையில் நோன்பை நோற்றனர். ஆண்டாள் தன் விருப்பம் நிறைவேறப் பாசுரங்களால் நோன்பை நோற்கின்றனர். திருப்பாவைப் பாசுரங்கள் அனைத்தும் மிகமிக ஆழ்ந்த கருத்துக்களையுட் கொண்டு திகழ்வன; சொற்சுவை பொருட்சுவையுடை யன; பக்திக்கு விளைநிலமானவை. இத்தகைய பாசுரங் களைப் பசிய தாமரை மாலையணிந்த பட்டர்பிரான் கோதை பாடி முடித்தனர்.

பின்பு, "நாச்சியார் திருமொழி" என்னும் நூற்று நாற்பத்துமூன்று பாடல்களைப்பாடினர். அதில் முதலில் "தையொரு திங்கள்" என்று தொடங்கிக் காமவேளாகிய மன்மதனையும், மேகங்களையும், பறவைகளையும், வண்டு களையும் தூதுவிட்டும், திருமாலிருஞ் சோலையிலுள்ள

திருமாலை வழிபட்டும், திருஅரங்கச் செல்வனை விரும்பி யும், வேங்கடவற்கு என்னை விதி என்றும், அழகியமண வாளன் அணிபொருள்கள்கொண்டு என் அவலந்தீர்ப் பீர் என்றும், பிருந்தாவனத்துப் பரந்தாமனைப் பார்க்க வெண்ணியும், செந்தாமரைக் கண்ணனையே திருமணஞ் செய்துகொண்டதாகக் கனவுகள் கண்டும், பாடியுள் ளார். இவைகளில் பக்திச்சுவை ததும்புகிறது. ஒவ் வொரு பாடல்களையும் படிக்குந்தோறும் நெஞ்சு உரு கும்படிப் பாடியுள்ளார். இவரது மாற்றங்களைக் கண்டு பெரியாழ்வார் மனங்கலங்கிக் கோதையாரை நோக்கிக் "கோதாய், நீ யாரை மணந்துகொள்ளப் போகி ருய்?" என்று கேட்டார்.

அதற்குக் கோதை "தந்தையே, நான் மானிடர்க்கு வாழ்க்கைப்பட்டால் உயிர் வாழமாட்டேன். நான் திருவரங்கத்தில் துயிலும் திருமாலையன்றி வேறெரு வரை மணக்கமாட்டேன்" என்று உறுதியாய்க் கூறி விட்டார்.

அதைக்கேட்ட பெரியாழ்வார் மனங்கலங்கி, "நாம் அரவணையில் அறிதுயில் கொள்ளும் திருமாலை நம் கோதைக்கு எப்படி மணம் புரிவிப்பது? அவனே ஒப்பற்ற கடவுள்! நம் கோதையோ மானுடப் பெண்! இறைவன் மானுடப் பெண்ணுகிய நம் கோதையை மணம் புரிந்துகொள்வானே? மாட்டானே? என்று ஐய முற்று வருந்தினர்.

அன்றிரவில் அடியார்கள் அயர்வை அழிக்கும் அமலன் அவரது கனவில் தோன்றி "பெரியாழ்வாரே, நீர் மனங்கலங்கவேண்டாம்; நும் மகளாகிய கோதையை நாமே மணந்துகொள்வோம். நாளைக்கு நாச்சியாரைப்

பொற்சிவிகையி லேற்றிக்கொண்டு பரிவாரங்களுடன் நம் பெரியகோயிலுக்கு அழைத்துக்கொண்டுவருவீராக" என்று கூறினர்.

ஆழ்வார் மகிழ்ச்சியுற்று மறுநாட்காலையில் எழுந்து பாண்டியன் முதலியவர்களுடன் ஆண்டாளைப் பொற் சிவிகையில் ஏற்றிக்கொண்டு, திருச்சின்னம் ஊத, பேரிகள் ஒலிக்க, சங்குகளார்ப்ப, சாமரம் வீச, திருவரங் கத்திற்கு அழைத்து வந்தனர். அரங்கத்திற் கருகில் வரும்போது சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார் இறங்கி நடந்துவர விருப்பங்கொண்டு இறங்கி நடந்துவந்தார். அப்பொழுது பார்த்தனுக்குப் பரியோட்டிய பரமன் கோதையாரது மெல்லிய அடிகள் வருந்துமென்று எண்ணி அவரை யொருவரும் அறியாதபடி அந்தக் கணமே கோயிலுள் வரும்படி அருளினர். சிவிகை தூக்குவோர், கோதையாரைக் காணுமல் வியந்து, பெரியாழ்வாரிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். பெரி யாழ்வார் நாற்புறமும் பார்த்துக் கோதையாரைக் காணுமல் கோயிலுள் வந்து, கடவுளை வேண்ட, திருவ ரங்கப் பெருமான், "விஷ்ணுசித்தரே, நும் மகளாகிய கோதையை இதோ பார்ப்பீராக" என்று காட்டினர். அதைக்கண்ட பெரியாழ்வார் கடவுளை நோக்கி, "எங்கள் வில்லிபுத்தூரில் நீவிர் எழுந்தருளி எல்லோருமறிய மணஞ் செய்துகொண்டால், எல்லாப் பக்தரும் மகிழ் வடைவர். ஆதலால், எல்லோருமறிய வில்லிபுத்தூரில் வந்து மணஞ் செய்துகொள்ள வேண்டும்" என்று வேண்டினர்.

கருணை வள்ளலாகிய கார்மேனிப் பெருமான் அவ் வண்ணமே அருளிச்செய்தார். பிறகு கோதையாரை

ஆழ்வாருடன் பொற் சிவிகையிலேற்றிப் பரிவாரங்கள் சூழ ஸ்ரீவில்லிபுத்தூருக்கு மீண்டும் வந்து சேர்ந்தார்.

கடவுளுக்கே, கலியாணம் என்றால், அது எவ்வாறு நடந்திருக்கும் என்று இயம்பவும் வேண்டுமோ? தேவர்க ளெல்லோரும் பூமாரி பெய்தனர். மங்கல வாத்தியங்கள் முழங்கின; குடைகள் நிழலளிக்க, சாமரங்கள் வீச, மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத, முத்துப் பந்த லின்கீழ் உயிர்களனைத்திற்கும் முதல்வனாகிய கடவுளின் திருமணம் நடந்தேறிற்று. பின்பு அழகிய மணவாள னும், ஆண்டாளும் திருவரங்கம் சென்றனர்; செல்லு முன் திருவரங்கப்பெருமான், பெரியாழ்வாரை நோக்கி, "நீர் இன்னும் சிலகாலம் இங்கு வசித்துப் பின்பு வீட்டுல கிற்கு வருவீராக" என்று அருளிச்செய்தனர். ஆண்டாள் கடவுளுடன் எழுந்தருளினார். இவரது பெருமையை ஒரு பெரியார் பின்வருமாறு பாடியுள்ளார்.

"அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதிகம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்"

இப்பாடலால் நாம் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியருளிய பாமாலையின் பெருமையையும், பூமாலையின் பெருமை யையும் அறிகிறோம்; அவரது அளவிறந்த கடவுட் பக்தி யையும் அறிகிறோம். அவரைப் போலவே நாம் கடவுட் பக்தியிற் சிறந்திருந்தால், இம்மையில் இன்பங்களையும், மறுமையில் பேரின்பப் பதவியையும் அடையலாம்.

## 6. உணர்ச்சிமிக்க உயிர்நண்பன்

சோழ மன்னர்கள் இருந்து அரசு ஆண்ட தலை நகரங்கள், காவிரிப்பூம்பட்டினம், தஞ்சை, உறையூர்' திருவாரூர் முதலியன. இந்த நகரங்களுள் நீர்வள நில வளத்தால் சிறந்த உறையூரைக்கோழி என்று வேறொரு பெயரால் அழைக்கவும்படும். இப்பெயரை இவ்வூர் அடைந்ததற்கு ஒரு வரலாறு கூறுவர். ஒரு யானையை அவ்வூர்க்கோழிஒன்று வென்றதாகக் கூறிக் கோழிக்கே அத்தகைய ஆற்றலிருந்த காரணத்தால் அவ்வூர்க்குக் கோழி என்ற பெயர் கொடுக்கப்பட்டது என்பர்.

இந்த உறையூரைத் தலைநகராகக்கொண்டு கோப் பெருஞ்சோழன் என்னும் சோழவரசன் சோழமண்ட லத்தை யாண்டுவந்தான். இவ்வரசன் நற்பண்புகள் பலவும் வாய்க்கப்பெற்று உருவும் திருவும் மிக விளங் கினான். அன்பு, அருள், ஈகை, நட்பு முதலியன சிறப் புற்று இவ்வரசனிடம் விளங்கின. இவ்வரசன், பாண் டிய நாட்டிலுள்ள பிசிர் என்னும் ஊரில் வாழும் ஆந்தையார் என்பவரிடம் உழுவலன்புடையவன். அவ் வாந்தையாரும், இவ்வேந்தனிடம் தலையாய நட்புப் பூண்டு இருந்தார். ஆயினும் பலகாவதம் கடந்த வேறொரு நாட்டில் பிசிராந்தையார் வாழ்ந்து வந்தார். இவர் வாழ்க்கை சிறிதும் கவலையற்றதாகும். இவர் இல்லற வாழ்க்கையை இன்புற நடத்தியவர் என்பதைக் கீழ் வரும் பாடலே விளக்கும்.

"யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்காகியரென வினவு திராயின்
மாண்ட வென் மனைவியோடு மக்களும் நிரம்பினர்

யான் கண்டனையர் என்இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர் யான் வாழுமூரே."

சான்றோர் பலர் கூடி இவரை நோக்கி "யாங்கள் நும்பெயரை நெடுங் காலமாகக் கேட்டிருக்கிறோம்; இருப்பினும் தங்களைப் பார்க்கையில் நரை தோன்றாமல் காணப்படுகின்றீர்; இதற்குக் காரணம் யாது? என்று அவர் வினவினர். அவ்வினாவிற்கு விடையாக நம் பிசிராந்தையார், எம் மனைவியும், மக்களும் நிரம்பிய அறிவுடையராயினர்; என் ஏவலாளர் யான் எண்ணியதையே தாமும் எண்ணிச் சொல்லும் முன் அவ்வினையை முடித்துத்தருவர்; அரசனும் முறையல்லாதனவற்றைச் செய்யாமல் காவல் புரிந்து வருவான்; யான் இருக்கும் ஊரில் கற்றுணர்ந்தடங்கிய சான்றோர் பலர் வாழ்கின்றனர்; இக்காரணங்களால் கவலையற்றிருந்து வருகின்றேன். ஆதலால், கவலையில்லாத எனக்கு நரையில்லாமலிருக்கின்றது என்கிறார். இதனால் நெஞ்சிற் கவலையுள்ளார்க்கு நரை மிகத் தோன்றும் என்பது புலனும்.

இவ்வாறு கவலையற்றிருந்தவர்க்கு ஒரு சிறிது, உள்ளத்தில் வேறொரு வகையில் குறையிருந்ததாகக் கருத இடந்தரும் செய்யுளும் புறநானூற்றில் காணப்படும். அது வருமாறு:

"யாணர் நன்னாட் டுள்ளும் பாணர்
பைதல் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்
கோழி யோனே கோப்பெருஞ் சோழன்
பொத்தில் நண்பிற் பொத்தியொடு கெழீஇ
வாயார் பெருநகை வைகலும் நக்கே."

பொத்தியார் என்னும் கோப்பெருஞ் சோழனுடைய உயிர் நண்பர் செய்த நல்வினையை யான் செய்திலேன் என்று கூறுவார் போன்று தம்முள்ளக் கருத்தை இதன் மூலம் புலனாக்குகிறார். இச்செய்யுளில் 'பிழை சிறிது மில்லாத நண்புள்ள பொத்தி என்னும் புலவரொடு நாடொறும் கூடி உரையாடி உண்மையுள்ள மகிழ்ச்சியி லாழ்ந்து மகிழ்ந்திருக்கின்றான் வேந்தன்' என்பதால் அவ்வாறு நாடொறும் உடனிருந்து உரையாடி மகிழும் பேறு பெறாமல் நான் ஒரு நாட்டிலும், என்நண்பன் ஒரு நாட்டிலும் பிரிந்திருக்க நேர்ந்த என்னிலையை என் னென்று கூறி வருந்துவேன் என்றுரைப்பவர் போலப் பாடி யிருத்தலைக் கூர்ந்து கவனித்துணரற் பாலது.

உண்மை நட்பினர் தன்மையை உரைக்க வந்த கணிமேதையார், ஏலாதி என்னும் நூலில்,

"சாதல் பொருள் கொடுத்தல் இன்சொல் புணர்உவத்தல்
நோதல் பிரிவிற் கவறலே—ஓதலின்
அன்புடையார்க் குள்ளன ஆறு குணமாக
மென்புடையார் வைத்தார் விரித்து."

என்றொரு பாடலில், புணர்வுவத்தல், பிரிவிற் கவறல் அதாவது: கூடும்பொழுது மகிழ்ச்சியும், பிரியும்பொழுது கவலையும் உண்மை நண்பர்களிடமிருக்க வேண்டிய செயல்களாகும் என்பது தெரியவரும்.

ஆகவே, கோப்பெருஞ் சோழனுக்கு உறையூரி லேயே பொத்தியார் எனும் ஒரு உயிர் நண்பரிருந்தா என்பதும், பாண்டி நாட்டில் பிசிர் எனும் ஊரில் ஆதன் தந்தை என்ற பெயர் மருவியமைந்த ஆந்தையார் எனும் ஒரு உயிர் நண்பரிருந்தார் என்பதும் அறிகிறோம். இச் சோழன் நீதியோடு அரசு புரிந்தான் என்பதும். பெருங்

கொடையாளன் என்பதும், தமிழ்ப் புலவரைப்பெரிது ஆதரித்து வந்தவன் என்பதும் இவன் வரலாற்றால் தெரிய வருகின்றது.

பொத்தியார், ஒரு புறப்பாட்டில், "அறவோர் புகழ்ந்த ஆய்கோலன்னே" என்று பாடுகிறார்; இதனால் சோழனுடைய கோலின் நேர்மை புலனாகின்றது. மீண்டும் அப்புலவரே "பாடுநர்க்கீத்த பல்புகழன்னே" என்று பாடுவதால் இந்த வேந்தன் கொடைத்திறம் தெரிகின்றது. அவரே, "திறவோர் புகழ்ந்த திண்ணன்பினனே" என்றும், "துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்" என்றும் புகழ்கின்றார். இதனால் இச் சோழன் கற்றறிந்த சான்றோர்க்கு நண்பன் என்பதும், குற்றமற்ற கேள்வி ஞானமுடைய அந்தணர்க்கு அடைக்கலமாக அமைந்திருந்தவன் என்பதும் தெளியப்படும். மற்றொரு புலவராகிய புல்லாற்றூர் எயிற்றியனார் என்பவர், கோப்பெருஞ் சோழனை, "மண்டமர் அட்ட மதனுடை நோன்றாள் வெண்குடை விளக்கும் விறல் கெழு வேந்தே" என்று பாடுகிறார். இச் செய்யுட் பகுதி பற்பல போரில் வெற்றி பெற்று விளங்கிய வீரத்திற்சிறந்த தோன்றல் இவன் என்று நமக்குத் தெரிவிக்கும்.

இவ்வாறு எல்லாத் திறமையும் அமைந்து பெரும் புகழுடன் உறையூரில் நீதியொடு அரசாண்டுவந்தகோப் பெருஞ்சோழனுக்கு இரண்டு ஆண் மக்கள் இருந்தனர். அவர்கள் தம் தந்தையிடம் மாறுகொண்டு அவர் அரசாட்சியை வெறுத்தனர். இக் கருத்துடைய அவர்க்குத் தீயோர் நட்பும் உண்டாயிற்று. நாளுக்குநாள் தந்தையிடம் கொண்ட பகைமை வளர்ந்து வந்தது முடிவில் சோழன்மக்கள் இருவரும் தம் தந்தையோடு எதிர்த்துப் போரிட வந்தனர்.

கோப்பெருஞ் சோழனும் வீரத்தில் பின்வாங்காத வனுய்த் தானும் போர்க் கோலம் கொண்டு தன் மக்க ளோடு போரிடப் போர்க்களம் நோக்கிப் புறப்பட்டான். இச்செய்தியை யறிந்த புல்லாற்றூர் எயிற்றியனுர் என் னும் கோப்பெருஞ் சோழனுடைய நண்பரான சிறந்த தமிழ்ப் புலவர், கோப்பெருஞ் சோழனிடம் சென்று, அம் மன்னன் மேற்கொண்ட செய்கை, ஏற்றது அன்று என்று அறிவுறுத்தத் தொடங்கினர். பண்டைக் காலத் தில் அரசர்கள் தகாத செயல்களை மேற்கொள்ளுங்கால் கற்றறிந்த சான்ரோர்கள் அவரிடம்வந்து தம் அறிவுரை களால் அத்தகையாரைத் திருத்தி நல்வழிப் படுத்துவது வழக்கமாக இருந்தது. அக்காலத்து வேந்தர்கள் அச் சான்ரோர் சொற்களில் சிறந்த மதிப்புவைத்துத் திருத்தி நல்வழியில் நிற்பர். இடித்துரைக்கும் இத்தகைய சான் ரோர்களைப் பெற்றிராத வேந்தர் தாமே விரைவில் அழிந்து போவர் என்பதை,

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்"

என்ற திருக்குறள் அறிவிக்கும். இத்தகைய நீதிகளை நன்கு அறிந்த நம் சோழர் பெருமான் நம் சொற்களுக்கு நன்மதிப்புக் கொடுப்பர் என்றறிந்த புல்லாற்றூர் எயிற் றியனுர், சோழன் போர்க் கோலங்கொண்டு வருவதை நோக்கி, "அரசே! தங்களோடு போர்செய்ய வந்துள்ள வர் உன்னுடைய வழிப்பகைவரல்லர்; ஆராய்ந்தறியு மிடத்துத் தாங்களும் அவர்க்குப் பகைவராகமாட்டீர்; தாங்கள் சிறந்த புகழை உலகில் பரப்பி அமர ருலக மெய்திய பின், நுமது அரசு உரிமை அவர்க்கே உரியது; மேலும் போரில் அவர்கள் தோற்பாராயின்

நினது பெருஞ்செல்வத்தை அவரை யொழித்துப் பிறர் எவர்க்குக் கொடுக்கப் போகிறாய்; அல்லது, நீவிர் ஒரு சமயம் தோல்வி எய்துவீராயின், உம்மை இகழ்ந்துபேசும் பழிச் சொற்களை உலகில் நிறுத்துவீர்; ஆதலின், விண்ணோர் எதிர்கொண்டழைக்க விரைவில் எழுந்து அதற்காகும் நல்வினைகளைச் செய்வீராக என்று நல்லுரைகளை இயம்பினர்.

கோப்பெருஞ் சோழன், புலவர் பொன்மொழிகளைக் கேட்டு அவை தனக்கு உறுதி பயக்கும் அறிவுரை என்றுணர்ந்துதான் போர்செய்யப் போவதை நிறுத்தி விட்டான். சோழன் போரை நிறுத்தியதேயன்றிப் புலவர் சொற்படி நல்வினைகளை விரைவிற் செய்யவும் எண்ணினான். அவ்வேந்தன், தன் மக்களே தனக்கு பகைவராயினமையின் உலக வாழ்வில் வெறுப்புடையவனாய்த் தன்னுயிரை வடக்கிருந்து நீக்கிவிடக்கருதினன். வடக்கிருத்தல் என்பது: மேலுலகத்தையடைய விரும்பி இவ்வுலக வாழ்வைத் துறந்து விரதத்தால் உடலை மெலிவித்தல்; தம் யோகப் பயிற்சியால் உயிரை நீத்தற்குத் தாம் இதுவரையிலிருந்த இடத்தை விட்டுப் புண்ணிய திசையாகிய வடதிசையிற் சென்று தங்கி எவ்வித உணவையும் உட்கொள்ளாதிருந்து உயிர் விடுதலாகும்.

கோப்பெருஞ் சோழன், தான் இவ்வாறு வடக்கிருப்பதே தான் செய்யத் தக்கதென்று முடிவு செய்தனன். அவ்வாறே வடதிசை நோக்கிச் சென்று வடக்கிருக்கத் தொடங்கினான். சோழன் கருத்தையும், மேற்கொண்ட செய்கையையும் அறிந்த சான்றோர், அவன் போய்த் தங்கிய இடத்தில் சென்று மிக்க வருத்தத்துடன் அவனதுநிலையை நோக்கினர். அவர்களை

அரசன் நோக்கி, "என்னுயிர் நண்பர் பிசிராந்தையார் இங்கு வருவர் அவரிருக்க ஒரு இடம் ஒழித்து வைப்பீர்" என்றனன்.

அம்மொழிகேட்ட சான்றோர் வேந்தனைப் பார்த்து, நீவிர் உறையும் நாடு சோழநாடு, அவர் வாழும் நாடு பாண்டிய நாடு எந்தவகையிலும் இவ்வளவு விரைவில் செய்தி கிடைத்திருக்க இடமில்லை. ஆதலால், அவர் இங்கு எப்படி வரமுடியும்? வாராரென்று மொழிந்தனர்.

அச்சொற்களைக் கேட்ட சோழர் பெருந்தகை அச்சான்றோர் முகம் நோக்கி,

"பிசிரோ னென்ப என்னுயிர் ஓம்புநனே
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே"

என்ற செய்யுளை இயம்பி, அவர், வாழ்வுடைய காலங்களில் வராமலிருப்பினும், தாழ்வடைந்த காலத்தில் தவறாமல் வந்தே தீருவர். நீங்கள் நும் உள்ளத்தில் இவர்கள், ஒருவரை யொருவர் கண்டவரில்லை; கேட்ட மாத்திரையில் நட்புப் பூண்டுள்ளவர்; பழக்கமே இல்லாமல் பல ஆண்டுகள் கழிந்து போயின; இந்த நிலையில் பிசிராந்தையார் எங்குவரப் போகிறார் என்று ஐயப்படுகின்றீர்.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்"

என்ற பொய்யாமொழியை நீவிர் உணர்ந்தவரே; நுமக்கு இதில் ஐயம் வேண்டாம். அத்துடன் நம் பிசிராந்தையின் இயல்பைக் கூறுவேன் கேண்மின்;

"இகழ்வில னினியனி யாத்த நண்பினன்
புகழ் கெடவரும் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்குங்காலை என்பெயர்
பேதைச் சோழன் என்னும் சிறந்த
காதற் கிழமையும் உடையன் அதன்தலை
இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவன் ஒழிக்கவற் கிடமே"

என்று சோழர் பெருமான், பிசிராந்தையாருடைய நற்குணக்கடலில் தோய்ந்தாடிப் பாடித் திளைத்தார்.

இப்பாடலில் பிணித்த நண்பினன் என்றும் பொய் வேண்டாதவன் என்றும், தன்பெயர் மொழியும்பொழுது "என் பெயர் பேதைச்சோழன்" என்று கூறிக்கொள்ளு வாருயின் என்னே! அவர்தம் நட்பின்கிழமை! வரலாற்று முறையால் பற்பல வரலாறுகள் நாம் படிப் பினும் பிசிராந்தையாரும், கோப்பெருஞ் சோழரும் போல என்று பிறர் எடுத்தாளும் வகையில் நட்பில் தலைசிறந்தவர் இவரிருவரும் என்பது தெரியவரும்.

இவ்விருவர் உள்ளங்கலந்த பெருநட்பைச் செயல் முறையிலும் கண்டு பொத்தியார் என்னும் புலவர் பெருமான், எண்ணி எண்ணிப் பெருவியப்படைந்து பிசிராந்தையார் பாண்டிநாட்டிலிருந்தவர், இச்சோழன் வடக்கிருந்த செயலை எவ்வாறு உணர்ந்தனர்; இவர் எப்படி இங்குவந்தார்? என்று பெரிதும் மகிழ்வடைந்து,

"வருவ னென்ற சோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவ னறிவும்
வியத்தோறும் வியத்தோறும் வியப்பிறந் தன்றே"

என்று பாராட்டி யுரைத்தார். கோப்பெருஞ்சோழன்

கூறியபடியே தவருமல் பிசிராந்தையார் சோழன் வடக்கிருந்த இடத்திற்கே வந்தது வியப்புரையைக் கடந்து நிற்கும் செயலாகும்.

இத்தகைய சிறந்த சான்றோனுகிய சோழனை இழந்த இத்தேயம் என்ன துன்பத்தை யடையப் போகின்றதோ அறியேன்; இத்தேயம் தற்பொழுது மிகவும் இரங்கத்தக்கது. இவ்வளவு நற்குணமிக்க வேந்தனோடு இன்னும் பலகாலம் சேர்ந்துவாழ நாமும், நாமிருந்து வாழும் இந்நாடும் நல்வினை இயற்றவில்லை என்பது இதனுல் நமக்குப் புலனுகின்றது என்று இச் சோழனுடைய சிறந்த நண்பரான பொத்தியார், செயலற்று மிக்க துயரத்துடன் மொழிகின்றுர். கண்ணகனுர் என்ற மற்ருெரு புலவர், கோப்பெருஞ் சோழர்க்கும், பிசிராந்தையார்க்கும் அமைந்திருந்த உள்ளங்கலந்த உழுவலன்பைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டார். சோழனிடம் பிசிராந்தையார்க்கு எவ்வளவு உள்ளத்தில் ஒற்றுமையிருந்தால் இப்படி வேற்று நாட்டிலிருந்து வந்திருக்கக்கூடும்! அதுவும் சோழன் உயிர்விட எண்ணியபொழுது தானும் உயிர்விட அவ்விடம் தேடி வருவது பாராட்டத்தக்க செய்கையாகும்.

பொன், பவளம், முத்து, மணி ஆகிய இவை வெவ்வேறிடங்களில் கிடைப்பினும் இவற்றைக் கோவைப் பட விலையுயர்ந்த அணிகலமாக அமைக்கும்பொழுது ஓரிடத்தில் ஒன்றுகூடி விடுவதுபோலச் சான்றோர், எப்பொழுதும் சான்றோர் பக்கத்தில் வந்து சேருவர். கீழ் மக்கள் கீழ்மக்களிடம் வந்து கூடுவர்.

"சான்றோர் சான்றோர் பால ராப
சாலார் சாலார் பால ராகுபவே"

என்று கூறிச்சென்ற பொன்மொழி பொய்யிலா உண்மை மொழியாம் என்பது போதரும்.

பிசிராந்தையோடுஒப்ப எண்ணத்தக்க பொத்தியார், பிசிராந்தையார் எவ்வாறு சோழனோடு வடக்கிருக்கத் துணிந்து அவர் அருகில் வந்து, உறுதியோடமர்ந்தாரோ அவ்வாறே தானும் போய் அருகில் அமர்ந்தார். அப்பொழுது பொத்தியார் மனைவி, பொத்தியாரை நிழல் போலப் பின்தொடர்ந்தார், அந்த நிலையில் நம் சோழர் பெருமான் இருவர் இளமையையும் பார்த்துப் பொத்தியாரைநோக்கி, "நீவிர் நும் மனைவியினிடம் மகன் பிறந்த பின்பே இவ்வாறு வடக்கிருக்கத் தக்கவர்; இப்பொழுது என்னோடு வடக்கிருந்து உயிர் நீப்பதற்கு யான் உடன் படேன்" என்றார்.

சோழன் சொல்லிற்கு மறுமொழி கூற முடியாதவராய்ப் பொத்தியார் தம் இருப்பிடம் நோக்கிப் புறப்பட்டார். இங்கு கோப்பெருஞ் சோழனது உள்ளத் தூய்மையையும், அற உணர்ச்சியையும் என்னென்ரைப்பது? மேலும், அவர், "அருள் மகப்பெறுகிலார்க் கணைகதி நாத்தியென்று தெருள்மறை செப்பலானும்" என்ற இல்லற இயல்பையொட்டி இல்லறத்தான் நடத்தல்வேண்டுமென்று அந்நெறி தவறாதபடி தன் நண்பரை நல்வழியில் செலுத்தினார்.

பின்பு, பொத்தியார் உறையூர்க்குச் சென்று அங்குள்ள மன்றத்தைக் கண்டார். அம் மன்றம் சோழன் இன்றிவறிதே சந்திரனில்லாத வானம்போல் ஒளிமங்கியிருத்தல் கண்டு,

"பெருங் களிறிழந்த பைதல் பாகன்
அதுசேர்ந் தல்கிய அழுங்க லாலை
வெளில் பாழாகக் கண்டு கலுழ்ந் தாங்கு"

ஒரு அரசயானையை இழந்த வருத்தமுடைய பாகன், அந்த யானை இதுவரையில் தங்கியிருந்த யானைக் கூடத்தில் அந்த யானையைக்கட்டியிருந்த கம்பம் வறிதே நிற்கப் பார்த்து உள்ளம் கலங்கியதுபோலப் பெரிதும் கலங்கினார்.

அப்பொழுது அவருள்ளம் மிகவும் துயரத்தை யடைந்தது. சிறந்த புலவர்கட்கெல்லாம் அடைக்கல மாக இருந்த உபகாரமுடைய உத்தமனைக் கவர்ந்து செல்லுதல் தக்கதன்று என்று எண்ணாத கூற்றம் இச் சான்றோன் இன்னுயிரைக் கவர்ந்துசென்றது; ஆதலால், இக்கொடிய கூற்றத்தைப், "புலவர்களே அனைவரும் வருவீர், நம் வருத்தமுடைய சுற்றத்துடன் ஒன்றுகூடி நாம் நம் மனமார வைவோம்" என்கிறார்.

இப் பொத்தியார், கோப்பெருஞ் சோழனில்லாமல் உறையூரிலிருந்து வாழும் வாழ்க்கையை ஒரு வாழ்க்கை யாக எண்ணாமல் நெருப்பிடையில் வாழ்வதுபோல் சின் னாள் இருந்து வந்தார். இவர் மனைவி ஒரு ஆண்மக வைப் பெற்றெடுத்தாள். பொத்தியார் தன் நண்பர் "புகழ்சால் புதல்வன் பிறந்த பின் வாவென்றியம்பிய சொற்படித் தன் வீட்டைவிட்டுப் புறப்பட்டார். சோழன் வடக்கிருந்த இடத்தை யடைந்தார். அப் பொழுது சோழன் வடக்கிருந்து உயிர் நீத்த இடத்தில் நடுகல்லமைத்து அதில் சோழனுருவத்தைச் செதுக்கி யிருந்தனர். பொத்தியார் அக் கல்லருகே போய் "என் னிடம் யாது மற்றிசை வெய்யோயே" என்று அக் கல்லிலிருந்த உருவத்தை நோக்கிக் கேட்டார். அவ்வுரு வம் பொத்தியாரிருக்க இடங் கொடுத்தது.

இந்த ஆச்சரியமான நிகழ்ச்சியைக் கண்ட பொத்தி யார்,

..................."நடுகல் லாகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற உடம்போடு
இன்னுயிர் விரும்பும் கிழமைத்
தொன்னட் புடையார் தம்முழைச் செலினே"

என்று பாடி, உயிர் விரும்பும் இன்னுயிர் நண்பராயுள்ளவர் நடுகல்லாகிய சிறிய இடத்திலிருப்பினும் தம்மிடம் வந்த நண்பர்க்கு உயிர் நீங்கிய பின்பும் இடங்கொடுத்துதவுவர்போலும் என்று தலையாய நட்பின் தன்மையை எண்ணி எண்ணி இன்புற்று மகிழ்ந்தார். பின்பு தாமும் அவருடன் வடக்கிருந்து உயிர் நீத்தார்.

இதுகாறும் கூறியவந்த கோப்பெருஞ் சோழன் வரலாற்றால் அவ்வேந்தன் எல்லார்க்கும் இனியன்; நீதியோடு அரசு புரிந்தவன்; அறந்தவறாதவன்; குடிமக்களை நன்னிலையிலிருக்க வைத்துப் பார்த்து மகிழ்பவன்; நட்பிற் கிருப்பிடமானவன்; பெருங் கொடையாளன்; சிறந்த வீரன்; மானம் பெரிதுமுடையவன்; இன்னும் பற்பல நற்குணங்கட்கு இருப்பிடமானவன் என்பது தெரிய வருகின்றது.

இவ் வேந்தன் குணங்கள் எல்லாம் அப்படியே பிசிராந்தையாரிடம் குடிகொண்டிருந்தன. நட்பிற் சிறந்தார் இவரிருவரே; இவர்களிருவரும் தலையாய நட்பினர்; இத்தகையாரை உலகில் காண்பது அரிது; இவர்களிருவரையும் திருக்குறள் உரையாசிரியர் பரிமேலழகரும், மற்றும் பலரும் புகழ்ந்துள்ளார்கள். "புணர்ச்சி பழகுதல் வேண்டா" என்ற திருக்குறளை இவர்கள் இருவரையும் கருத்தில்வைத்தே திருவள்ளுவர், இயற்றியுள்ளார் என்று கூறத் தடையில்லை.

பிசிராந்தையார், தம் நண்பர் கோப்பெருஞ் சோழர் வடக்கிருந்து உயிர்விடத் துணிந்தார் என்பது கேட்டுப் பாண்டி நாட்டிலிருந்து புறப்பட்டு உறையூரை யடைந்து அவர் இருக்குமிடந்தேடி அவரருகே வந்து அமர்ந்து தாமும் வடக்கிருந்து உயிர் விடத் துணிந்தார் என்றால் அவர் உள்ளப் பான்மையைக் கொண்டாடாதவர் இருக்க முடியாதன்றோ? உணர்ச்சி மிக்க உயிர் நண்பர் நம் பிசிராந்தையாரே யாவர்.

இவருக்கு அடுத்தபடியாகப் பொத்தியாரைச் சொல்லலாம். பொத்தியார் காலங் கடந்தால் துயரம் மாறிவிடும் என்பதில்லாமல் தமக்கு மகன் பிறந்த பின் அங்குவந்து தம்முயிரை விடுவாராயின் அவர் நட்பினியல்பை நாம் என்னென்று கூறுவது. கருவூர் பெருஞ்சதுக்கப் பூதனார்முதல் பலர், சோழவேந்தருடன் வடக்கிருந்து உயிர் நீத்துள்ளார் என்பது அப் பூதனார் பாடலால் தெரியவருகின்றது. இப்படிப் பல சான்றோர் உள்ளமுவந்து பிணிக்க நடந்து கொண்டவன் நம் கோப்பெருஞ் சோழனாவான்.

“ நவில்தோறும் நூல்நயம் போலும் பயில்தோறும்
பண்புடை யாளர் தொடர்பு. ”

# 7. கணவனைக்காத்த காரிகை

செந்தமிழ் நாட்டின் தலைநகரமாகிய மதுரையில் மாறன் என்னும் பெயருடைய பாண்டியன் அரசியல் தவறாமல் அரசு செலுத்தி வந்தான். இப்பாண்டியன் உருவிலும், திருவிலும் ஒப்பற்றவனாய் விளங்கி வந்தான். இவனிடம் நற்குணங்கள் பலவும் நிரம்பியிருந்தன. இவன் காலத்தில் சோழ நாட்டையாண்ட சோழன், தன்னுடைய திருமகளாகிய மங்கையர்க்கரசியை இந்தப் பாண்டியனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். மங்கையர்க்கரசியும், மாறனும் மனமகிழ்ந்து இல்லறம் நடத்தி வந்தனர், இவர்கள் வாழ்க்கை இன்பவாழ்க்கையாக நடந்து வந்தது.

பாண்டியன் நீதியாக அரசியல் நடத்திவரக் குலச்சிறையார் என்னும் பெயரமைந்த அமைச்சரைத் தன்னுயிர் போல் பெருந்துணையாகக் கொண்டிருந்தான். குலச்சிறையார், அரசனைச் செந்நெறி செலுத்துவதில் மிக்க வீரராய் விளங்கி வந்தார்; அரசன் நலமே தன் னலம் என்று எண்ணும் சிறந்த அமைச்சர் இவர்; எப்பொழுதும் நீதியை விடாது எடுத்துரைத்து அரசனை நல்வழிப்படுத்தி வந்தார்.

உலகில் வாழும் மங்கையர்க்கு எல்லாம் அரசியாகிய மங்கையர்க்கரசியாரொடும் பாண்டியர் குலம் விளங்க வந்த குலச்சிறையாரொடும் பாண்டியன் அரசு புரிந்து வரும்பொழுது அந்த நாட்டில் ஒளியுள்ள சிவநெறி குன்றி மறைக்குப் புறம்பான சமணநெறி ஓங்கி எங்கும் பரவத் தொடங்கிற்று. பாண்டியனும் சமணச் சமயமே உண்மைச் சமயமென்று அச்சமயத்தைச்

சார்ந்து ஒழுகத் தொடங்கினான். அரசன் எவ்வழி அவ் வழி குடிகள் என்பதற்கேற்பக் குடிகளும், சிவநெறியைக் கைவிட்டு அமண் மதம் புகத் தலைப்பட்டனர். மதுரை ஆலவாயுடையார் ஆலயத்திற்குச் செல்வார் அருகினர்; திருநீற்றின் ஒளி மழுங்கிச் சிவனடியார்களும் குறைந்தனர். எங்கும் சமணத் துறவிகளே காணத்தொடங்கினர். அவர்கையில் பீலியும் பாயும் காணப்பட்டன. பாண்டிய நாடு முழுவதும் பாழியும் பள்ளியும் பரவி விட்டன. சிவநெறி தழைத்திருந்த பாண்டி நாட்டில் அந்நெறி யொடுங்கிச் சமணநெறி இவ்விதம் வீறுகொண்டு தன் செல்வாக்கைச் செலுத்தத் தொடங்கிற்று.

இச்சமயம் சைவச்சமயமாகிய குழந்தை வளர்ப்பா ரின்றிக் கிடக்க, அக்குழவியை எடுத்து வளர்க்க நற்று யும், செவிலியும் போல் மங்கையர்க்கரசியாரும், குலச் சிறையாரும் தோன்றி விளங்கினார்கள். இவர்களிரு வரும் பாண்டி நாட்டிற்குத் தெய்வம் போலிருந்து அதற்கு நன்மை தேட முயன்றனர்; எவ்வாறு இந்த நாட்டை நல்வழிப் படுத்தலாம் என்று எண்ணி எண்ணி ஒருவழிதேடப் பலவாறு ஆலோசித்துப் பார்த்தனர்; அரசன் சமண சமயத்தில் மிக்க பற்றுடையவனாய்த் தழுவியுள்ள தன்மையை நன்கு அறிந்தனர்; தம்முடைய சிவநெறியின் பற்றினை அவன் காணாதவாறு மறைமுக மாக ஒழுகிவந்தனர்.

பாண்டியன் தேவியும், அமைச்சரும் சைவநெறி தழைத்தோங்க வழிகாணாமல் மிகவும் மனம் வருந்தி யிருந்தனர். பிறைபணிந்த பெருமானருளால் சீகாழி யில் அவதரித்த திருஞான சம்பந்தர் திருமறைக்காட் டில் இறைவனை வணங்க எழுந்தருளி யுள்ளார் என்ற செய்தி தேவியாரும், அமைச்சரும் கேட்டறிந்தனர். இச்

செய்தி கேட்டபொழுது, இருவரும் அளவிலா ஆனந்த மடைந்தனர். இருவரும் தம்முள் கலந்து ஆலோசித்துப் பிள்ளையாரைப் பாண்டி நாட்டிற்கு வரவழைக்க எண்ணினர்; தூதுவர் சிலரையழைத்துப் பாண்டி நாட்டின் நிலைமையைக் காழிப் பெருமானறியக் கூறி அவரை அன்போடு அழைத்து வருமாறு அனுப்பினர். தூதுவர், புறப்பட்டுத் திருமறைக் காட்டை யடைந்தனர்.

இத்தூதுவர் தாம் வந்த செய்தியைத் திருஞான சம்பந்தப் பெருமானுக்குச் சொல்லியனுப்பினர். அப் பெருமான் உள்ளே வரும்படி ஆணையிட்டனர். தூதுவர் சம்பந்தர் திருமுன் சென்று தலையால் அவரை வணங்கி வாய்பொத்திக் கைகட்டித் தாம் வந்த செய்தியைப் பின்வருமாறு தெரிவித்தனர்.

"கன்னிநா டமணர் தம்மால் கட்டழிந்து தங்கள்
மன்னனும் அவர்கள் மாயத்தழுந்த மாதேவியாரும்
கொன்னவில் அயில்வேல் வென்றிக் குலச்சிறை யாரும்கூடி
இந்நிலை புகலி வேந்தர்க் கியம்பும் என்றிறைஞ்சி விட்டார்"

என்று அவர்கள் கூறக்கேட்ட அரனடியார்கள் பலரும், மிகவும் வருந்திச் சமண இருளையகற்றிச் சைவ ஒளியை நிலைபெறச் செய்யக் காழி வேந்தரை வேண்டினர்.

அவ்வாறே சம்பந்தப் பெருமானும் பாண்டி நாட்டிற்கு எழுந்தருளுவதாகத் திருவுளங் கொண்டார். இவர் திருவுள்ளத்தை யறிந்தவுடன் அங்கிருந்த திருநாவுக்கரசர், சம்பந்தரை நோக்கித் "தாங்கள் மதுரைமா நகர்க்கு எழுந்தருளுவீராயின் அங்குள்ள சமணர்கள் கொடுந்தொழில் புரிவதில் கைதேர்ந்தவர்களாவர்; தாங்கள் அங்கு எழுந்தருளினால் தங்களுக்கு ஏதாவது ஏதம்

செய்வார்கள்; ஆதலால், அங்கெழுந்தருளினால் தீங்கு விளையக் கூடும்" என்று மொழிந்தார்.

அவ்வருள்மொழி கேட்ட சம்பந்தர், ஐயனே! "பரசுவது நம்பெருமான் கழல்கள் என்றால் பழுது அணையாது" என்று உறுதிமொழி கூறி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு இடையிலுள்ள திருப்பதிகள் எல்லாம் வணங்கிவழிபாடாற்றி, மலையும், கானகமும், மருதவைப்பும் கடந்து சம்பந்தர் மதுரைமா நகர்க்கருகில் வந்தடைந்தார்.

சம்பந்தர் மதுரைக்கருகே வந்தபொழுது அமணர்கள் உள்ளம் பதைப்பத் தீக்கனாக்களும், துன்னிமித்தங்களும் பற்பல நிகழ்ந்தன. அருகர்க்கென அமைந்த பள்ளியின்மீதும், பாழியின்மீதும், அசோக மரத்தின் மீதும் கூகையும், ஆந்தையும், ஏனைய தீய புள்ளினங்களும் அழுதரலிட்டுக்குழறின. அவற்றை அரசர்க்கு அறிவிக்க அமணர்கள் அரசன் மாளிகையை யடைந்தனர்.

அடைந்த அமணர்கள் பாண்டிய மன்னனை நோக்கி, "வேந்தே! நாங்கள் சில தீய கனாக்களைக் கண்டோம்; நம்முடைய கடவுள் வீற்றிருக்கும் அசோகமரம், வேருடன்சாய்ந்து அப்பெருமான்மேல் விழக்கண்டோம்; அளவற்ற சிவனடியார்கள் மதுரையுள் வந்து புகக் கண்டோம்; ஒரு பெரிய கடுங்கனலில் எங்கள் உயிரினும் சிறந்த தாங்கள் குளிக்கக் கண்டோம்; அதன்பின் அத் தழலினின்றும் தாங்கள் வெளிவரக் கண்டோம்; நம் முடைய அடியார் கூட்டத்தை ஒரு பசுங்கன்று துரத்தக் கண்டோம்; அக்கன்றிற்குப்பயந்து அடியார்கள் பலரும் நிழலிலா மரங்களில் ஏறக்கண்டோம்; என்று இன்னும் பலபடியாகத் தாம் கண்ட கனவை விளக்கியுரைத்தனர்.

இவ்வாறு அமணர்கள், தீக்கனுக்களைக் கண்டு நடுங்கி அரசனிடம் கூறும்பொழுது பாண்டிமாதேவி யாரும், அமைச்சரும் நன்னிமித்தங்கள் பல கண்டு களிகூர்ந்தார்கள். இப்படி இவர்களிருவரும் மனமகிழ்ந் திருக்கும் பொழுது, திருஞான சம்பந்தர், மதுரைக் கருகில் வந்தார் என்று கேட்டு உள்ளம் பூரித்தார்கள். சம்பந்தப் பெருமான் திரு அருளால் பாண்டியன் திருந் தக் கூடுமென்று எண்ணினர் மங்கையர்கரசியார், மகிழ்ச்சியோடு குலச்சிறையாரை நோக்கி, "ஞானப் பெருவிளக்காய் விளங்கும் நம்பெருமான் இங்கு எழுந் தருளும் பேறு பெற்றோம்; அப்பெரியாரை நல்ல சிறப் புடன் எதிர்கொண்டு நல்வரவு கூறி இந்நகருள் அழைத்து வருக" என்று பேரன்புடன் மொழிந்தனர். அம்மொழியைச் செவியாரப் பெருவிருப்புடன் கேட்ட அமைச்சரும், மதுரையின் புறத்தேபோய் காழிப் பெரு மானைக் கண்களிக்கக் கண்டு வரவேற்றனர்; அப் பொழுது அழகிய முத்துச் சிவிகையில் ஞானத்தின் திருக் கொழுந்து, மதிபோன்ற வெண்குடை நிழற்ற எழுந் தருளக் கண்டார்; சைவத்திருத் தொண்டர்கள் சூழ்ந்து மறையொலி செய்து கொண்டுவந்தனர்; இத்தகைய கண்கொளாக் காட்சியைக் காணும் பேறு பெற்ற குலச்சிறையார், இருகைகளையும் உச்சியிற் குவித்துக் கண்ணீர்வார மெய்சிலிர்ப்படைய உடல் பெற்ற பேறு இன்று பெற்றேன், என்று தரையில் வீழ்ந்து வணங்கி ஞர். இவரது சிறந்த பக்தியைக் கண்ட தொண்டர் கள், இவரருகிற் சென்று இவரை வணங்கி எழுந்திருக் கும் படி வேண்டினர்.

அமைச்சர் பெருமான், அரசராய் மெய்ம்மறந்து படியில் கிடந்தார். அமைச்சர் பக்தியைத் தொண்டர்

கூறக்கேட்டுப் பெருவியப்படைந்து ஞானசம்பந்தர், சிவிகையிலிருந்து இறங்கித் தம்முடைய தாமரைமலர் போன்ற கைகளால் எடுத்தார். அமைச்சர் அகங் குளிர்ந்து கண்குளிர்ந்து முன்னின்று தொழுதார். அப் பொழுது சம்பந்தப் பெருமான், "பாண்டி மாதேவி யாகிய சோழன் திருமகளாரும், தாங்களும் திரு அருள் பெற்று வாழ்வீராக என்று வாயார வாழ்த்தினர்.

இவ்வாறு வாழ்த்துப்பெற்ற அமைச்சர், ஈசனடி யார்களுள் சிறந்த திருஞானசம்பந்தப் பெருமான் எழுந் தருளப் பெற்றதற்குப் பெரிதும் மகிழ்ச்சியடைந்து,

"சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்ற பேறிதனால்
என்றைக்குந் திருவரு ளுடையோம்
நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்
நற்றமிழ் வேந்தனு முய்ந்து
வென்றிகொள் திருநீற் றொளியினில்
விளங்கு மேன்மையும் படைத்தனம்."

என்று அப்பெரிய அடியாரைக் கொண்டாடி வாயார வாழ்த்தினர். அடியேன் பாண்டிமாதேவியின் ஆணையை யேற்று இங்கு எதிர்கொள்ள வந்தேன் என்று சம்பந்தப் பெருமானிடம் விண்ணப்பித்துக்கொண்டார். இருவ ரும் ஒருவரோடொருவர் அளவளாவிய பின்னர், சம்பந்தர், அமைச்சரை நோக்கி, "இந்த நகரில் கைலைக்கிறைவன் திருவாலவாய் எங்கு உள்ளது," என்று வினவினர். உடனே அமைச்சர் பெருமான் சோலைகளினிடையில் உயர்ந்து விளங்கும் கோபுரத்தைச் சுட்டிக் காட்டி,

"இதுவே இறைவன் இனிதமர்ந்தருளும் ஆலவாய்" என்று மொழிந்தனர்.

ஞானசம்பந்தர், ஆலயத்தைக் கண்டவுடன் தன் இருகரங்களையும் உச்சிமேல் குவித்துத் தலை வணங்கிக் கண்ணீர் வாரத் தம்முடைய தெய்வமணக்குந் திருவாயால்,

"மங்கையர்க் கரசி வளவர் கோன்பாவை
வரிவளைக் கைமட மானி
பங்கயச் செல்வி பாண்டி மாதேவி
பணிசெய்து நாள்தோறும் பரவ
பொங்கழ லுருவன் பூத நாயகன்
நால்வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே"

என்ற தேனினுமினிய சுவையுள்ள தெய்வப் பாசுரம் பாடிப் பெரும் மகிழ்ச்சியில் திளைத்தார். சம்பந்தப்பெருமான், இங்கு இவ்வாறு மகிழ்ந்திருக்கையில் மங்கையர்க்கரசியார் செய்கையைப் பற்றிக் கவனித்துப் பார்ப்போம்.

திருஞான சம்பந்தரை எதிர்கொண் டழைக்க அமைச்சனாரை யனுப்பிவிட்டு, மங்கையர்க்கரசியார் தம் தலைவரிடம் சென்று தான் ஆலயம் சென்றுவர அநுமதி வேண்டினார். அரசனும், தம் தேவியார் வேண்டுகோளுக்கிசைய தம் பணிப் பெண்களுடன் மங்கையர்க்கரசியார், ஆலயம் நோக்கிப் புறப்பட்டனர்; ஆலயம் அடைந்து ஆலவாய் அவிர் சடைக்கடவுளை மனமாரத் தொழுது வணங்கினர்.

பின்பு தேவியார், திருஞான சம்பந்தப் பெருமான் அங்கு எழுந்தருளுவர் என்று வரவேற்று நின்றனர். இவர் எதிர்பார்த்தபடி பெருமான் எழுந்தருளும்பொழுது அவர் எதிர்செல்லாது, ஆங்கொரு மருங்கில் ஒதுங்கி நின்றார். அப்பொழுது சம்பந்தரோடு உடன்வரும் அமைச்சர் பெருந்தகை, சம்பந்தரிடம் அம்மையாரைக் காட்டி, "ஐயனே! இவர்தாம் மங்கையர்க்கரசி, வளவர் கோன்பாவை" என்று இயம்பினார். உடனே அப் பெருமான், தாயை யடையும் இளஞ்சேயைப்போல் அவ்வம்மையார் இருந்த இடத்திற்கு விரைந்துசென்றார்.

திருஞான சம்பந்தர் திருமேனியைத் தரிசித்த அளவில் அளவிலா ஆனந்தமுடன் அரசியார், அப்பெரு மான் அடிகளில் முடியுற வீழ்ந்து பணிந்தார். பின்பு, தம் கண்களாரக்கண்டு "யானும் என்பதியும் செய்ததவம் என்னே" என்றார்.

இவ்வாறு கூறிய பணிமொழியைக் கேட்ட காழிப் பெருமான், அவ்வன்னையை எதிர்வணங்கி, "தாயே! தங் களைப்போல் சிவநெறியைக் கைவிடாது காத்து வாழும் உம்மைக் காணவே இங்கு வந்தேன்" என்றார். இம் மொழிகேட்ட அம்மையார், ஒன்றும் பேசாமல் முக மலர்ந்து மீண்டும் பணிந்து நின்றார்.

மங்கையர்க்கரசியார், சம்பந்தப் பெருமானிடம் விடைபெற்றுத் தம்மரண்மனை வந்தடைந்தார். சம்பந் தப்பெருமான், மந்திரியாருடன் ஆலயத்தை வலம்வந்து பணிந்து வாயாரத் துதித்து மீண்டார்.

உடன்வரும் அமைச்சனார், அவரை அந்நகரிலிருந்த திருமடத்திற்கு அழைத்துச்சென்றார். அங்கு மற்று முள்ள அடியார்களுடன் சம்பந்தப்பெருமான் அமர்ந்

திருந்தனர். சம்பந்தருடன் சிவனடியார்கள் அனைவருக்கும் அமுதினும் இனிய உணவுகளை அமைச்சனர், உதவி உபசரித்தார். அன்று நாள்முழுதும் சம்பந்தருடன் அமைச்சர்பெருமான், சிவநெறியில் அறியவேண்டிய அரிய பொருள்களைக்கேட்டு மகிழ்ந்திருந்தனர். கதிரவன் மேற்றிசையில் போய்த் தாழ்ந்து மறைந்தான்.

சம்பந்தர் மதுரைக்கு வந்ததுபற்றி அழுக்காறு கொண்ட சமணர்கள் அரசனிடம் சென்று, "வேந்தர் பெருமானே! சீகாழியினின்றும் மறைச்சிறுவன் ஒருவன் நீறணிந்த அடியார் குழாத்துடன் இங்கு வந்துள்ளான்" என்று கூறினர். அரசன் சமண மதத்தைச் சார்ந்தவன்; அமணர்பாலன்புடையவன் ஆதலின்; இங்கு இப்பொழுது வந்துள்ள அச்சிறுவனை யாம் செய்யத்தக்கது யாது? என்று சினங்கொண்டு வினவினன். அமணர் அரசன் குறிப்பை யுணர்ந்தவுடன் அவர்கள், "அரசே! நாம் ஏதாவது உபாயம் எடுத்து அவ்வந்தணனை இந்த நகரினின்றும் அப்புறப்படுத்தல் வேண்டும். அவன் தங்கியுள்ள மடத்தில் எங்கள் மந்திரவலிமையால் தீயிடுவோம்; உடனே அவன் இந்த நகரைவிட்டு அகல்வான்" என்றனர். இச் செய்கைக்கு அரசன், உடன்பட்டனன்.

அமணர், அன்றிரவு திருமடத்தின்மேல் மந்திர மூலம் தீயை ஏவினர். ஆயினும், ஐந்தெழுத்து ஓதும் அடியார் மடத்தில் அவர்கள் ஏவிய மந்திரம், செல்ல வலியற்றிருந்தது. அந்த நிலையில் தமக்கு இழிவு ஏற்படுமென்று அத்தீயோர் தம் கைகளால் அத்திருமடத்தில் தீயினை வைத்தார்கள்.

தீயினைக்கண்ட சிவனடியார் பயந்தோடிச் சம்பந்தப் பெருமானிடம் முறையிட்டனர். அதுகேட்ட பெரு

மான், மிகவும் உள்ளம்வருந்தி, இச்செயல் சமணர்தான் செய்திருத்தல் வேண்டும். சிவனடியார் துயிலும் பொழுது இராக்காலத்தில் திருமடத்தில் பாவிகள் தீயிடத் துணிந்தனரே! இவ்வாறு இவர்கள் செய்யக் காரணம் அரசன் முறையிலா நெறியே என்றறிந்து,

"வெய்யதீங்கிது வேந்தன் மேற்றெனும் விதிமுறையால்
செய்யனே திருவால வாயெனும் திருப்பதிகம்
சைவர் வாழ்மடத் தமணர்களிட்ட தீத்தழல்போய்ப்
பையவே சென்று பாண்டியற் காகெனப் பணித்தார்"

பெருமான், "பையவே சென்று பாண்டியற்காகவே' என்று பணித்தவுடன் அவ்வெம்மை சென்று மன்னவன் மேனியைப் பற்றி எரித்தது.

இராப்பொழுது கழிந்து கதிரவன், கீழ்த்திசையில் வந்து தோன்றினன். மன்னனது உடலில் பற்றி எரிக்கும் எரியின் வெம்மையை நீக்க அமணர்கள் வந்து சூழ்ந்தனர். சூழ்ந்த அமணர் தமது மயிற்பீலிகள் கொண்டுதடவி மந்திரம் ஓயாது ஓதி முயற்சித்தனர். ஒன்றும் பலிக்காமல் மேன்மேல் வெப்புநோய், வேந்தன் உடலை வெதுப்பிற்று. அரசன், அமணர்களை நோக்கி, "நீங்களனைவரும் இவ்விடம் விட்டு அகன்றுபோய்விடுங்கள்" என்று கூறி, ஆவிசோர்ந்து மயங்கி விழுந்தான்.

அருகிலிருந்து இந்த நிகழ்ச்சியைக்கண்ட மங்கையர்க்கரசியார், உள்ளம்பதைத்து நடுநடுங்கித் தன் அருகே நிற்கும் அமைச்சரை நோக்கி, "அந்தோ காழி அந்தணர் அமர்ந்திருந்த திருமடத்து அமணர் வைத்த தீ இங்கு என்பதியின் உடம்பில் பற்றியதோ?" என்று சொல்லிப் புலம்பியழுதார். அப்பொழுது அறிவில் மிக்க அமைச்சர், "இந்த நோய் தீர்க்கவல்லார் திருஞானசம்பந்தப்

பெருமானே யாவர். அவர் இங்கு எழுந்தருளி அரசரை அருளோடு நோக்கினுல் உடல்பிணி, பிறவிப்பிணி, இரண்டு மகலும்'' என்ருர்.

திருஞான சம்பந்தர் பெயர், மன்னன் செவியில் விழுந்ததும் அரசன், அயர்வு நீங்கி, "அப்பெருமானை இங்கு அழைமின்" என்ருன். உடனே தேவியார், அமைச்சனுரொடு புறப்பட்டுச் சம்பந்தர் எழுந்தருளி யிருந்த திருமடத்தை யடைந்தார். அம்மடத்தில்,

"ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை
தேனக்கமலர்க் கொன்றைச் செஞ்சடையார்சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்."

கண்டதும் நிலமிசை வீழ்ந்து தொழுதனர் அப்பெருமான் திருமுன்நின்று,"சைவம் தழைத்தோங்க வந்த ஐயனே! அமணர்கள் செய்த தீத்தொழில், மன்னவன் உடலில் வெப்பு நோயாய் வாட்டுகின்றது. அமணர் எடுத்த உபாயம் ஒன்ருலும் பயன் ஏற்படவில்லை. இப்பொழுது தாங்கள் வேந்தன்பால் எழுந்தருளி அந்த நோயையும் போக்கி, மன்னவனறிய அக்கொடுந்தொழில் அமணரையும் வென்று, சைவம் தழைத்தோங்கச் செய்வீர்" என்று இவ்வாறு அன்பர்களிருவரும், வேண்டி நின்றனர்.

அப்பொழுது சம்பந்தர், அவர்களுக்கு அபயம் ஈந்து "ஒன்றிற்கும் அஞ்சவேண்டாம்; நீங்கள் மகிழ்ச்சியடைய அமணரையும் வாதில் வென்று, பாண்டியனையும் வெண்ணீறணியும் சிவனடியானுக்கி விடுவேன்" என்று மொழிந்தருளினர். அவ்வருண்மொழி கேட்டவுடன்

"இனி எங்கட்கு ஒரு குறையும் இல்லை; இவ்வளவே எங்கள் உள்ளம்" என்றனர்.

அப்பொழுது ஞானசம்பந்தப் பெருமான், ஆலவாயிற்சென்று எம்பெருமானைப் பணிந்து எழுந்து இறைவனை நோக்கி, ஐயனே!

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாதில் வென்று அழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுடனாய பரமனே.

என்று பதிகம்பாடி யருளினார். இறைவனும் அமணரை வெல்ல ஆணை தந்தார். ஆணையைப் பெற்றபின்புசம்பந்தர் மன்னவன் மாளிகை நோக்கிப் புறப்பட்டார்.

அப்பொழுது அரனடியார் ஆரவாரித்தனர்; தாரைகள் பெரிதும் ஆர்த்தன; மங்கல மறைகள் மாசின்றி முழங்கின. அருமறை அந்தணர் முத்துச் சிவிகையில் இவர்ந்து எழுந்தருளினர்; விரைவில் அரசனிருந்த இடத்தையடைந்தார். அரசனும், அவ்வந்தணர் பெருமானைக் கண்டான்; கைகுவித்து வணங்கித் தன்னருகில் ஆதனத்திலமரச் செய்தான்.

அந்தணர் அரசனிடம் வந்தார் என்பது கேட்டுச் சமணர் யாது நேருமோ, என்று அவர்கள் பலரும் ஒன்று கூடிச் சம்பந்தரை நாற்புறமும் சூழ்ந்து நின்றனர். அப்பொழுது இச்சமணர் குழுவால் இச் சிறுவர்க்கு ஏதேனும் தீங்கு நேருமோ? என்று மங்கையர்க்கரசியார் பயந்தனர், அவர் துணிவடைந்திருக்க, சம்பந்தர்,

மானினேர்விழி மாதராய்வழுதிக்கு மாமெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவன் என்றுநீபரி வெய்திடேல்

ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட் கெளியேனலேன் திருவாலவாயரன் நிற்கவே."

என்று தெய்வத் திருப்பதிகம் பக்தி மேலீட்டால் பாடி அம்மையார் மனம் தெளியுமாறு செய்தனர். மன்னவன், சமணரையும், சம்பந்தரையும் நோக்கி, என்னுடம்பி லுள்ள இத்தீப்பிணியைத் தீர்த்தவரே வாதில் வென் றவர் என்று பகர்ந்தான். உடனே சமணர், தம்முடைய பீலிக்கற்றையா லிடப்புறம் தடவினர். அருமறையந்த ணர். திருநீற்றை மருந்தாகக்கொண்டு ஐந்தெழுத்து மந்திரத்தால் வலப்புறம் பூசினர். அப்பொழுது வலப் புறமிருந்த வெப்பம், இடப்புறமணைந்து இடப்புறத்தை இருமடங்கு வெதும்பிற்று. அதுகண்ட வேந்தன், சமணரை நோக்கி, "என்னுடம்பில் வலப்புறம் வீட் டின்பமெனக் குளிர்ந்தும், இடப்புறம் வெம்மையான நரகமென மிக வெதும்பியும் என்னைத் துன்புறுத்து கின்றதே, நீவிர் என்ன மந்திரம் சொல்லி என் வெப்பு நோயை முன்னினும் அதிகமாக்கினீர்" என்று கடுங் கோபங் கொண்டான்; பின்னும் அந்த அமணர்களால் பலனில்லை என்பது கண்டு அவர்களை அவ்விடம் விட்டு அகலுமாறு பணித்தான்; அதன்பின் சம்பந்தரை அருகி லழைத்துத் தனக்கு அருள்புரிய வேண்டினான்; அப் பெருமான் முன்போல் மந்திரம் ஓதி திருநீறு பூசினர்; வெப்புநோய் முழுதும் நொடிப்பொழுதி லகன்றது.

அப்பொழுது அரசன் அளவிலா ஆனந்தமடைந்து, "அடியேனை நல்வழிப்படுத்த வந்த எம்பெருமானே நும் திருவடியை வணங்குகின்றேன்" என்றான். மன்னவன் பிணி நீங்கியதைக்கண்ட மங்கையர்க்கரசியாரும், அமைச் சரும் சம்பந்தர் திருவடிகளில் பணிந்து, "இன்று நாங்க

னும் எம் வேந்தரும் பெறற்கரிய பெரும்பேறு பெற்று உய்ந்தோம்" என்று பெருமகிழ்வடைந்தனர்.

இந்த நிகழ்ச்சியைக் கண்டபின்பும் அழுக்காறு கொண்டு சமணர்கள் ஞானசம்பந்தரோடு வாதிட்டனர். இருமதங்களில் உண்மையான மதம் எது என்பது அறிய நெருப்பிலும், நீரிலும் இருவரும் தத்தம் மந்திரங்களை ஓலையில் எழுதியிட்டு வாதாடிச் சமணர்கள் தோல்வி யடைந்தனர். பின்பு, அமணர்கள் தாம் அரசனிடம் வஞ்சினம் மொழிந்திருந்தபடி தாமே கழுவிலேறித் தம்முயிர் துறந்தனர்.

பாண்டியனை நல்வழிப்படுத்த அரும்பாடுபட்டு மங்கையர்க்கரசியார் அமைச்சரைத் துணையாகக் கொண்டு தாம் எண்ணியவாறு செய்து முடித்தனர். இவ்வாறு தம் கொழுநனையும் நல்வழிப்படுத்தித் தமிழ் நாட்டில் சைவநெறி நிலைக்கச்செய்த மங்கையர்க்கரசி என்னும் நங்கையர்க்கரசியைச் சேக்கிழார்,

"மங்கையர்க்குத் தனியரசி எங்கள்தெய்வம் வளவர்
திருக்குலக் கொழுந்து வளைக்கைமானி
செங்கமலத் திருமடந்தை கன்னிநாடாள் தென்னர்குலப்
பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளினாலே இருந்
தமிழ்நாடு உற்றஇடர் நீக்கித்தங்கள்
பொங்கொளி வெண்திருநீறு பரப்பினாரைப் போற்றுவார்
கழல் எம்மால் போற்றலாமே."

என்ற செய்யுளால் தெய்வப்பாவை என்று வாயார வாழ்த்தி வணங்கி வழிபடுகின்றார்.

---

# 8. பொய்யா நாவிற் புலவன்

செந்தமிழ் சீர்பெற்று விளங்கிய பாண்டிய நாட்டைத் தமிழர் அனைவரும், நன்கு அறிவர். இந்த நாட்டில் இளைஞர் முதல் முதியவர் வரையாவரும், தமிழ் மொழியிடத்தில் ஆர்வமுடையவராவர். இத்தகைய மொழிப்பற்று மிக்குள்ள நாட்டில் திருவாதவூர் என்று ஒரு சிறந்த பழைய ஊர் உள்ளது. இந்தத் திருவாதவூரில் அந்தணர் மரபில் கபிலர் என்னும் நற்றமிழ் நாவலர் ஒருவர், தமிழ்மொழி செய்த தவப்பயனால் தோன்றினார்.

கபிலர், தம் பெற்றோரால் நன்கு வளர்க்கப்பட்டு நற்குணமுடைய தம்போன்ற சிறுவர்களுடன் பழகிவந்தார்; அத்துடன் இளமையிலேயே நல்லொழுக்க முடையவராகவும் விளங்கினார்; இவருடைய பெற்றோர்கள் ஒரு நல்ல ஆசிரியரிடம் இவரைச் சேர்ப்பித்துக் கல்வி கற்குமாறு செய்தனர். கபிலர், தம் ஆசிரியரிடம் மிக்க அன்புடையவராய் அவருக்கு நாடோறும் வழிபாடுகள் இயற்றித் தாம் கற்கவேண்டிய கல்வியை முறையே ஊக்கமுடன் கற்றுவந்தார். முற்பிறப்பில் இவர் செய்த நல்வினைப்பயனால் ஒருமுறை ஆசிரியர் கூறியவுடன் இவர், அதனைநன்கு அறிந்துகொள்ளுவர்.

மாணவர்களில் சிலர், ஆசிரியர் கூறியவுடன் தம் உள்ளத்தில் ஏற்றுக்கொள்கின்றனர் ; வேறு சிலர், எத்தனை முறை ஆசிரியர் போதித்தாலும் புரிந்து கொள்வதில்லை; இதற்குத் தக்க காரணத்தை நாம் இத்திருக்குறளில் காணலாம்.

"ஒருமையிக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து."

என்ற இக்குறளின்படி இவர், முற்பிறப்பில் கல்வி, ஞானம் நிரம்பப் பெற்றிருந்தார் போலும்; அக்கல்வி இப்பிறப்பில் இவரை மீண்டுந் தேடிவந்தடைந்தது. ஆசிரியர், இவர் விரைவில் கல்விகளைக் கற்று வருவதைக் கண்டு இவர்பால் மிக்க அன்புடன் நடந்துகொண்டார். சில ஆண்டுகள் கடந்தன. கபிலரிடம் கல்வியறிவு வளர்ந்து வந்ததுடன், செய்யுள் இயற்றும் திறமையும் படிப்படியாய் மிகுந்து, சிறந்த செய்யுட்கள் இயற்றத் தொடங்கினர்; பிற்காலத்தவர், **'கபிலரது பாட்டு'** என்று கொண்டாடத் தக்க முறையில் சிறப்புறப்பாடும் நல்ல திறமை இவர்க்கு ஏற்பட்டது.

இவ்வாறு இவர் கல்வியிற் சிறந்தவரானபின், இல்லறத்தைக் கைக்கொண்டனர்: அதில் இவர் நல்லொழுக்முடையவராய் வாழ்ந்து வந்தனர். பின்பு இவர், அக்காலத்தில் மதுரையில் பாண்டியரால் வளர்த்து வந்த தமிழ்ச்சங்கத்தில் தலைமைப் புலவருள் ஒருவராயிருந்து தமிழை நன்கு ஆராய்ந்து வந்தார். இவரைப் போலவே இவர்காலத்தில் பரணர் என்றொரு சிறந்த புலவரிருந்தார். 'கபிலபரணர்' என்று காட்டப்படும் பழைய தொடரால் கபிலரும் பரணரும் சிறந்த புலவராக அக்காலத்தில் மதிக்கப்பட்டனர் என்பது தெரியவருகின்றது. கபிலர் ஒப்பற்ற உயர்ந்த புலவர் என்பதை மாறோக்கத்து நப்பசலையாரும், பெருங்குன்றூர்க் கிழாரும், பொருந்தில் இளங்கீரனும் புகழ்ந்து பாடியிருக்கும் செய்யுட்களால் நாம் நன்கு அறியலாம். இக்கபிலர் பாடிய பாட்டுக்களில் அமைந்துள்ள

சொல்நயமும் பொருள் நயமும் அவர் புலமையை நமக்குத் தெளிவாய் அறிவிக்கும்.

## வேள் பாரியோடு கேண்மை கொள்ளுதல்

கடையெழு வள்ளல்களுள் கார் நாணும் கரதல முடைய வேள் பாரி என்றொரு வள்ளல் இருந்தான். அவன், பாண்டி நாட்டில் உள்ள பறம்பு மலையையும், அதனையடுத்துள்ள நாட்டையும் ஆண்டு வந்தான். அவன், பெருங்கொடையாளனாய்த் தன்னிடம் வரும் புலவர்களையும், இரவலர்களையும் நிரம்பப் பொருள் கொடுத்துப் போற்றி வந்தான்; இவனிடம் இரப்பதற்கு வருவோர் எண்ணிய அளவிற்குமேல் பொருளீயும் பெருந்தகையாளன்; இரவலர்க்குத் தேர்களை வழங்கு பவன்; புலவர்கள் இவனை "மாரியன்ன பாரி" என்பர்; கைம்மாறு கருதாத கொடையாளி என்பர்; இவன், தன் பறம்பு நாட்டிலுள்ள முந்நூறு ஊர்களையும் இரவலர்க் குக் கொடுத்து உவந்தவன்; பொருள்களை வரையாது வழங்கி வந்ததுடன் பசியொடு வந்த இரவலர்க்குப் பசி தீர வேண்டிய உணவுகளைக் கொடுத்து நன்கு உபசரிப் பவன்.

ஒரு நாள் வேள் பாரி, தேரேறி முல்லை நிலத்தின் கண் சென்றிருந்த பொழுது, அங்கு ஒரு முல்லைக்கொடி தான் ஏறிப் படரக் கொள்கொம்பின்றி நாற்புறமும் காற்றில் அலைவதை நேரில் கண்டான். உடனே இவன் அக்கொடி அலையாமல் ஏறிப்படருமாறு தான் ஏறிவந்த தேரை அங்கு நிறுத்திவிட்டுத் தான் நடந்து சென்றான். இவ்வரலாற்றை,

"முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை

இரவாம லீந்த இறைவர்போல் நீயும்
கரவாம லீகை கடன்.''

என்ற வெண்பாவாலறியலாம். இதில் கூறியுள்ளபடி மயிலுக்குப் போர்வை கொடுத்தவன் பேகன் என்னும் வள்ளல் ஆவான். பாரி இப் பாடலில் உரைத்துள்ள படி ஓரறிவு உயிர்களிடமும் இரக்க குணம் காட்டத் தக்கவன் என்பது தெரிய வருகின்றது. இவ்வள்ளல், நடுநிலைபாக நீதி தவருமலிருந்து ஆட்சி செய்துவந்த தனுல் இவன் நாட்டில் மழை, காலந்தவருமல் பெய்து வந்தது; விளையுள்களும், நிரம்பப் பல்கி விளைந்து செழிப்பை உண்டாக்கின. சான்ருேர் பலர் எவ்விதக் கவலையுமின்றி இனிது வாழ்ந்து வந்தனர்; குடிமக்கள் பாரியை நிரம்பப் பாராட்டினர்.

இத்தகைய பெருவள்ளலான வேள் பாரி, கபிலர் காலத்தில் வாழ்ந்து வந்தான். இவ்வள்ளல் வண்மை களையும், நுண்ணறிவையும், பெருவீரத்தையும் பிற நற்குணங்களையும் கபிலர் கேட்டறிந்தார். புலவர் பெருமான், இக்கொடை வள்ளலைக் காணவேண்டு மென்று எண்ணினுர். கபிலர் ஒரு நாள் இவனைக் காண புறப்பட்டுப் பறம்பு நாட்டை நோக்கிச்சென்ருர். பறம்பு மலையை யடைந்து வேள்பாரியைக் கண்டார். பாரியும், கபிலர் பெருமையை நன்கு அறிந்துள்ளவன்; ஆதலின், அவர் தன்னிடம் வருவதற்குள் சிறிது தூரம் எதிர் சென்று புலவரைக் கண்டு, வணங்கி, மிக்க அன் புடன் வரவேற்ருன்; இன்சொல் பலவும் இயம்பித் தக்க படி உபசரித்தான்.

புலவர் பெருமான், பாரியின் சொல் நயம், இனிய குணம் முதலியவற்றை நேரில் கண்டு அவனுடு அள

வளாவினார். பிற உயிர்களிடம் ஒரு பயனையும் நோக்கா மல், பொருள்களை வழங்கும் அவன் பெருங்கொடை யைச் சிறப்புறப் பாராட்டினார்.

உடனே, அவ்வள்ளலிடம் உள்ள குணம், கபிலர் உள்ளத்தை உருகச் செய்ததால் அவனை நோக்கி,

"பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்;
மாரியும் உண்டீண்டு உலகு புரப்பதுவே."

என்றொரு சிறந்த செய்யுளைப் பாடினார். இப்பாடலின் பொருள்: "புலவர், 'பாரி பாரி' என்று ஒருவனையே புகழ்கின்றார்கள்; உலகத்தைக் காப்பவன் பாரி ஒருவன் மட்டும் அல்லன்; மாரியும் உலகைக் காத்து வருகின் றது." என்பதாம்.

மேலும் பாரி, கற்றார், கல்லாதார், மேன் மக்கள், கயவர் யாவராயினும் தன்னிடம் வந்த இரவலர்க்குப் பொருள்வழங்கு மியல்பினன் என்பதை ஒரு செய்யுளால் கபிலர் பாடி அவனைப் பாராட்டினார். அச்செய்யுளின் பொருள் : "ஒருவன், சூடும்பூவல்லாத எருக்கம் பூவைக் கொண்டு மாலை கட்டியணிந்தாலும் தெய்வம் விரும் பேம் என்னாமல் ஏற்றுக்கொண்டு அவனுக்கு அருள்புரி யும்; அதுபோல பாரி தன்னையடைந்த இரவலர் அறி வில்லாதவராயினும், இழிகுண முடையவ ராயினும் அவர்கட்குப் பொருள் நிரம்பக் கொடுத்து அனுப்பு வான்" என்பதாம்.

இவ்வாறு பாரியைப் பாராட்டிப் பாடிய செய்யுட் கள் புறநானூற்றிலிருந்து விளங்குவனவற்றை நாம் இன்றும் படித்து இன்புறலாம்.

வேள்பாரி, கபிலர் பாடிய இப்பாடல்களின் சொல்லின்பம், பொருள்நயம் இவற்றை நன்குஉணர்ந்து பெரிதும் மகிழ்ந்தான்; கபிலரை அன்புடன் பலவாறு உபசரித்துத் தன் ஊரிலேயே தயைகூர்ந்து தங்கியிருக்கும்படி வேண்டிக் கொண்டான்; புலவரும், அவ்வள்ளலின் நிறைந்த குணங்களைக்கண்டு அவன் வேண்டுகோளுக்கிணங்கி அவனுடன் அவனூரில் தங்கியிருந்தார்.

இவர்கள் கேண்மை தலையாய நீர்மையுடையது; ஆதலின், இக் கேண்மை, நாடோறும் வளர்பிறைச் சந்திரன்போல் வளர்ந்து வருவதாயிற்று; கபிலரும், வேள்பாரியும் உயிர் நண்பராயினர்; வேள்பாரி, கபிலரைத் தன் அரசவைப் புலவராகவும், அமைச்சராகவும் இருக்கும்படி வேண்டிக் கொண்டான்.

## மூவேந்தரும் பறம்பு மலையை முற்றுகையிடுதல்

பாரி, பெருங் கொடையாளன் என்று தமிழ்நாட்டு மக்கள் பாராட்டத் தொடங்கினர். இப்பாராட்டு மொழிகள், தமிழ்நாட்டு முடியுடை வேந்தர் மூவர் செவிகளிலும் விழுந்தன. அவர்கள், இவ்வள்ளல் தம்மினும் மேம்பட்ட பெரும் புகழை யடைந்து வருவதில் அழுக்காறு கொண்டனர். இவ்வழுக்காறேயன்றிச் சேர சோழ பாண்டியர்கள், வேள்பாரியிடம் அவனுடைய பெண்களைத் தருமாறு தூதர்களையனுப்பினர். பாரி, அவர்கள் வேண்டும் மகட்கொடையை மறுத்து விட்டனன். பாரி தன் பெண்களைக் கொடுக்க மறுத்துவிட்டதும் முன்னிருந்த அழுக்காறும் சேர்ந்து பகை விளைந்தது.

அவ்வளவில் மூவேந்தரும், தம் படைகளைத் திரட்டிக் கொண்டு, பறம்பு நாட்டை வந்தடைந்து பாரியின்

பறம்பு மலையை முற்றுகையிட்டனர். இம் மூவேந்தரும் பெருஞ் சூரர்களாய்வந்து முற்றுகையிட்டவர், பாரியின் அரணுக்குள் புகுந்து போர் செய்யப் பெரிதும் அஞ்சினர். ஆகவே, இவர்கள் அப் பறம்பு மலையைப் பல மாதங்கள் முற்றுகையிட்டு உட்புகத் திரமில்லாதவரா யிருந்தனர். பாரியும் இவர்கள் வலிமையைச் சோதிக்க எண்ணி வெளியேவந்து இவர்களுடன் போர் செய்யாம லிருந்தனன். பறம்பு நாட்டில் வாழும் மக்களும், வெளி வர முடியாதவராய் வருந்தினர்.

அங்கு வாழும் மக்கள், அப்பறம்பு மலையில் கிடைக்கும் பொருள்களைச் சேகரித்து உண்டு காலங்கழித்து வந்தனர். இம் முற்றுகை பல மாதங்கள் வரையில் நீடித்திருந்தமையால் அங்குக் கிடைக்கும் உணவுப் பொருள்கள் குறைந்தன. கபிலர், வெளியிடங்களி லிருந்து உணவுப் பொருள்களை அரணுக்குள் எப்படி வரவழைப்பது என்று எண்ணினார்; அவர், பல கிளிகளை வளர்த்தார்; அவைகளைப் பழக்கி அரணுக்கு வெளியில் பறக்கவிட்டு, நெற்கதிர்களைக் கொண்டுவரச் செய்தார்; அக் கதிர்களில் உள்ள நெல் அரணுக்குள் வாழ்வார்க்கு உணவாயின. ஆயினும், நாட் செல்லச் செல்ல உணவுப் பஞ்சம் மிகுந்து வருவதைக் கபிலர் கண்டார். இரக்கக் குணமுடைய கபிலர் மிரம்பவும் வருத்தப் பட்டார்.

கபிலர், எவ்வாறாவது முயற்சி எடுத்து அம்முற்றுகையைத் தவிர்க்க வேண்டுமென்று எண்ணினார்: அவர், தம்முடைய இருப்பிடம் விட்டுப் புறப்பட்டு அரணுக்கு வெளியில்வந்து மூவேந்தர் உள்ள இடத்தை படைந்தார்; அவர்கள் முன்போய் நின்று, “தமிழ்

நாட்டை ஆளும் முடியுடை வேந்தர்களே! பாரி ஒருவன்மீது நீங்கள் மூவரும் கூடிப் படை எடுத்து வந்தீர்; இவ்வரணை மாதக்கணக்கில் முற்றுகையிட்டும் ஒரு பயனின்றி நாளைப் போக்குகின்றீர்; நீங்கள் வெற்றியடைவது முயற்கொம்பென்று உணர்வீர்; இந்நாட்டுள் வாழ்வார் உணவின்றி வருந்தும்படிச் செய்யலாமென்று நினைந்துள்ளீர்கள்; இப் பறம்பு மலையில் உழவர்கள் உழாமலே பயன் தரத்தக்க நான்கு பொருள்கள் உள்ளன. அவற்றுள் முதலாவது— மூங்கிலில் விளையும் நெல்; இரண்டாவது— இனிய தேன் பொருந்திய சுளைகளையுடைய **பலாப்பழம்**; மூன்றாவது — வளப்பமுள்ள வள்ளிக்கிழங்கு; நான்காவது — பக்குவமுள்ள சிறந்த தேன்; இவைகளேயன்றி இனியநீர் நிரம்பவுள்ள குளிர்ந்த சுனைகள் பற்பல உள்ளன.

ஆதலின், நீங்கள் மரந்தொறும் யானைகளைக் கட்டியிருப்பினும், வெற்றிடமின்றி நிரம்பத் தேர்களை நிறுத்தி யிருப்பினும், இன்னும் பல மாதங்கள் முற்றுகையிட் டிருப்பினும், உங்கள் பெருமுயற்சிகளால் பாரியிடமிருந்து பறம்பு நாட்டைக் கைக்கொள்ளுதல் முடியாது; உங்கள் வலிக்கு அஞ்சி, வேள்பாரி தன் நாட்டை விடமாட்டான். பறம்பு நாட்டை நீங்கள் அடைய விரும்பினுல் அதற்கான வழியை என்னிடம் கேட்பின் யான் உங்கட்குக் கூறுவேன். அதற்கேற்ற உபாயமாவது; நீங்கள் பாணர்போல் வேடந்தரித்துக் கையில் யாழைமீட்டி வாசித்துக்கொண்டு உங்கள் விறலியர் (மனைவியர்) பின்வர நீங்கள் ஆடிக்கொண்டும்பாடிக் கொண்டும் பாரியிடம் செல்வீர்; பாரி பெருங்கொடையாளன் என்று கேட்டறிந்திருப்பீர்; அவன் தன் பறம்பு

நாட்டிலுள்ள முந்நூறு ஊர்களையும் இரவலர்க்குக் கொடுத்து விட்டான்; ஆதலின், இனி நீங்கள் பாடிக் கொண்டு வந்தால் உங்கட்குப் பரிசிலாக யாமும்,பாரியும் தாமிருக்கின்றோம்; அத்துடன் பறம்பு மலையும் உள் ளது.” என்று செய்யுள்மூலம் பாடி அம் மூவேந்தர் உள்ளத்தில் பாரியின் வீரம் பதிந்து நிற்குமாறு இடித் துரைத்தனர்.

பேரறிவுடைய கபிலர், அவ்வேந்தர்க்குக் கூறிய அறிவுரைகள் அவர்கள் செவியில் ஏறவில்லை. இத்தகை யார்களை நோக்கியன்றோ,

“பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லா(து)
இழிந்தவை காமுறூஉம் ஈப்போல்—இழிந்தவை
தாங்கலந்த நெஞ்சினார்க்(கு) என்னாகுந் தக்கார்
தேங்கலந்த தேற்றச்சொல் தேர்வு” [வாய்த்

என்று சான்றோர்கள் பாடிச் சென்றனர்.

முடியுடை வேந்தர் மூவரும் விடாப்பிடியுடைய வராய் மேலும் முற்றுகையிட்டு வெல்லுங் கருத்துடன் அவண்விட்டு விலகாதவராயிருந்தனர்; பற்பலநாள் முற்றுகையிட்டிருந்தாலும் பயனில்லைஎன்பதை உணர்ந் தனர்; முற்றுகையைவிட்டுப் பின்விலகிப்போகப் பெரி தும் மானமுடையராய் நெடுநாள் தக்க சூழ்ச்சிகளை ஆராய்ந்துகொண்டு அங்கு இருந்தனர்; எப்படியாவது பாரியைக் கொன்றுவிட வேண்டுமென்று முடிவு கட்டினர்; தாங்கள் எண்ணிய சூழ்ச்சிப்படி ஒரு வஞ்சக வழியால் வேள் பாரியைக் கொன்றனர். இச்செய்தி கேட்டு நாடுமுழுவதும் அடைந்த துன்பத்திற்கு அளவே யில்லை. இந் நிகழ்ச்சிக்குப்பின் உயிர் தாங்கியிருக்க விரும்பாமல் பாரியின் உரிமை மகளிர் உயிர் நீத்தனர்.

## கபிலர் அடைந்த ஆருத்துயர்

தகாத செய்கையின்மூலம் மூவேந்தர் பாரியைக் கொன்றவுடன் பாரியின் உயிர் நண்பராகிய கபிலர் உள்ளம் கொதித்த நிலையை அளவிட்டுக் கூறமுடியாது. உடனே கபிலரும், தம்முயிரைவிட எண்ணினார். பாரி தடுத்ததாலும், தம்மால் நாட்டிற்கு ஏற்படக்கூடிய நன்மையைக் கருதியும், பாரியின் மகளிர் மணம் கருதியும் கபிலர் தம் உயிரைத் தாங்கி நின்றார். பாரியின் பிரிவினால் உள்ளம் கலங்கிய கபிலர்பெருமான் வேள்பாரியை நோக்கி, "மலைநாட்டரசனாகிய பாரி என்னும் வள்ளலே, நான் உன்னுடன்வர எண்ணினேன்; அதை நீ தடுத்தாய்; நான் உனக்குப்பொருந்திய சிறந்த நண்பினன் அல்லேன் என்று எண்ணினைபோலும் நீ இறந்துவிடினும், நாமிருவரும் இப்பிறப்பில் நண்பராய்ச் சேர்ந்து வாழ்ந்திருந்ததுபோலவே மறுபிறப்பிலும் நம்மிருவர் ஊழும் நம்மை இணைபிரியாது வைப்பதாக" என்று கூறி மிக்க வருத்தப்பட்டார்.

அதன்பின் கபிலர், விச்சிக்கோன், இருங்கோவேள் என்ற இரு வேந்தரை யடைந்து பாரிமகளிரை மணம் செய்துகொள்ள வேண்டினர்; அவர்கள் மறுத்துவிட மலையமான் என்னும் அரசனிடம் சென்றார்; அவன் நற்குண நல்லொழுக்க நற்செயல்களைக் கண்டு, அவனிடம் பாரிமகளிரின் நிலையைக்கூறி, அவர்களை நீ மணந்து கொண்டு இல்லறம் நடத்துவாயாக, என்று வேண்டினர். மலையமான், கபிலரது பெருமையையும், பாரியின் புகழையும் நன்கு அறிந்தவனாதலின், அம்மகளிரை மணந்துகொள்ளுவதாக ஒப்புக்கொண்டான். கபிலர், அவ்வளவில் மகிழ்ந்து பாரிமகளிரை அழைத்துக்

கொண்டுபோய் விரைவில் மலையமானுக்குக் கொடுத்துத் திருமணஞ் செய்வித்தார். கபிலர், அன்றுதான் தம் பாரம் தலையிலிருந்து இறங்கியதாகவும், நட்புக் கடமையைச் சரிவர நிறைவேற்றியதாகவும் எண்ணினார்.

## ஆரிய அரசனுக்கு அருந்தமிழ் அறிவித்தல் :

கபிலர் பெருமான், தமிழ் நாட்டில் தமிழ் மக்கள் போற்ற நன்மதிப்புடன் வாழ்ந்ததேயன்றி ஆரிய அரசரும் மதிக்கத் தன் புலமையைக் காட்டியவராவர். இவர் காலத்தில் வடநாட்டரசனான பிரகதத்தன் என்பவன் மொழியாராய்ச்சியில் அவாவுடையவனாய் விளங்கினான். இவ்வரசன் தமிழ்மொழியின் பெருமையைப் பலர் வாயிலாகக் கேள்வியுற்றான்; தமிழின் சுவையைத் தக்க புலவர்கள் மூலம் கேட்டறிய விருப்பங் கொண்டான்; தமிழ் நாட்டில் வாழும் புலவர்களுள் சிறந்தவர் யார்? என்று உசாவியறிந்து கபிலரே முதன்மை பெற்றவர் என்று அவரைத் தன்னிடம் வரவழைத்தான். அவரிடம் அவ்வேந்தன் தான் தமிழ் மொழியை யறிய விருப்பங் கொண்டிருப்பதைக் கூறினான்.

கபிலர், அவ்வரசன் நன்கு தமிழின் பெருமையை யறியும்படி மொழியில் உள்ள நயமான பகுதிகளை எடுத்து உணர்த்தினார். தமிழ்மொழிக்கே சிறப்பைத் தரக்கூடிய இன்பச் சுவைததும்பும் அகப்பொருளின் இலக்கணத்தில் முதன்மைபெற்ற குறிஞ்சிப் பாட்டு என்னும் பாடலைப்பாடி அதிலுள்ள பொருள் நயங்கள் பலவற்றையும் நன்கு புலப்பட அவனுக்கு எடுத்துத் தெளிவாக விளக்கினார்.

இக்குறிஞ்சிப் பாட்டால் கபிலர் பெருமான், தமிழ் மொழியின் பெருமையும், தமது இணையற்ற புலமையும் விளங்கும்படி ஆரிய அரசனை மகிழ்வடையச் செய்தார். பிரகத்தன் என்னும் அந்த ஆரிய அரசன், அன்று முதல் தமிழ் நாட்டிடத்தும், தமிழ் மொழியிடத்தும், தமிழ்ப் புலவரிடத்தும் பெருமதிப்பு வைத்துத் தமிழ் இவ்வளவு பெருமையுடையதா! என்று வியந்து பெரிதும் பாராட்டினன். அத்துடன், தமிழ் நாட்டுத் தமிழ் மடந்தைமார் கற்பின் சீர்மையை நன்குணர்ந்தான். கபிலர் கல்வியாற்றலையும், அவரது நாவீறு எத்தகையதென்பதையும் எண்ணி எண்ணிப் புலமை என்ருல் இவ்வாறிருக்க வேண்டுமென்று மகிழ்ந்து அவர்க்குப் பெரும் பொருளைப் பரிசிலாக வழங்கி வணங்கினன். கபிலர், சிறப்புக்கள் பலவும் பெற்று அவ்வரசனிடம் விடைகொண்டு தமதிருப்பிடம் வந்தடைந்தார்.

பாரதியார், தமிழ் என்ற தலைப்பின் கீழ்த் "திறமான புலமை எனில் வெளி நாட்டோர் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" என்று பாடியதற்குக் கபிலர் புலமை எடுத்துக் காட்டாகும். ஆரிய அரசன் பிரகத்தன் தமிழ் மொழி வழங்கும் இடத்திற்கு அப்பாலுள்ள நாட்டில் வாழ்வோன் என்பதில் ஐயமில்லை; அவன் இவர் புலமையைக் கண்டு வணங்கினன் என்று தெரிய வருகின்றது. ஆகவே, கபிலர் புலமை திறமான புலமை என்பதில் தடை என்ன?

இப்புலவர் பெருந்தகை, பாரி இறந்தபின், அவன் மக்களுக்காகப் பற்பல அரசர்களிடம் அலைந்து, இவர் பெரும் புலமைக்குக் குறைவுவர, அவர்கள் மறுத்து

விட்டதால் வருந்தி, அரும்பாடுபட்டு அவர்களுக்கு மணம் செய்வித்துத் தன் நட்பின் கடமையைச் செலுத்திய அருஞ்செயலும், இவரது தமிழ்ப்புலமையும், அப்புலமையால் அமைந்த பாக்களும் தமிழ்வாணர் உள்ளத்தில் பதிந்து என்றும் நிலைபெற்று வாழ்வனவாக.

---

# நவீன
# தமிழகத்துச் சுடர் மணிகள்

(உயர்வகுப்புகளுக்குரியது)

ஆசிரியர்
வித்துவான் N. S. தியாகராஜசர்மா,
தமிழ் ஆசிரியர்
ஹிந்து உயர்நிலைப்பள்ளி, திருவல்லிக்கேணி, சென்னை.




பிரசுரகர்த்தர்கள்
பாலசரஸ்வதி புக் டிபோ
சென்னை

1951



[விலை 1-0-0

# முகவுரை

உலகம் முன்னேறிக்கொண்டே [illegible] தாய நாடும் தனி உரிமை பெற்று உலகமேடையில் முன்னிடத்தைக் கவர்ந்து நிற்கிறது. வருங்கால உலகச் சிற்பிகளாகிய நம் இளைஞர்கள் தம் பண்டைப் பெருமைக்கும் தமக்கு முன் நிற்கும் பெரும் பொறுப்புகளுக்கும் ஏற்பத் தம்மை ஆக்கிக் கொள்ளல் வேண்டும். அத்துறையில் அவர்களுக்கு ஊக்கமளிப்பனவற்றுள் நம் பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகள் மிகச் சிறந்த சாதனமாகும்.

தொன்றுதொட்டு நம் தமிழகம் அறிவு ஆற்றல்களில் பெருஞ் சிறப்புப் பெற்று வந்துள்ளமையை எவரும் அறிவர். இருபதாம் நூற்றாண்டில் பாரதநாட்டில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளுக்குத் தமிழகம் கால்கொடுத்து வந்திருக்கிறது என்று கூறுவது மிகையாகாது உலகப்புகழ் பெற்ற பல பெரியோர்கள் இவ்வைம்பது ஆண்டுகளுள் இங்குத் தோன்றித் திகழ்ந்துள்ளார்கள். அப்பெரியோர்களுள் ஐம்பெரும் சான்றோர்கள் சாதித்த அரும்பெரும் பணிகளை இங்கு எழுதியுள்ளோம். வாழ்க்கை வரலாறுகளாகிய இச்சுடர்கள் நம் இளைஞர்களுக்கு நல்லொளி காட்டுவதாக; அவ்வொளியில் அவர்களின் வருங்கால வாழ்க்கை திகழ்வதாகுக.

மேன்மை தங்கிய செட்டிநாட்டு மன்னர் இராஜா. ஸர். எம். ஏ. முத்தையச் செட்டியாரவர்கள் தம் அருமைத் தந்தையவர்களின் திருவுருவப்படத்தை இந்நூலிற் சேர்த்துக் கொள்ள அன்புடன் அநுமதித்து ஒரு படத்தையும் உதவினமைக்கு அவர்கள்பால் எங்கள் நன்றி என்றும் உரித்தாகும்.

சென்னை
20—12—50

பிரசுரகர்த்தர்.

# பொருளடக்கம்

# நவீன தமிழகத்துச் சுடர் மணிகள்



## ஏடு தேடித்தந்த ஏந்தலார்

'செயற்கரிய செய்வார் பெரியர்' என்பது வள்ளுவர் வாக்கு. சாதாரண மக்களாற் செய்ய லாகாச் செயல்களைச் செய்து முடிப்பவரே செயற் கரிய செய்பவராவர். மனிதர் புகமுடியாத வட துருவம் தென் துருவங்கள் ஆகிய இடங்களைக் கண் டறிந்தவர்கள், ஏறமுடியாத இமாலயச் சிகரங்கள் போன்றவற்றை எட்டிப் பிடித்தவர்கள், மானிட ரின் புலன்களுக் கெட்டாத நுண்ணறிவுகளை ஆராய்ந்து அறிந்தவர்கள் போன்றோர் இவ்வரிசை யிற் சேர்க்கப்படுதற்குரியராவார். அவர்கள் செயல் களால் மானிடவர்க்கமே முன்னேற்ற மடையும். அவர்கள் பெயர் உலகம் உள்ளவளவும் மறையாது. அத்தகையோர் கூட்டத்தில் சேர்க்கத்தக்க ஒரு பெரியார் நம்மிடையே அண்மைக்காலம் வரையில் வாழ்ந்து வந்தார். அவருடைய அருமுயற்சிகளால் தமிழர்கள் தாம் வெகு காலமாக இழந்திருந்த அருந் தனங்களைப் பெற்றனர். அப்பேற்றால் அவர்களுக் குத் தம் பண்டைப்பெருமை துலங்கலாயிற்று. தம் முடைய பழம் புகழை அவர்கள் உணர்ந்து அந்நிலை யிலே தாமும் நிற்கவேண்டுமென்ற ஓர் அவா உண் டாயிற்று. இத்தகைய பேருதவியைச் செய்தவர் யார்?

அவரே மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் என்பவர். அவர் 1855-ஆம் ஆண்டு





டாக்டர் உ. வே சாமிநாத அய்யர்

பிறந்தார்; எண்பத்தேழாண்டுகள் உயிர் வாழ்ந்தார். குழந்தைப் பருவம் முதல் இறக்கும் வரையில் அவருடைய வாழ்க்கை தமிழ் வாழ்க்கையாகவே இருந்தது. வேறு எவரும் செய்தாற்ருத பெரிய காரியத்தைச்

செய்வதற்கே தோன்றியவர் போல அவர் தம் இளமையைத் தயாரித்துக் கொண்டார். பண்டைத் தமிழர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தேடி வைத்திருந்த அருமையான நூல்களிற் பல படிப்பாரற்று மறைந்து போய்க்கிடந்தன. சங்ககாலம் என்ற ஒன்று இருந்ததாகப் பலருக்குத் தெரியுமேயன்றி, அக்காலத்தில் வாழ்ந்த புலவர்கள் யாவர் என்றாவது, அவர்கள் பாடிய நூல்கள் எத்தகையன வென்றாவது எவரும் அறிந்துகொள்ள முடியாத நிலையில் மக்கள் நின்றனர். அருமையாகச் சிற்சில வித்துவான்களின் வீடுகளிற் கிடந்த பழஞ் சுவடிகளும் தம்மைப் படிப்பாரற்றுச் செல்லுக்கும் எலிக்கும் இரையாகி மச்சுக்களில் மங்கிக் கிடந்தன. அவற்றையெல்லாம் தேடிப் பிடித்து, அவற்றின் உண்மை உருவங்களை ஆராய்ந்து அமைத்து, அவற்றை எவரும் எளிதிற் கற்குமாறு பதிப்பித்துக் கொடுத்த பெருமையே ஐயரவர்களுடையது. இதன் பொருட்டே உலகம் அவரை இன்று போற்றிவருகிறது.

இவ்வாறு தமிழகத்தில் நூல்கள் மறைந்துபோய் பிறகு அரிதிற் கண்டு பிடிக்கப்பட்ட வரலாறுகள் முன் காலங்களிலும் உண்டு. இரண்டாயிரம் ஆண்டுகட்டு முன்னே ஒருமுறை தமிழ் இலக்கணத்தின் ஒரு பகுதியான பொருளதிகாரம் என்ற நூல் கிடைக்காமற் போய்விட்டது. போய்விடவே அந்நூலறிவைப் பெற மக்களுக்கு வகையில்லாமலாகிவிட்டது. இறைவனே ஒரு புதிய நூல் எழுதிக் கொடுத்தாரென்றும், அதற்கு இறையனார் அகப்பொருள் என்பது பெயரென்றும் ஒரு கதை வழங்குகிறது. பிறகு ஆயிரம் ஆண்டுகட்குப் பின் அநபாய சோழன் என்னும் மன்னன்

தஞ்சையில் ஆண்டு வந்தபோது மூவர் பாடிய தேவாரங் களும் கிடைக்காமற் போகவே, அம்மன்னன் நம்பி யாண்டார் நம்பி என்ற பெரியாரின் துணைகொண்டு அத் தெய்வப் பாடல்களைத் திரும்பவும் பெற்றனென் றும் கூறுவர். இக்கதைகளின் உண்மை எப்படி யாயினும் தமிழகத்தில் ஆயிரம் ஆண்டிற் கொரு முறை ஒவ்வொரு பெரியார் தோன்றி இழந்த நூல் களை எடுத்துத் தந்ததாக நம்மவர் நம்புகின்றனர். அம்முறையில் இருபதாம் நூற்றாண்டில் ஐயரவர்கள் அவதரித்து, ஒரு நூலன்று, பல நூல்களைத் தேடித் தந்துள்ளார் என்பதை நாம் அறிகிறோம்.

அவர்கள் ஏடு தேடிய வரலாறு மிகவும் வியக்கத் தக்கது. அக் கதையை இங்கு நாம் குறிக்க முயல வில்லை. அவர் சேகரித்த ஏடுகளெல்லாம் இன்று ஒரு நூல் நிலயமாகச் சென்னைக்கு அடுத்த அடை யாறு என்ற இடத்தில் விளங்கி வருகின்றன. அங்கு ஆயிரத்துக்கதிகமான ஏட்டுச் சுவடிகள் அழகாக அமைக்கப் பெற்றுப் படிப்பவர்களுக்கு உதவியாக வைக்கப்பட்டுள்ளன. அவற்றுட் சில நானூறு ஆண்டு கட்கு முன்னே எழுதப் பெற்றவை. எழுத்துக்க ளெல்லாம் இன்றெழுதப்பட்டவை போல் சில சுவடி கள் விளங்கும்; சில சுவடிகளின் எழுத்துக்கள் பூதக் கண்ணாடிகளாலும் படிக்க முடியாதபடி நுணுகி யிருக்கும். பல சுவடிகள் அரை குறையாகவும், பல பல விடங்களிற் சிதைந்தும் காணப்படும். இவற்றை ஐயரவர்கள் தம் குழந்தைகள் போல் போற்றி வந் தனர்; இவற்றுடனேயே அவர் தம் வாழ்நாள் முழுமை யும் கடத்தினார்.

இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன் - திருந்த
உதிப்பித்த பன்னூல் ஒளிர அடியேன்
பதிப்பிக்க வேகடைக்கண் பார்

என்பதே ஐயரவர்களுடைய கடவுள் பிரார்த்தனை. இத்தகைய பெரியார் வளர்ந்த வரலாற்றை இனிக் காண்போம்.

சோழவள நாட்டிலே கும்பகோணத்துக் கருகிலே உத்தமதானபுரம் வேங்கடசுப்பையர் என்ற புண்ணியவானுக்குப் புதல்வராய் நம் சரித்திர நாயகர் 1855-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 19-ஆம் நாள் பிறந்தார். அவருக்குப் பெற்றோர்கள் இட்ட பெயர் வேங்கடரமணன் என்பது. வேங்கடசுப்பையர் சிறந்த பக்திமான்; அவர் சங்கீதத்தில் சிறந்த பயிற்சி பெற்றிருந்தார்; அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த சங்கீத வித்துவான்கள் பலருடன் அவர் நட்புக் கொண்டிருந்தார்.

வேங்கடரமணருக்கு இளமை முதற்கொண்டே தமிழ் கற்கவேண்டுமென்ற அவா அதிகமாயிருந்தது அக்காலத்து மக்களின் மனம் ஆங்கிலத்திலேயே நாடியிருந்தது என்றாலும் இளம் ஐயருக்கு மனம் அதன் பால் செல்லவில்லை. பெற்றோர்களும் உறவினர்களும் வடமொழி பயிலவேண்டுமென்று விரும்பியும் அவர் அதனையும் புறக்கணித்தார். தகுந்த பண்டிதர்களிடம் தமிழ் கற்க வேண்டுமென்றும், தம் தகப்பனாரிடம் சங்கீதம் பயில வேண்டுமென்றுமே அவர் விரும்பினர்.

தனையரிடம் மிகுந்த அன்பு கொண்ட தந்தையாரும் சிறந்த தமிழ் வித்துவான்களிருக்குமிடம் சென்று, அவர்களிருந்த இடங்களிலேயே தாமும் தங்கி மகனுருக்குத் தமிழ்க்கல்வி ஊட்டி வந்தார். இவ்வாறு இளம் ஐயரவர்கள் தாம் பதினறு பிராயம் பெறுவதற்குள் சாதாரண வித்துவான்கள் கற்பிக்கக்கூடிய தமிழ் இலக்கண இலக்கிய நூல்களையெல்லாம் கற்றுத் தமக்கு உயர்கல்வி ஊட்டக்கூடிய மகா வித்துவான் ஒருவரை நாடி நின்ருர்.

அக்காலத்தில் மாயூரத்தில் மீனட்சிசுந்தரம் பிள்ளை என்ற சிறந்த கல்விமான் ஒருவர் இருந்து வந்தார். அவர் திருவாவடுதுறை ஆதீனத்து மகா வித்துவான். அவர் காலத்தில் அவரைவிடச் சிறந்த தமிழ்க் கல்விமான் வேறு எவரும் இல்லை. அவர் கவிபாடுதலில் மிக வல்லவர்; பல புராணங்களையும் பிரபந்தங்களையும் அவர் பாடியிருக்கிருர்

அத்தகைய பெரியாரிடம் சென்று தாம் தமிழ் கற்க வேண்டுமென்று வேங்கடரமணர் பெரிதும் விரும்பினர். அவர் தந்தையாரும் அதற்கு இசையவே இருவரும் ஒரு நல்ல நாள் பார்த்துக்கொண்டு மாயூரம் சென்ருர்கள். அங்குப்போய் இளம் வேங்கடரமணர் தமக்குக் குருவாகப் போகிற பிள்ளையவர்களை முதன்முதல் கண்டபோது அவர் மனத்தில் தோற்றியதை அவரே தம் சுய சரிதையில் பின்வருமாறு வரைந்திருக்கிருர்.

"அப்புலவர் பெருமான் வரும்போதே அவருடைய தோற்றம் என் கண்ணைக் கவர்ந்தது. ஒரு யானை மெல்ல அசைந்து நடந்து வருவதைப்போல்

அவர் வந்தார். நல்ல வளர்ச்சியடைந்த தோற்றமும், இளந் தொந்தியும், முழங்கால்வரையில் நீண்ட கைகளும், பரந்த நெற்றியும், பின் புறத்துள்ள சிறிய குடுமியும், இடையில் உடுத்திருந்த தூய வெள்ளை ஆடையும் அவரை ஒரு பரம்பரைச் செல்வரென்று தோற்றச் செய்தன. ஆயினும் அவர் முகத்திலே செல்வர்களுக்குள்ள பூரிப்பு இல்லை; ஆழ்ந்து பரந்த சமுத்திரம் அலையடங்கி நிற்பதுபோன்ற அமைதியே தோற்றியது. கண்களில் எதையும் ஊடுருவிப் பார்க்கும் பார்வை இல்லை. அலக்ஷ்யமான பார்வையும் இல்லை; தம் முன்னே உள்ள பொருள்களில் மெல்ல மெல்லக குளிர்ச்சியோடு செல்லும் பார்வைதான் இருந்தது. அவருடைய நடையில் ஓர் அமைதியும், வாழ்க்கையில் புண்பட்டுப் பண்பட்ட தளர்ச்சியும் இருந்தன. அவருடைய தோற்றத்தில் உற்சாகம் இல்லை; சோம்பலும் இல்லை; படபடப்பில்லை; சோர்வும் இல்லை. அவர் மார்பிலே ருத்திராட்ச கண்டி விளங்கியது.

பலகாலமாகத் தவம் புரிந்து ஒரு தெய்வ தரிசனத்திற்குக் காத்திருக்கும் உபாஸகனைப்போல நான் இருந்தேன்; அவனுக்குக் காட்சியளிக்கும் அத் தெய்வம்போல அவர் வந்தார். என் கண்கள் அவரிடத்தே சென்றன. என் மனத்தில் உத்ஸாகம் பொங்கி அலை எறிந்தது. அதன் விளைவாக ஆனந்தக் கண்ணீர் துளித்தது. அத்துளி இடையிடையே அப்புலவர் பிரானுடைய தோற்றத்தை மறைத்தது. சுற்றிலுமுள்ள எல்லாவற்றையும் விலக்கிவிட்டு அவரது திருமேனியில் உலவிய என் கண்கள் அவர் முகத்திலே பதிந்து விட்டன."

இவ்வாறு ஐயர் அவர்கள் தமக்கேற்ற குருவை அடைந்தார். அவரும் சீடரின் பரிவையும் அவரிடம் காணப்பெற்ற கல்வி ஆர்வத்தையும் கண்டு மன முவந்து அவருக்கு ஏற்ற வண்ணம் கல்வி கற்பித்து வந்தார். பிள்ளையவர்களே ஐயரவர்களின் மற்றொரு பெயரான சாமிநாதன் என்ற பெயரை உலகில் நிலைப் பித்தார். வேங்கடரமணன் என்ற பெயர் மறைந் தது. சாமிநாதையர் மாயூரத்திலிருந்து கொண்டே தமிழுடன் சங்கீதமும் பயிலவேண்டுமென்று விரும்பி ஞர். ஆனல் சங்கீதம் தமிழ்க் கல்விக்கு இடையூறாகு மென்றெண்ணி அதனில் பயில்வதை ஆசிரியர் தடுக் கவே ஐயர் தமிழொன்றையே மிகுந்த ஆர்வத்துடன் கற்கத் தொடங்கினர்.

அவர் பிள்ளையவர்களுடன் ஏறக்குறைய ஐந் தாண்டுகள் தங்கியிருந்தார். அக்காலமெல்லாம் அவர் தம் ஆசிரியரைவிட்டுப் பிரிந்ததில்லை. அவர் செல்லும் ஊர்களுக்கெல்லாம் இவர் போவார்; கை யாலேயே எழுதுவார்; பிள்ளையவர்கள் இணையற்ற வித்துவானதலால் அக்காலத்திலிருந்த தமிழ்ப் பிர புக்கள், புலவர்கள் ஆகிய எல்லோரும் அவரைக் காணவருவார்கள். அவர்களுடைய பரிச்சயம் எல் லாம் ஐயரவர்களுக்கும் உண்டாயிற்று. அவருடைய கல்வியும் உச்சநிலையையடைந்து திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் அவர்களுடைய அன்பும் ஐயருக்குக் கிடைத்தது. இவ்வாறு அவர் தாம் பிற்காலத்தில் நிகழ்த்தப்போகும் மிகப் பெரிய காரியங்களுக்கு வேண்டிய எல்லா யோக்கியதைகளும் பெற்று விளங் கினர்.

இவ்வாறிருக்கும்போது மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் காலமானார்கள். அப்பொழுது ஐயர் அடைந்த வருத்தத்திற்கு அளவேயில்லை. ஆதீன கருத்தரான ஸ்ரீ லஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் சிறந்த கல்விமானாதலால் ஐயரிடம் மிகுந்த அன்பு பாராட்டி அவரை மடத்திலேயே இருந்து அங்குள்ள மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். அவரும் அவ்வாறே செய்தார்.

ஐயரவர்கள் இருபத்தைந்து பிராயத்தினராய் இருந்தபோது அவர் வாழ்க்கையில் சிறந்ததொரு மாறுதல் உண்டாயிற்று. கும்பகோணம் அரசியலார் கலாசாலையில் தியாகராஜ செட்டியார் என்ற புலவர் தமிழ்ப் புலமை நடத்திக் கொண்டிருந்தார். அவரும் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் சீடரே; ஆனால் ஆசிரியரையொத்த அறிவு அவருக்கும் உண்டு. அவர் வயது முதிர்ந்து வேலையிலிருந்து ஓய்வெடுத்துக் கொண்டார். அந்த இடத்துக்குச் சாமிநாதையரே உரியவர் என்று அவர் எண்ணி அவ்வாறே சிபார்சு செய்ய, அரசியலாரும் அதற்கு ஒப்புக் கொண்டனர். ஐயர் அவர்களும் அவ்வேலையை ஏற்றுக் கொண்டனர். அச்சமயம் சுப்பிரமணிய தேசிகர் ஐயரைவிட்டுப் பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் வருந்தினார் என்றாலும் அவருக்கு வரப் போகும் நன்மைகளை எண்ணி மகிழ்ந்து அவருக்கு விடையளித்தார்.

ஐயரவர்கள் இருபத்து மூன்றாண்டுகள் கும்பகோணம் கலாசாலையில் வேலை பார்த்துவந்தார். அவருடைய கல்வியறிவும், நுண்ணறிவும், பேசும்

திறமையும் உழைப்பும் யாவர் மனத்தையும் வசீகரித்தன. மாணவர் யாவரும் ஐயர் அவர்களின் அன்பிலும் போதனைத் திறமையிலும் ஈடுபட்டு நின்றனர். கலாசாலைத் தலைவரான கோபால் ராவ் என்றவர் நம் ஆசிரியரிடம் அடங்காப் பிரேமை கொண்டார். ஊரார் ஐயரவர்களின் சொல்வன்மையிலும் குண நலங்களிலும் வயப்பட்டு அவர்களைப் பெரிதும் கொண்டாடிப் போற்றிவந்தனர். இவ்வாறு கும்பகோணவாசம் சுகமே கழிந்தது.

இக்காலத்தில் சேலம் இராமசாமி முதலியார் என்றவர் கும்பகோணத்தில் முனிசீப்வேலை பார்த்து வந்தார். அவர் ஒரு பரம்பரை ஜமீன்தார் குடும்பத்தைச் சார்ந்தவர். தமிழிலே நல்ல அறிவுடையவர். அவருடைய கல்வியறிவும் பெருந்தன்மையும் நம் ஐயரவர்கள் மனத்தை அவர்பால் இழுத்தன. இருவரும் நண்பராயினர். அவர் ஐயரவர்களுடன் ஒரு நாள் அளவளாவிக் கொண்டிருந்தபோது, ஐயரவர்களை நோக்கி, "நீங்கள் படித்த நூல்களெல்லாம் யாவை?" என்று வினவினர். அதற்கு ஐயர் பெருமிதத்துடன், தாம் படித்த அந்தாதிகள், கலம்பகங்கள், கோவைகள், பிள்ளைத் தமிழ்கள், உலாக்கள், புராணங்கள், இதிகாசங்கள், சைவ நூல்கள், முதலிய பலவற்றின் பெயர்களைச் சொல்லிக்கொண்டே போனர். இவற்றைக் கேட்டு முதலியார் மகிழ்ச்சியும் வியப்பும் கொள்வார் என்றது ஐயரின் நோக்கம். ஆனல் முதலியாரின் முகத்தில் ஈயாடவில்லை. அவர் முடிவில், "இவையெல்லாம் பிற்காலத்து நூல்கள். இவற்றை எவரும் தான் படித்து விடுகின்றனர். இதனல் என்ன பிரயோஜனம்? பழந்தமிழ் நூல்களே சிறந்த நூல்கள்.

சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற பெருங்காப்பிய நூல்களையல்லவோ படிக்கவேண்டும்'' என்று கூறினர். ஐயரவர்கள் அந்நூல்களைப் பார்த்ததும் இல்லை. ஆகவே அவர், "நான் இந்நூல்களைக் கண்டிருந்தாலன்றோ படித்திருக்கக் கூடும்?" என்று விடை பகர்ந்தார்.

அப்போது முதலியார் சிந்தாமணியின் ஒரு பழஞ்சுவடியை வைத்துக்கொண்டு பொருள் காண முயன்று கொண்டிருந்தார். அச்சுவடியை ஐயர் அவர்களிடம் கொடுத்து அதனைப் படித்துத் தமக்கும் பாடம் சொல்லும்படி கேட்கவே, ஐயரவர்கள் மிகுந்த பக்தியுடன் அதனை ஏற்றுக் கொண்டார்.

சிந்தாமணி என்றது ஒரு ஜைன காவியம். இதன் முழுப் பெயர் சீவகசிந்தாமணி என்பது. இது திருத்தக்க தேவர் என்ற ஜைன முனிவரால் இயற்றப் பட்டது. ஜீவகன் என்ற ஒரு மன்னனின் வரலாற்றைக் கூறுவது. 3145 செய்யுட்களையுடையது. வட மொழி வால்மீகி ராமாயணத்தைப் போல இதுவும் தமிழில் மகாகாவியம் என்று சொல்லப்படும் பெருமை வாய்ந்தது. பத்துப்பதினோராம் நூற்றாண்டுகளில் இதுவே தமிழ் நாடெங்கும் கல்விமான்களால் போற்றப்பட்டு வந்தது. இதனைப் படித்து மக்கள் மனமெல்லாம் ஜைன சமயக்கொள்கைகளுக்கு மாறி விடுகின்றனவே என்றஞ்சிச் சேக்கிழார் என்ற பெரியார் இதற்குப் போட்டியாக பெரிய புராணம் என்ற சைவ நூலை எழுதினார். அதன் பிறகு இதனைக் கொண்டாடுபவர் குறைந்தனர். சில ஜைனர்களே இதனைத் தெய்வ நூலாகக் கொண்டு படித்து வந்தனரேயன்றிப் பிறர் இதனை நாடவேயில்லை. இவ்வாறு

ஐயரவர்கள் இளமைக் காலத்தில் இதன் சுவடிகளே அருகிப் போய்விட்டன.

ஆகவே, புதிய ஒரு நூல் கிடைத்தவுடன் ஐயர வர்கள் மிகுந்த ஆர்வத்துடன் அதனைப் பெற்றுக் கொண்டு புரட்டலானார். அந்நூலின் பாடல்கள் மிக அருமையாயிருந்தன. அதற்கு நச்சினார்க்கினியர் என்ற பெரியார் சுருக்கமாக ஒருரை எழுதியிருந்தார். அவ்வுரையையும் நூலையும் ஐயரவர்கள் பலமுறை படித்துப் பார்த்தார். படிக்கப்படிக்க நூலின் இனிமை யும் பெருமையும் அவருக்குப் புலனாயினவேயன்றி, பாடல்களின் கருத்து பலவிடங்களில் அவருக்கு விளங்கவில்லை. ஜைனமதக்கருத்துக்களை உள்ள படி உணர்ந்து உரைப்பவரும் எளிதில் கிடைக்க வில்லை. ஐயரவர்கள் மிகவும் முயன்று தாமே பல பாடல்களுக்குப் பொருளைக் கண்டு கொண்டார். பொருள் விளங்கா இடங்களுக்கு ஜைனப் புலவர்களை யும் வடமொழி வித்துவான்களையும் கண்டு அவர்களி டமிருந்து கேட்டறிந்தார்.

இவ்வாறு மிகுந்த ஊக்கத்துடன் சிந்தாமணியை ஐயரவர்கள் ஆராய்ந்து வருவதைச் சேலம் இராம சாமி முதலியார் அவர்கள் அறிந்து மிகவும் மகிழ்ந் தார். ஐயரவர்களே அந்த நூலை அச்சிற் பதிப்பித் தால் உலகோபகாரமாகும் என்று அவர் எண்ணி, அவ்விருப்பத்தை ஐயரவர்களிடம் தெரிவித்தார்.

அவரும் இசைந்தார். என்றாலும் அஃது எளிய காரியமோ? தம்மிடமிருந்த ஒற்றைச்சுவடி மிகவும் பிழை மலிந்ததாக இருந்தது. ஆகவே வேறு நல்ல சிந்தாமணிச் சுவடிகளை நாடிப்பெற வேண்டுமென்ற

அவா அவருக்குண்டாயிற்று. அவர் பல ஊர்களுக்குத் தாமே சென்று அலைந்து தேடியும், ஆங்காங்குள்ள நண்பர்களுக்கு எழுதித் தேடச் செய்தும், இவ்வாறு பலகாலம் முயன்று முடிவில் 26 சுவடிகளைப் பெற்றார். சுவடிகளைப் பெற அவர் எடுத்துக்கொண்ட முயற்சியும், அதனால் அடைந்த ஆயாஸங்களும் அளவிடற்கரியன. அவற்றில் ஒன்றைப் பற்றி அவரே எழுதியிருப்பதை இங்கே காண்போம்.

"சிந்தாமணி ஏட்டுப் பிரதிகள் வேறு கிடைக்குமாவென்று எனக்குத் தெரிந்தவர்களையெல்லாம் விசாரித்துக்கொண்டே யிருந்தேன். சந்தேகமான இடங்கள் பல இருந்தமையால் நல்ல பாடமுள்ள பிரதி கிடைத்தால் பார்த்துப் பயன் பெறலாமே யென்ற கருத்தோடு பலரிடம் விசாரித்தேன்; பலருக்குக் கடிதம் எழுதினேன். தஞ்சாவூரில் பெரிய செல்வராக இருந்த விருஷபதாச முதலியாரென்பவர் வீட்டிற் பல பழைய ஏட்டுச் சுவடிகள் உள்ளனவென்று தெரிய வந்தது. சுவடிகள் தேடும் யாத்திரையை அப்பொழுது தொடங்கினேன்; இன்னும் ஓயவில்லை. தஞ்சாவூருக்குச் சென்று எனக்குத் தெரிந்த கனவான்களை உடனழைத்துக் கொண்டு முதலியார் வீட்டிற்குச் சென்றேன். அவர் ஜைனர். ஜைனமதக் கிரந்தங்கள் பல அவரிடம் இருந்தன. சீவகசிந்தாமணிப் பிரதியையும் வைத்துப் பூஜித்து வந்தார். நான் போய்க் கேட்டபோது முதலில் அதைப் பூஜையிலிருந்து எடுக்கக் கூடாதென்று சொல்லிவிட்டார். நான் மிகவும் பணிவாக வேண்டிக்கொண்டேன். "ஜைனர்களுக்குத் தான் கொடுப்பேனேயன்றி மற்றவர்களுக்குத் தரமாட்டேன்; அப்படித் தருவது

எங்கள் சம்பிரதாயத்துக்கு விரோதம்; எவ்வளவோ ரகஸ்யங்கள் பொருந்திய சிந்தாமணியை வெகு சுலபமாக நீங்கள் படித்துப் பார்க்க முடியாது. ஆசாரியர்கள் மூலமாக உபதேசம் பெற்று விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். அன்னிய மதத்தினராகிய உங்களுக்குக் கொடுப்பதனால் எங்களுக்குப் பாவம் சம்பவிக்கும்" என்றார்.

அவருக்கு என்ன என்னவோ சமாதானம் சொல்லிப் பார்த்தேன், தமிழுலக முழுவதும் படித்து இன்புறும் விஷயங்கள் சிந்தாமணியில் இருக்க, "ஒரு மதத்திற்கே உரியது, மற்றவர்கள் கண்ணிற் படக் கூடாது" என்று எண்ணி மூடிவைத்திருக்கும் இயல்பைக்கண்டு நான் வருந்தினேன். 'இப்படிச் சமய வேறுபாட்டால் மறைந்தமையால் உலகத்துக்கு வெளிப்படாத நூல்கள் எத்தனை இறந்து போயினவோ! தமிழருக்குப் பெருமை உண்டாக்கப் பெரியவர்கள் நூல்கள் இயற்றி வைத்திருக்க, அவற்றை மறைத்துத் தமக்கும் தம்மைச் சார்ந்தவருக்கும் சிறுமை உண்டாக்கிக் கொள்ளும் இயல்பினர் மனம் திருந்தும் காலம் வருமா? என்று ஏங்கினேன்.

என்னுடன் வந்திருந்த ஒருவர் விருஷபதாச முதலியாரிடம், நான் கும்பகோணம் காலேஜில் வேலை பார்ப்பவனென்றும், திருவாவடுதுறை மடத்திற்கு மிகவும் வேண்டியவனென்றும் சொன்னார். என் நிலைமை தெரிந்துகொண்ட பிறகாவது முதலியார் சுவடியைக் கொடுக்கக் கூடுமென்பது சொன்னவரது அபிப்பிராயம். ஆனால் அது நேர் விரோதமாக முடிந்தது. "அப்படியா! சைவமடத்திற் பழகினவருக்கு ஜைன கிரந்தங்களில் அன்பு ஏற்படுவதற்கு

நியாயமே இல்லை. சைவர் ஜைனர்களைத் துச்சமாக எண்ணுபவர்கள். நான் கொடுக்கவே மாட்டேன்,' என்று அவர் சொன்னபோது, "ஏதடா விபரீதமாகப் போய்விட்டது!" என்று என் நண்பர் தம்மைத் தாமே நொந்து கொண்டார்.

மறுபடியும் வருவதாகச் சொல்லிவிட்டுக் கஞ்சையில் யாரைக்கொண்டு முயன்றால் முதலியாரின் பிரதியைப் பெறலாமென்று விசாரித்தேன். கடைசியில் துக்காராம் ஹோல்கார் என்னும் மகாராஷ்டிர தனவானாகிய என் நண்பரை அழைத்துக் கொண்டு மீட்டும் விருஷபதாச முதலியாரை அணுகினேன். நல்ல வேளையாக அவர் மனம் இளகியது. தம்மிடமிருந்த பிரதியை உதவினர்; இவ்வளவு நயந்து வாங்கிய அப்பிரதி சிறந்த பிரதியன்று; விசேஷ உரையில்லாதது"

(என் சரித்திரம்)

இவ்வாறு இருபத்து மூன்றிடங்களிலிருந்து ஏட்டுச் சுவடிகள் பெற அவர் அடைந்த துயரம் எவ்வளவோ அறியோம். இனிச் சுவடிகள் கிடைப்பது அரிது என்று தெரிந்தவுடன் அவர் அவற்றை வைத்துக்கொண்டு ஆராயத் தொடங்கினர். அப்பொழுது அவர்பட்ட துன்பங்களுக்கு எல்லையே யில்லை. பாடல்கள் கண்டபடியெல்லாம் எழுதப்பட்டிருந்தபடியால் அவற்றின் உண்மை யுருவத்தை அறிவது பெருந் தொல்லையாகிவிட்டது. சில சுவடிகளில் சில பாடல்கள் விடப்பட்டிருக்கும்; உரைக்கும் பாடலுக்கும் வேற்றுமை தெரியாதபடி சில சுவடிகள் காணப்படும்; எழுத்துப் பிழைகளுக்குக் கணக்கேயில்லை; நாகத்துக்கும் நரகத்துக்கும் வேற்றுமை காணப்படாது.

இவ்வாறு இடந்தோறும் இடைஞ்சலே தோன்றினு லும், அவர் ஊக்கங் குறையாமல் உழைத்துவந்தார்.

இவ்வாறு சிந்தாமணியைச் செப்பனிட ஆறு ஆண்டுகள் பிடித்தன. பிறகு அதனை எடுத்துக் கொண்டு சென்னைக்குச் சென்று அதனை அச்சியற்ற முயன்றார். அந்நூலை அச்சிடுவதிலும் எவ்வளவோ தொல்லைகளிலிருந்தன. பல கனவான்கள் ஐயர் அவர்களுக்கு அளித்த ஊக்கத்தாலும், அவர்களுடைய விடாமுயற்சியாலும் பல நூற்றாண்டுகளாக மறைந்து கிடந்த சிந்தாமணி 1889-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் மிக அழகிய உருவில் வெளிவந்தது. அப் பொழுது தமிழகம் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே இருந்திராது.

சிந்தாமணி ஏடுகளைத் தேடச் சென்ற விடங்களி லெல்லாம் வேறு பழந்தமிழ் நூல்களின் சுவடிகள் கிடைக்குமோவென்று ஆராய்வது ஐயரவர்களுடைய வழக்கம். அவ்வாறு அவர் கைகளில் பல சுவடிகள் வந்தன. அவற்றுள் ஒன்று பத்துப்பாட்டு என்பது. அது பத்துப் பாடல்களைக் கொண்ட ஒரு சிறந்த சங்க நூல். அது தமிழ் நூல்களுள் மிகச் சிறந்ததெனப் பல்லோராலும் கொண்டாடப்படுவது. பண்டைக் காலத் தமிழ் மக்களின் பண்பாட்டையும் தமிழ் நாட்டின் வரலாற்றையும் விளக்குவதற்கு இந் நூலைவிடச் சிறந்த சாதனமொன்றும் இல்லை. இதற் கும் நச்சினார்க்கினியர் என்றவர் எழுதிய உரை உண்டு. இந்நூலை எப்படியாவது அச்சிட வேண்டுமென்பது ஐயரவர்களுடைய அவா.

இங்கும் அவருக்குப் பல தொல்லைகள் உண்டா யின. இதுகாறும் அவருக்குப் பேருதவியாளர்களா

யிருந்த ஆதீன கர்த்தரான சுப்பிரமணிய தேசிகரும் பெரும்புலவரான தியாகராஜ செட்டியாரும் மரண மடைந்தனர். இவை இரண்டும் ஒன்றையொன்று அடுத்து ஒரே ஆண்டில் நிகழ்ந்தன. இப்பிரிவுகளால் அவர் அடைந்த துக்கம் அளவு கடந்தது.

இத்துக்கங்களை ஒருவாறு அவர் சமாளித்துக் கொண்டு தம் வேலைகளைச் செய்யத் தொடங்கினர். கலாசாலையில் வேலை செய்யும் நேரம் போக மற்றெல்லாப் பொழுதையும் அவர் நூலாராய்ச்சியிலேயே செலவிட்டு வந்தார். பத்துப் பாட்டின் பிரதிகள் அவரிடம் இரண்டே இருந்தன. அவைகளும் பிழை மலிந்து கிடந்தன. ஆகவே நல்ல சுவடிகள் கிடைக்குமாவென்று அவர் தேடலானர். திருநெல்வேலி ஜில்லாவில் பலசிறந்த கவிராயர்கள் வாழ்ந்து வந்த செய்தி அவருக்குத் தெரியும். ஆகவே அச்சீமையில் சென்று ஏடு தேடலாமென்று அவர் ஒரு முறைக்குப் பல முறைகளாகச் சென்று, பல ஊர்களிலும் சுற்றி அலைந்து கடைசியாக ஆழ்வார் திருநகரி என்ற தலத்துக்கு வந்தார். அவ்வூரிலுள்ள கவிராயர் வீடுகளுள்ளெல்லாம் புகுந்து அங்குள்ளவர்களின் துணை கொண்டு பழஞ்சுவடிகள் பலவற்றைப் புரட்டிப் பார்த்தார். அவர் நாடிய பொருள் கிடைக்கவில்லை. கலாசாலை வேலைக்கு மறுநாள் புறப்படவேண்டும். அப்பொழுது நிகழ்ந்த செய்தியை அவருடைய மொழிகளியே தருவோம்:—

"ஏடுகளைப் புரட்டிப் பார்த்துக் கையும் மனமும் சோர்ந்து, அவ்வூரில் ஸப்ரிஜிஸ்திராராக இருந்த இராமசாமி ஐயரென்பவர் வீட்டுக்குப் போனேன.

இரவு அவர் வீட்டில் போஜனம் செய்துவிட்டுத் திண்ணையில் உட்கார்ந்தேன். அவ்வூரிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவப் பெரியார் சிலர் என் விருப்பப்படி திவ்யப் பிரபந்தத்திலுள்ள சில பாசுரங்களின் பழைய வியாக்கியானங்களைச் சொல்லிக் கொண்டிருந்தனர். நான் மிக்க விருப்பத்துடன் கேட்டு மகிழ்ந்தேன். இயல்பாகவே அவ் வியாக்கியானங்களைக் கேட்டு அடையும் முழு மகிழ்ச்சியும் எனக்கு அப்பொழுது உண்டாகவில்லை. அதற்குக் காரணம் அவற்றைச் சொன்னவர்களது குறையன்று; என் உள்ளத்துக்குள்ளேயிருந்த' "பத்துப் பாட்டு அகப்படவில்லையே" என்ற கவலையே.

இங்ஙனம் இருக்கையில், அன்று ஏதோ விசேஷமாதலின், திருவீதியில் பெருமாளும் சடகோபராழ்வாரும் எழுந்தருளினார்கள். ஆழ்வார் அவதரித்த திவ்யதேசம் அவ்வூரென்று நான் சொல்வது மிகை. நானும் பிறரும் எழுந்து தரிசனம் செய்தோம். நான் வணங்கினேன். பட்டர்கள் சந்தனம், புஷ்பமாலை முதலியன அளித்தார்கள். எல்லோருடைய அன்பும் ஒரு முகப்பட்டு அத்தகைய மரியாதைகளை நான் பெறும்படி செய்தது. அப்பொழுது நம்மாழ்வார் திருக்கோலத்தைத் தரிசித்தேன்; அவரைப் பார்த்து, "ஸ்வாமி! வேதம் தமிழ் செய்தவரென்று தேவரீரைப்பாராட்டுகின்றார்கள். தேவரீருடைய ஊருக்குத் தமிழ் நூலொன்றைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறேன். தமிழுக்குப் பெருமையருளும் தேவரீருக்கு நான் பட்ட சிரமம் தெரியாததன்றே! நான் தேடி வந்தது கிடைக்கும்படி கருணை செய்யாமல் இருப்பது நியாயமா?" என்று சொல்லிப் பிரார்த்தித்தேன். உள்

ளம் அயர்ந்துபோய், ' இனிமேல் செய்வது ஒன்று மில்லை ' என்ற முடிவிற்கு வந்தமையினால் இங்ஙனம் பிரார்த்தனை செய்தேன்.

பெருமாளும் ஆழ்வாரும் அவ்விடத்தைக் கடந்து அப்பால் எழுந்தருளினார்கள். நாங்கள் திண்ணையில் வந்து உட்கார்ந்தோம். நிலாஒளி நன்றாக வீசியது. அப்பொழுது லக்ஷ்மண கவிராயர் (அவர் ஒரு பரம்பரைக் கவிராயர் வமிசத்தைச் சார்ந்தவர்) எதையோ தம் மேலாடையால் மறைத்துக் கொண்டு மிகவும் வேகமாக எங்களை நோக்கி வந்தார். திருக்கோயிலில் பிரஸாதங்களைப் பெற்று அவற்றை மறைத்துக்கொண்டு வருகிறாரென்று நான் நினைத்தேன். வந்தவர், ' இந்தப் புத்தகத்தைப் பாருங்கள்; இந்த ஒன்றுதான் என் மாமனாரிடம் இருக்கிறது; பார்த்து விட்டுத் திருப்பி அனுப்பிவிடுவதாகச் சொல்லி வாங்கி வந்தேன் " என்று கூறி மேல் வஸ்திரத்தால் மூடியிருந்த சுவடியை எடுத்தார். அவர் என்னிடம் கொடுப்பதற்கு முன்பே ஆத்திரத்தால் நான் அதனைப் பிடுங்கினேன். மேலே கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து அந்த நிலாவின் ஒளியிலேயே பிரித்தேன். சட்டென்று முல்லைப் பாட்டு என்ற பெயர் என் கண்ணிற் பட்டது. (முல்லைப் பாட்டு பத்துபாட்டில் ஐந்தாவது பாட்டு) நிலவில் மலர்ந்த அம் முல்லையினால் என் உள்ளம் மலர்ந்தது. எனக்கு உண்டான சந்தோஷத்திற்கு எல்லையில்லை ".

இவ்வாறு அவர் பல விடங்களிலும் சென்று ஏடுகளைத் தேடி, இனிப் பத்துப்பாட்டுப் பிரதிகள் கிடைக்கமாட்டா என்று தெரிந்து கொண்டு, அச்

சுவடிகளை ஆராயத் தொடங்கினர். பிறகு 1889-ம் ஆண்டில் பத்துப்பாட்டு பழைய உரையுடனும் ஐயரவர்களுடைய குறிப்புக்களுடனும் வெளிவந்தது. இதன் பின் ஒன்றன்பின் ஒன்றாகப் பல காவியங்களும், சங்க எட்டுத் தொகை நூல்களும், புராணங்களும், பிரபந்தங்களும், இலக்கண நூல்களும், பிறவும் வெளிவந்து கொண்டேயிருந்தன. இவ்வாறு சேலம் இராமசாமி முதலியாரால் 1887-இல் துவக்கப்பட்ட ஊக்கம், ஐயர் அவர்கள் உயிருடன் வாழ்ந்த வரையில் இடையறாமல் முன்னேறிக்கொண்டேவந்தது. அவர் 87 ஆண்டுகள் இவ்வுலக வாழ்க்கையை நடத்தினர். அக் காலத்துள் அவர் பதிப்பித்த நூல்களும் 87.

இவற்றுள் பல நெடுங்காலமாக மறைந்து போனவை. அவை வெளிவந்ததால் தமிழரின் பண்டைப் பெருமைகள் யாவும் தெரியவந்தன. கடவுளின் திருமுன்பை ஓர் அடியவன் எவ்வாறு பய பக்தியோடு அணுகுவானே, அவ்வண்ணமே அவர் தம் நூல்களை அணுகுவார். ஏடுகளிற் சிதைந்து போன இடங்களை நிரப்புவதற்கு வழி அகப்படா விட்டால் அவ்விடங்களை அப்படியே காலியாக விட்டு விடுவார். உரைகளில் பிழையானவை என்று எங்கேனும் அவர் மனத்துக்குப்பட்டால், அவ்வுரைப் பகுதிகளை மாற்றாமல், தம் கருத்தை அடிக் குறிப்பில் காட்டுவார். குறிப்புரை முதலியன எழுதும்போது எளிய நிலையிலுள்ள மாணவர்க்கு எவ்வெவ்விடங்களில் ஐயங்கள் தோன்றுமென்பதை ஊகித்தறிந்து அவ்விடங்களை யெல்லாம் தெளிவு படுத்துவார். ஆங்கிலேயர் கையாளும் நூற் பதிப்பு முறைகளை யெல்லாம் நுட்பமாக உணர்ந்து அவற்றை மேற்

கொண்டு அவர் தம் நூல்களைப் பதிப்பித்து வந்த தால், படிப்பவர்களுக்குப் பேருதவியாயிற்று.

1903-ஆம் வருஷ முடிவில் ஐயரவர்கள், சென்னை இராஜதானிக் கல்லூரிக்கு மாற்றப்பட்டு, அங்கே பதினாறாண்டுகள் தமிழ்ப்பணி புரிந்து 1919-ஆம் வருஷத்தில் அவர் தம் பதவியைவிட்டு நீங்கினார்.

இவ்விடைக் காலத்தில் அவருக்குக் கிடைத்த சன்மானங்களும், பட்டங்களும், கௌரவங்களும் மிகப்பல. 1903-ம் ஆண்டு ஒரு கௌரவ பத்திரமும், 1905-இல் ஆயிரரூபா சன்மானமும், 1906-இல் மஹாமஹோபாத்யாய பட்டமும் அவருக்கு அரசாங்கத்தாரால் கிடைத்தன. அவருக்குப் பட்டம் கிடைத்ததை யறிந்து தமிழன்பர்கள் ஆங்காங்கே கூட்டங் கூடி அவரைப் பாராட்டினார்கள்.

பாரதியார் போன்ற புலவர்களும் அரசர்களும், பிரபுக்களும், பிரபல உத்தியோகஸ்தர்களும் அவரைப் புகழ்ந்தார்கள். லார்ட் கார்மைக்கேல் என்ற சென்னைக் கவர்னர் அவருடைய அறிவாற்றல்களை அறிந்து அவரைப் பாராட்டினார். உலகப் பெருங் கவிஞரான ரவீந்தர நாத தாகூர் அவர் இல்லத்துக்கு வந்து அவர் புரிந்துவந்த பணிகளைக் கண்டு வியந்தார். 1917-ஆம் ஆண்டில் காசி, பாரத தர்ம மகா மண்டலத்தார் அவருக்கு, "திராவிட வித்யாபூஷணம்" என்ற பட்டத்தைச் சூட்டினார்கள். 1925-ஆம் ஆண்டில் காஞ்சி, காமகோடி பீடாதிபதி அவர்கள் ஐயருக்கு "தாக்ஷிணாத்ய கலாநிதி" என்ற பிருதை அளித்தருளினார்கள். 1932-இல் சென்னைச் சர்வ கலாசாலையார் அவருக்கு "டாக்டர் அப் லிட்டரேச்சர்" என்ற கௌரவப்பட்டத்தைச் சூட்டினார்கள்.

செட்டி நாட்டு ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் சிதம்பரத்திலே 1924 இல் ஒரு தமிழ்க் கலாசாலையை நிறுவினபோது ஐயரவர்களையே அதற்குத் தலைமை வகித்து நடத்தித் தரும்படி கேட்டுக்கொண்டார். ஐயரவர்கள் மூன்று ஆண்டுகள் அங்கேயிருந்து பணியாற்றினார்கள். 1937-இல் சென்னையில் மகாத்மா காந்தியின் தலைமையில் நடந்த பாரதீய ஸாஹித்ய பரிஷத்தில் அவர் வரவேற்புத் தலைவராக விளங்கினர்.

1935-ஆம் ஆண்டில் இவருக்குச் சதாபிஷேகம் மிகச் சிறப்பாகச் சென்னையில் நடந்தேறியது. ஆயிரம் பிறை கண்டவர்களே இவ்விழாவுக்கு உரியவர்கள். பிறகு இவருக்குக் கனகாபிஷேகம் நடைபெற்றது. தமக்குக் கீழ் மூன்று தலைமுறைகளைக் கண்டவர்க்கே இவ்வபிஷேகம் உரியதாகும்.

இவ்விதம் பிறப்பெடுத்த பயன் எல்லாவற்றையும் துய்த்தபின் 1942-இல் சிவபெருமான் எழுந்தருளிய தலங்களுள் சிறந்ததான திருக்கழுக்குன்றத்தில் அச் சிவபெருமான் கோயிலைத் தரிசித்தவண்ணமே அவனுடைய திருவடி நீழலை அவர் அடைந்தார்.

ஐயரவர்களுடைய அருங்குணங்களைப் புகழாதவர் இல்லை. அவரிடம் படித்த மாணவர் ஆயிரவர்; அவருடன் பழகியவர் நூறாயிரவர். அவ்வளவுபேரும் ஒருமுகமாக அவரைப் புகழ்கின்றார்களென்றால் அவருடைய குணங்களில் சிறப்புக்கள் இருந்தே தீரவேண்டுமல்லவோ? அவர் ஓயாத உழைப்பாளி; சோம்பல் என்பது அவரிடம் எள்ளளவும் இல்லை

காரியங்களைத் திட்டப்படுத்திக் கொண்டே அதனில் அவர் இறங்குவார். அவருக்கு நல்ல ஞாபக சக்தி யுண்டு. அதனோடு, அன்றாடம் நிகழ்வனவற்றை யெல்லாம் அவர் குறித்து வைத்துக்கொள்வார். அதனால்தான் அவருக்குத் தம் ஆசிரியர் வரலாற்றை யும் மிக நுட்பமாக எழுத முடிந்தது. அவருடைய பேச்சுத் திறம் சாமானியமானதன்று. சிறு குழந்தைபோல் எளிமையாக அவர் பேசுவதுபோல் தோன்றினாலும் அவர் பேச்சுக்களில் நிறைந்த அர்த்த புஷ்டியிருக்கும். ஏழை எளியவர்களிடத்தில் அவருக்கு நிறைந்த அன்பு உண்டு. எவரும் பசித்திருக்க அவர் சகியார். ஜாதி வேற்றுமையில்லாமல் எல்லாருடைய பசிப் பிணியையும் தீர்க்க அவர் முயல்வார். அவருடைய குணங்களுள் நன்றியறிதல் என்பது மிக உயர்ந்தது. தினையளவு உதவியையும் பனையளவாகக் கொண்டு அவர் போற்றுவார். அவருடைய கடவுள் பக்தி இணையற்றது. எல்லா மதங்களிடமும் எல்லாக் கடவுளிடமும் ஒத்த மதிப்பு அவருக்கிருந்தபோதிலும் சிவபிரானிடம் அவருக்குத் தனித்த பக்தியுண்டு.

இவ்வாறு எல்லாத் தன்மைகளாலும் நிரம்பிய ஒருவரைத் தமிழர்கள் சான்றோர் என்பர். அத்தகைய சான்றோர்களில் தலை சிறந்தவராக மகாமகோபத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி, திராவிட வித்யாபூஷணம் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் விளங்கினார்கள்.

---

## 2. வீரக் கனல் மூட்டி

கவியின் சித்திரம்

> "நாட்டி லெங்கும் ஸ்வதந்திர வாஞ்சையை
> நாட்டினுய் - கனல் - மூட்டினுய்
> வாட்டி யுன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
> மாட்டுவேன் - வலி - காட்டுவேன்"

என்று கூறி மார்பு தட்டிக்கொண்டு முட்டியை நீட்டினுர் ஓர் ஆங்கில நீதிபதி. அவருக்கெதிரிலே கூண்டிலே ஒரு வீரர் நின்று கொண்டிருந்தார். அவருடைய படிந்த கண்களும், மூடிய வாயும், சந்திர மண்டலம்போல் விளங்கிய முகமும் அவரைச் சாந்த புருஷரே என்று காட்டின. அவர் முகத்தில் அச்சமோ, வெறுப்போ தோன்றவில்லை. பெரும் புயலுக்கு எதிர்த்து நிற்கும் மலைப்பாறைபோல் அசையாமல் நின்றுர். நீதி மண்டலம் முழுமையும் ஒரே நெருக்கம். நியாயவாதிகள் திறந்த வாய் மூடாமல் நீதிபதியைப் பார்ப்பதும் குற்றவாளியைக் காண்பதுமாகத் திகைப்புற்று இருந்தனர். போலீஸ்காரர் தடி கொண்டு வெளியில் நின்ற பெருங்கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு நின்றனர்.

ஒரு விநாடி கழிந்தது. கூட்டில் நின்றவர் கண்களைத் திறந்தனர். அவற்றினின்று நெருப்புப் பொறிகள் பறந்தன. அவர் மீசை துடிதுடித்தது. அவர் நிதானமான குரலில்,

> பாரதத்திடை யன்பு செலுத்துதல்
> பாபமோ? மனஸ் - தாபமோ?
> கூறு மெங்கள் மிடிமையைத் தீர்ப்பது
> குற்றமோ - இதிற் செற்றமோ

ஒற்றுமை வழி யொன்றே வழியென்பது
ஓர்ந்திட்டோம் - நன்கு - தேர்ந்திட்டோம்
மற்று நீங்கள் செய்யுங் கொடுமைக்கெலாம்
மலைவுறேம் - சித்தம் - குலைவுறேம்



வ. உ. சிதம்பரம் பிள்ளை

என்று கூறினர். மண்டபம் முழுமையும் பெருமூச்சு விட்டது. நீதிபதி தம் நாற்காலியிலேயே சாய்ந்தார்.

இந்நிகழ்ச்சி ஏறக்குறைய ஐம்பதாண்டுகட்கு முன்னே திருநெல்வேலியிலே நடந்தது. முதலிற் பேசியவர் ஆங்கிலேயக் கலெக்டர். விடை கூறியவர் வழக்கறிஞர் சிதம்பரம் பிள்ளை. தேசியக் கனல் மூட்டிய வீரர்; அவர்மீது இராஜத்துரோக வழக்கு தொடரப் பட்டிருந்தது. அதனிடையிலே நடந்த சம்பாஷணை இது. இதனைப் பாடியவர் பாரதியார்.

**அன்றைய நிலை**

இன்று நாம் சுயராஜ்யம் பெற்றுவிட்டோம். உலக மேடைகளிலே பாரத நாடு மிகுந்த மரியாதை யுடன் வரவேற்கப் படுவதைக் கண்டு பெருமை யடை கிறோம். அச்சம், பொறாமை, யுத்த வெறி ஆகிய கொடிய புயல்களுக்கிடையில் தத்தளிக்கும் உலகக் கப்பலை நிதானமாகவும் சமாதானமாகவும் ஓட்டிச் செல்ல உலகம் முழுவதும் இந்தியப் பிரதமரின் உத வியையே இன்று நாடுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்போ? இந்தியன் தலை நிமிர்ந்து நடத்தலாகாது. அவன் எவ்வளவு அறிவு படைத்திருந்தாலும் உயர்ந்த பதவிகளை அவன் எட்டியும் பார்த்தலாகாது. நாடு பிழைக்க கூடிய எந்தத் தொழிலும் இங்கு முன் னேறலாகாது. வேண்டுமானால் மனிதர் உணவை மனிதர் பறித்துக் கொள்ளலாம். ஜாதிச் சண்டை கள் போடலாம். வறட்டு நாகரிகங்களில், இருக்கிற காசையும் தொலைக்கலாம்.

அளவு கடந்த கொடுமையும் ஒரு பயனை உடைத்தே என்பர் ஆன்றோர். பந்தை அடிக்க அடிக்கத்தானே அஃது எழும்பும். பதுங்கிக்கிடந்த நாகத்தைக் குத்தினல் அது சும்மா இருக்குமா?

பாரத மக்கள் அந்நியரின் கொடுமைகளைப் பொறுந்துப் பொறுத்துப் பார்த்தனர். இனிச் சும்மா விருத்தலாகாது என்றும், வந்தது வரட்டும் என்றும், வீரத்துடன் சிலர் நாட்டில் மூலைக்கு மூலை கிளம்பி மக்களைக் கூட்டுவதும், அவர்களின் சுதந்திர தாகத்தை எழுப்புவதும், ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை ஒடுக்க வழி வகுப்பதுமாகத் தொடங்கினார்கள். மக்கள் அவர்களை பெரிதும் போற்றினர்; ஆனால் அரசியலாரோ கொடிய அடக்குமுறைகளைக் கையாண்டு அவர்களிற் பலரைக் கொன்றும் சிலரை நாடு கடத்தியும், சிலரைச் சிறையில் வீழ்த்தியும் சுதந்திர எழுச்சியை பலாத்காரத்தால் அடக்கி வந்தனர். அதனால் தேச பக்தர்களின் முயற்சி முன்னேறிற்றே யன்றிக் குன்றவில்லை. அவ்வாறு ஐம்பதாண்டுகட்கு முன் நம் முன்னோர்கள் பட்ட பாடுகளின் விளைவே நாம் இன்று சுதந்திர மக்களாக வாழ்வது. அவர்கள் உள்ளான துன்பமும், பட்ட பாடுகளும், சொல்ல முடியாதவை. அத்தகைய தியாகிகளில் தலை சிறந்து விளங்கியவரே "மலைவுறேம்; குலைவுறேம்" என்று கூறின ஒருவர். அவரே நம் சிதம்பரனார். அவருடைய வரலாற்றை இங்குக் கூறுவோம்.

**வீர நாட்டில் உதயம்**

மங்கல பாண்டி என்று அழைக்கப்படும் செந்தமிழ் நாட்டிலே திருநெல்வேலி ஜில்லாவிலே ஒட்டப்பிடாரம் என்று ஒரு கிராமம் உண்டு. அதற்கு அளகாபுரி, அளகையம்பதி என்ற பெயர்களும் உண்டு. அதனை ஒட்டித்தான் கட்டபொம்மன் அரசாண்ட பாஞ்சாலங்குறிச்சி என்ற பண்டை நகரிருக்கிறது. அதற்குச் சிறிது தூரத்துக் கப்பால்தான் கவிஞர்

சுப்பிரமணிய பாரதியார் தோன்றிய எட்டையாபுரம் உளது. அவ்வொட்டப் பிடாரம் ஊரைச் சூழ்ந்து நகர்க்காவல் தெய்வங்கள் கோயில் கொண்டிருந்தன.

அவ்வூரிலே வேளாளர் குலத்தில் சிதம்பரனூர் 1872-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 5-ஆம் நாள் தோன்றினூர். அக்குடும்பத்தினர், மூன்று தலைமுறைகளாய் வக்கீல் தொழில் புரிந்துவந்ததால் அவர்களுடைய வீட்டுக்கு வக்கீல் வீடு என்ற ஒரு பெயரிருந்தது. அன்றியும், அவர்கள் வழிவழியாக வந்த தமிழறிஞர்கள்; தமிழ்க் கல்வியில் சிறப்புற்றுச் சிவபிரான் அடிமையில் தலைசிறந்து விளங்கியவர்கள். சிதம்பரனூரின் பாட்டனூர் சிதம்பரக் கவிஞன் என்ற பெயருடையவர்; தகப்பனூர் உலகநாதபிள்ளை. அவரும் வக்கீல் தொழில் புரிந்து வந்தார். நல்ல செல்வவான்; கொடையிற் சிறந்தவர். தமிழறிவும் ஓரளவு பெற்றவர். பாட்டன் பெயரைப் பெயரனுக்கிட்டனர்.

### பள்ளிப் படிப்பு

சிறுவனுக்கு உரிய 6-வது வயதில் பள்ளியில் வைத்தார்கள். அக்காலத்தில் கிராமந்தோறும் திண்ணைப் பள்ளிக்கூடமே உண்டு. அங்கே தமிழ்ப் படிப்பு, கணிதம், ஒழுக்கமுறைகள் இவையே போதிக்கப்படும். சிதம்பரனூருக்கு அமைந்த ஆசிரியர் வேளாண் குலத்திற் பிறந்தவர். வாய்மை, தூய்மை, சாந்தம் முதலிய நற்குணங்கள் வாய்ந்தவர்; தமிழ் நூல்களை அவர் நன்கு கற்றிருந்தார்; சிறந்த தெய்வ பக்தியும் நல்லொழுக்கமும் அவர் பெற்றிருந்தார். அவரிடம் மாணவர், அரிச்சுவடி, ஆத்திச்சுவடி, எண்சுவடி, உலகநீதி, கொன்றைவேந்தன், குழிபெருக்கம் என்

னும் கணித நூல், வெற்றிவேற்கை, மூதுரை முதலிய நூல்களைப் படித்துத் தேர்ந்தார். இவ்வாறு அடிப் படைக்கல்வி ஒருவாறு அமைந்ததைக் கண்டு தந்தை யார் தனயருக்கு ஆங்கிலமும் கற்பிக்க வெண்ணி ஓராங்கிலந் தெரிந்த ஆசிரியரை அமர்த்தினர். அது வும் போதாதென்று அவர் நினைத்து ஊரிலேயே ஒரு ஆங்கிலப் பள்ளிக்கூடம் நிறுவ எண்ணி அவ்வாறே செய்தார். இவ்விதம் சிதம்பரனர் காரணமாக ஒட் டப்பிடாரத்துக்கே ஒரு பள்ளிக்கூடம் ஏற்பட்டது. பிறகு சிதம்பரனுரைத் தூத்துக்குடி முதலிய அயலூர் களுக்கும் அனுப்பி மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேர்ச்சியடையச் செய்தனர்.

அதற்குமேல் சிதம்பரனுருக்குப் படிப்பில் புத்தி நாடவில்லை. ஆதலால் இளம்பிள்ளையாகிய சிதம்பர னுருக்கு அவர் தந்தை ஒரு தாலுக்காக் கச்சேரியில் குமஸ்தாவேலை செய்துவைத்தனர். அதுவும் நீடித்து நிற்கவில்லை. பிறகு அவரைத் தம் குலத்தொழிலான வக்கீல் படிப்புக்கு விடவெண்ணித் திருச்சிராப்பள் ளிக்கு அனுப்ப, அங்கு அவர் இரு சிறந்த வக்கீல்க ளிடம் அக்கல்வியைக் கற்றுத் தேர்ந்தார். படிப்பு ஒருவாறு முடிந்தது என்றதை அறிந்த தகப்பனர் அவரை ஊருக்கு வரும்படி அழைக்க அவ்வாறே வந்தார்.

### பொழுது போக்கு

அக்காலத்தில் சிதம்பரனர் தாம் காலங்கழித்த வரலாற்றைத் தாமே கூறியிருக்கிறார். பாரதம், திரு விளையாடல், இராமாயணம் முதலிய சிறந்த இலக்கி யங்களை வல்லார் வாய்கேட்க அவருக்கு அப்பொழுது

வாய்ப்பு கிடைத்தது. ஊரில் துறவிமார்கள் அடிக்கடி வந்து தங்கிப்போவர். அவர்களிடம் சென்று அவர்களின் பிரசங்கங்களைக் கேட்பதிலும், அவர்களுக்குத் தொண்டு புரிவதிலும் அவருக்கு ஆர்வமிருந்தது. ஓழிந்த நேரங்களில் ஊர்ப்பிள்ளைகளோடு கூடிப்பல வித நாட்டு ஆடல்களில் ஈடுபடுவர். வக்கீல் பரீக்ஷையில் தேர்ந்தும் இவ்விளையாடல்களில் இவர் ஈடுபட்டிருந்தார். அவர் கட்டுக் கடங்காதவராக இருந்திருக்கக் கூடும்.

## வாழ்க்கைப் போராட்டம்

இந்நிலையில் குடும்பத்தில் சில தகராறுகள் உண்டாயின. சில விஷயங்களில் சிதம்பரனருக்கும் அவர் தகப்பனருக்கும் மனக்கசப்பு உண்டாகும். வளர்ந்த பிள்ளையின் மனப்பான்மையை உணரமாட்டாத தந்தையார் ஒரு நாள் அவரை அடித்துவிட்டார். சிதம்பரனரின் மனம் அதனைப் பொறுக்கக்கூடவில்லை. குடும்பத்திலேயே இல்லாமல் ஓடிவிடுவதென்று அவர் தீர்மானித்து இல்லத்தை விட்டு வெளியேறினர். சிகையை நீக்கி ஒற்றைத் துணியுடன் மதுரைபோய்ச் சேர்ந்தார். 'ஆனல் அவர் மனவுறுதி நிலைத்து நிற்கவில்லை. மதுரையிலிருந்து தம் ஊர் நண்பரொருவருக்கு ஒரு கடிதம் வரைந்தார். அதையறிந்து தந்தையார் ஓடோடியும் மதுரைக்கு வந்து தம் குமாரரை அழைத்து வந்தார்.

## தொழிலாற்றம்

இவ்வாறு சிதம்பரனர் வீட்டை விட்டோடிய வரலாறுகள் பல உண்டு. இவையெல்லாம் அவர் பிற்காலத்தில் திறம்பாத மனவுறுதிடன் நிற்பதற்

கென அமைந்த பயிற்சிக் கூடங்கள் போலும். அச் சமயங்களிலெல்லாம் தந்தை சென்று அவரை அழைத்துவருவார். கடைசியாகத் தந்தையார் அவரை வக்கீல் வேலையில் அமர்த்தி அதனைப் பார்த்துவரும்படி ஏவினர். ஒட்டப்பிடாரத்தில் ஒரு ஸப்-மாஜிஸ்திரேட் கோர்ட்டு இருந்தது. அங்குச் சிதம்பரனருக்கு நிரம்ப வேலை கிடைத்தது. தொழிலில் நல்ல தேர்ச்சியும் புகழும் உண்டாயின. அவர் எடுத்த வழக்குக்களிலெல்லாம் வெற்றியே விளைந்தது. அவர் அநியாய வழக்கில் தலையிடுவதில்லை; எடுத்துக் கொண்ட வழக்கையும் இடையிலே விடுவதில்லை. எவரிடமும் மதுரமாகப் பேசுவார்; அவர் உடையும் தோற்றமும் அந்தஸ்தாயிருந்தன. ஏழைகளிடமும் நொந்தவர்களிடமும் அவருக்கு இரக்கம் அதிகம். போலீஸாருக்குச் சிதம்பரனரைக் கண்டால் சிம்ம சொப்பனம்.

**போலீஸாருடன் முதல் முரண்**

ஒரு முறை போலீஸார் ஒருவர்மீது கொலை வழக்கொன்றைக் கொண்டுவந்தனர். அந்த வழக்கில் சிதம்பரனர் குற்றவாளியின் பக்கம் ஆஜராகி விடுவாரென்றஞ்சி அவரையும் ஒரு குற்றவாளியாகக் குறிப்பிட்டனர். பிறகு மறைவாக அவரிடம் சென்று குற்றவாளிக்காகத் தாம் ஆஜராகவில்லை என்று ஒப்புக்கொண்டால் அவரைக் குற்றவாளி ஜாப்தாவிலிருந்து விலக்கிவிடுவதாக அவர்கள் கூறினர். 'முள்ளை முள்ளாலேயே எடுக்கவேண்டும்' என்பதை உணர்ந்த சிதம்பரனர் அப்படியே செய்வதாக ஒப்புக்கொள்ள அவரைக் குற்றக் கணக்கிலிருந்து விலக்கிவிட்டார்கள். ஆனல், வழக்கை

விசாரிக்க எடுத்துக் கொண்டபோது, எதிரியின் தரப்பில் சிதம்பரனாரே வக்கீலாக நின்றார். அதைக் கண்டு திகைப்புற்ற போலீஸார் அவர் மீது அவதூறாக ஒரு புதிய குற்றத்தைச் சாட்ட, அதனிலும் வாதாடித் தம்மீது யாதும் குற்றமில்லை யென்று நிரூபித்துக் கொண்டார். இவ்வாறு அநியாயங்களை எதிர்த்துப் போராடுவதிலும் தாம் எடுத்துக் கொண்ட முயற்சியை இடைமுறியாமல் கொண்டு செலுத்துவதிலும் அவருக்கு நல்ல தேர்ச்சி உண்டாயிற்று.

**திருமணம்**

இப்பொழுது அவருக்குப் பிராயம் இருபத்து மூன்று ஆனபோது, அவருக்கும் வள்ளியம்மை என்ற மாதுக்கும் திருமணம் நடைபெற்றது. அவ்வம்மையார் நற்குணங்களின் வடிவாய்த்திகழ்ந்தார்.

சிதம்பரனார் தக்கவர்களோடு வேதாந்த விசாரம் செய்வது வழக்கம். அப்பொழுதெல்லாம் அவ்வம்மை ஒருபுறமாக ஒதுங்கி நின்றுகொண்டு கேட்டுப் பின்பு தம் கணவனார் தனியாயிருக்கும்போது அப்பேச்சுக்களில் தமக்குண்டான ஐயங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வர். ஒருமுறை தாழ்ந்த குலத்திலுதித்த துறவி,—இரு கண்களையும் இழந்தவர்—சிதம்பரனாருடன் நட்புக் கொண்டு அவர் வீட்டிலே தங்கலானார். வள்ளியம்மையார் அவரை மிகவும் உபசரித்து அன்னமூட்டி ஆதரித்தனர். ஊரார் அதைக்கண்டு அவர்மீது குறைகூற அவர், 'துறவி, ஜாதி கடந்தவரல்லரோ? அவருக்கு உணவளித்தலில் என்ன குற்றம்?' என்று கூறித் தாம் முன்போலவே செய்து வந்தார்.

முதல் துன்பம்

இத்தகைய குணநலன்களும் அன்பும் நிறைந்த அவ்வம்மையாரை நீண்டநாள் பெற்றிருக்கும் பேற்றைச் சிதம்பரனார் பெறவில்லை. 1901-ஆம் ஆண்டில் அவ்வம்மையார் இவ்வுலக வாழ்க்கையை நீத்தனர். "கள்ளினும் இனிமையள் கனவாச் சென்றனள்" என்று அவர் மனமுருகினார். அவருடையபிதா வள்ளியம்மையின் பிரிவால் நிகழ்ந்த குறையை நீக்க அவள் இல்லத்திலிருந்தே மீனாட்சியம்மை என்ற மாதைச் சிதம்பரனாருக்கு மறுமணம் புரிவித்தார்.

'தீ'

இவ்வாறு ஒட்டப்பிடாரத்தில் நம் சிதம்பரனார் தம் தொழிலையும் இல்லற வொழுக்கத்தையும் சிறப்புற நடத்தி வந்து கொண்டிருந்த போது இந்தியா முழுமையும் ஒரு புத்துணர்ச்சியால் கொந்தளிப்புற்றிருந்தது. லோகமான்யர் என்ற பட்டப் பெயர் பெற்ற பால கங்காதர திலகர் ஸ்வயராஜ்யம் நம் பிறப்புரிமை என்று கூறிக் காங்கிரஸில் ஒரு புத்துணர்ச்சியை எழுப்பி வந்தார். வங்காளம், பஞ்சாபு, மகாராட்டிரம் முதலிய மாகாணங்கள் இவ்வாவேசத்தில் படிந்து பெரிய கோஷங்கள் செய்து வந்தன. 'வெள்ளையனே வெளியேறு' என்ற ஒலி வானை முட்டியது. தமிழகத்தில் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார்,

"என்று தணியு மிந்த சுதந்திர தாகம்?
என்று மடியு மெங்கள் அடிமையில் மோகம்?
என்றெம தன்னைகை விலங்குகள் போகும்?
என்றெம தின்னல்கள் தீர்ந்து பொய்யாகும்?

என்று பாடி மக்களின் மனத்தில் ஸ்வதந்தர ஆசை விதையை விதைத்துக் கொண்டிருந்தார். பாபு அரவிந்தகோஷ், கப்பர்தே, முன்சி முதலியோரின் பெயர்கள் எல்லாருடைய நாவிலும் பயின்று வந்தன. ஒட்டப்பிடாரத்தில் கட்டுக் கடங்காக் காளையராய்க் கிரிமினல் வக்கீலாகத் திகழ்ந்து போலீஸாருக்கு வைரியாய் விளங்கிய இளஞ் சிதம்பரனாரின் மனம் இப்புதிய உணர்ச்சியில் தோய்ந்தது. அவர் தம் தொழிலை விடாமலும், தம் தமிழ்க் கல்வியையும் தத்துவ விசாரத்தையும் மேன்மேல் ஊக்கிக் கொண்டும், அரசியல் விஷயங்களிலும் தலையிடலானார். சமூகச் சீர்திருத்தத்திலும் அவர் மனம் புகுந்தது. பொருளாதார நிலைமையை உயர்த்தினாலன்றி இந்திய மக்கள் ஆங்கிலேயரிடமிருந்து விடுதலை பெற்றாலும் பயனில்லையென்பது அவருடைய உறுதியான நம்பிக்கை. அன்றியும், ஆங்கிலேயர் தம் பொருளாதார நலத்துக்காகவே இந்திய அரசாட்சியை வைத்துக் கொண்டிருக்கிறார்களென்பதையும், அப் பொருளாதாரத் துறையிலே போட்டியிட்டாலன்றி இந்தியாவுக்குச் செல்வ வளமோ சுயராஜ்யமோ கிட்டாதென்றும் அவர் கண்டார்.

**சிதம்பரனார் உள்ளத்தில் தீக்கொழுந்து**

இவற்றோடு தமிழறிவு பெறுதல், ஆத்மஞானம் அடைதல் ஆகிய துறைகளிலும் அவருடைய முயற்சி குன்றவில்லை. சைவ சித்தாந்த சபை, மதுரைத் தமிழ்ச் சங்கம், வாலிபர் சங்கம், பிரம சங்கம் என்றவை அக்காலத்தில் சிறந்த செயலாற்றி வந்தன. அவற்றிலெல்லாம் சிதம்பரனார் பங்கெடுத்துக் கொண்

டார். பெரியோர்கள் செய்யும் பிரசங்கங்களைக் கேட்டும் தாமே உரையாடல்கள் பல நிகழ்த்தியும், கவிகளையியற்றிப் பிறர் கேட்கப் பாடியும் இவ்வாறு பொது மேடைகளிலே பயிற்சி பெற்று வந்தார். முத்துசாமிப்பிள்ளை, சுவாமி வள்ளிநாயகம், புலவர் அரசன் சண்முகனார் ஆகிய தமிழ்க் கவிஞர்களுடைய கூட்டுற வால் செய்யுளியற்றும் துறையில் அவர் நல்ல தேர்ச்சி பெற்றார். சிந்தாமணி, சிலப்பதிகாரம் முத லான காவியங்களையும், திருக்குறள் போன்ற நீதி நூல்களையும், தொல்காப்பியம் முதலான இலக்கணங் களையும், அவர் ஆர்வத்துடன் படித்து வந்தார். 'விவேகபாநு' என்ற பத்திரிகையைத் தொடங்கி அதனிலே பல கட்டுரைகளையும் கவிதைகளையும் எழுதி அத்துறையிலும் தம் புகழை அவர் வளர்த்து வந்தார்.

**கொழுந்துக்கு ஓர் ஊதல்**

இவ்வாறு பொருளியலுக்கும் ஆன்மவியலுக்கும் இடையே அவர் மனம் ஊசலாடிக் கொண்டிருந்த போது அவர் சென்னைக்குச் செல்ல நேர்ந்தது. அங்கே ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் இராமகிருஷ்ணா னந்தர் என்ற வங்கத்துறவி அம்மடத்தை ஆட்சி புரிந்து கொண்டிருந்தார். அவரிடம் சிதம்பரனார் சென்று உரையாடிக் கொண்டிருந்தபோது அவர் களுடைய பேச்சு சுதேசியத்தைப் பற்றித் திரும் பியது. சுவாமிகள், 'சுதேசித் தொழிலை ஊக்கு வதற்குத் தாங்கள் செய்துவரும் முயற்சிகள் யாவை?' என்று வினவ, சிதம்பரனார், "ஐய, மாயை உலகி னில் நான் செய்யக் கிடப்பது யாது? எல்லாம்

கனவே. என்மனம் துறவின்பால் நாடியிருக்கிறது; சுதேசியம் வளர்ந்தால் என்ன? பரதேசியம் ஒங்கினுல் என்ன?" என்று அவர் வெறுத்துக் கூறினர். சுவாமிகள் சிறந்த கர்மயோகி; சுதேசியத்தாலேயே இந்தியா உயிருடன் வாழமுடியும் என்ற உண்மையை அவர் உணர்ந்திருந்தார். சிதம்பரனாரின் ஆற்றலையும் உள்ளத் தூய்மையையும் அவர் செவ்வனே அறிந்து, அவரை நோக்கி, "ஐய, உலகைத் துறந்து ஓடியொளிவது உண்மைச் சந்நியாசமாகாது. தன்னலம் விடுத்து பிறர் நலம் நாடி உலகுக்குழைப்பதே துறவாகும். சுதேசியம் ஒன்றாலேயேதான் பாரத சமுதாயம் இன்று முன்னேற வேண்டும்; நீர் அதனையே கடைப்பிடிக்க; ஜப்பான் போய்ச் சுதேசக் கைத்தொழில்களைக் கற்று வருவதற்காக இரு வங்கர்கள் இங்கு வந்திருப்பதைப் பாரும். நீரும் உம் ஊர் சென்று பாரதம் உய்யச் சுதேசியத்தை எழுப்புக" என்று உபதேசித்தனர்.

அச் சொற்கள் காய்ந்த காட்டில் கடுமழை பொழிந்தது போல் சிதம்பரனாரின் செவியிற் புகுந்தன. துறவெண்ணமாகிய காய்ந்த புற்கள் மாய்ந்தன. "வந்தே மாதரம்" 'வாழ்க சுதேசியம்' 'சொந்தத் தேசம் சுகம் பெறுக' என்ற மந்திரங்கள் நாவில எழுந்தன.

**தொழில் மூலம் தீ**

ஊர் வந்து சேர்ந்தார். தரும சங்க நெசவுச்சாலை; சுதேசிய நாவாய்ச் சங்கம்; சுதேசிய பண்டக சாலை' என்ற மூன்று நிலையங்களும் நிறுவப்பெற்றன. ஆனல் இம்மூச் சங்கங்களையும் வைத்துக் கொண்டு சிதம்

பரனார் பட்ட இன்னல்கள் சொல்லத் தொலையா. நெசவுச்சாலை தொடக்கத்திலே நலிவுற்றது. தொடங்கும்போது உதவுவதாகக் கூறிய ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணம் சொல்லி நழுவலாயினர். தம்மிடம் நம்பிக்கையில்லாமை, அந்நியரிடம் கொண்ட அச்சம் இவை இந்நழுவலுக்குக் காரணம். என்றாலும் அதனைக் கைவிடாமல் சிதம்பரனார் காத்து வந்தார். பிறகு கந்தசாமிப்பிள்ளை, வைகுண்டம் பிள்ளை என்ற இரு தேசாபிமானிகள் அவருக்கு உதவியளிக்க வந்ததால் அச்சங்கம் உயிர் பிழைத்து ஒருவாறு நடந்து வரலாயிற்று. நாவாய்ச் சங்கத்தின் கதி வேறு. அதுவே சிதம்பரனாருக்குத் தாங்க முடியாத துன்பத்தையும் அதன்வழியாக அழிக்க முடியாத புகழையும் ஆக்கிக் கொடுத்தது.

நாவாய்ச் சங்கம்

அந்நாளில் தூத்துக்குடிக்கும் கொழும்புக்கும் இடையில் பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி என்றது தொழிற்பட்டுவந்தது. பிரிட்டிஷாரின் சொந்தமான இந்தக் கம்பெனியின் முயற்சியால் இந்தியத்தொழிலும் வியாபாரமும் முற்றிலும் நசுக்கப்பட்டன. இவ்வழியில் ஒரு சுதேசக் கம்பெனியை வேலைசெய்ய வைத்தால் பிரிட்டிஷ்காரரின் ஆணிவேர் அசையும் என்று சிதம்பரனார் கருதினர். அவர் அல்லும் பகலும் இதற்காக உழைத்து 1906-ல் சுதேசிக் கப்பல் கம்பெனி யென்ற பெயருடன் ஒரு சங்கத்தை நிறுவினர். பலர் அதற்கு மூலதனம் தர முன் வந்தனர். முதலில் வாக்களித்த சிலர் பிறகு கோழைத்தனத்தால் பின்வாங்கினர்.

அவர்களைத் திருத்தச் சிதம்பரனார் அரும்பாடுபட வேண்டியதாயிற்று.

திடந்தனை விடாது தினமும் அவரிடம்
அன்புற மொழிந்தும், அச்சமுறப் பேசியும்,
பின்புறம் ஏசியும், பெருமதி சொல்லியும்,
பலபல பகலும் பலபல இரவும்

அவர் பட்டபாட்டிற்கு எல்லையில்லை. இவ்வாறு கழகத்துக்கு அவர் முடிவில் ஓர் உருக்கொடுத்து எழுப்பினார்.

பணமிருந்தால் போதுமா? கப்பல்கள் வேண்டுமே! பம்பாயில் டாஜ்பாய் என்ற ஒருவருக்குச் சொந்தமாய் நடந்த ஷாலைன் ஸ்டீமர்ஸ் கம்பெனியாரிடமிருந்து சில கப்பல்களைக் குத்தகைக்கு வாங்கிவிடுதென்று முதலில் தீர்மானித்தார்கள். இதற்காக ஒரு நாகர் பம்பாய்க்கு அனுப்பப்பட்டார். ஒருவாறு ஒப்பந்தம் முடியும் தறுவாயிலிருந்தது. ஆனால் சில விஷமிகளின் முயற்சியால் பம்பாய்க் கப்பற்காரனின் மனம் மாறிவிட்டது. இப்பொழுது சிதம்பரனார் பெரிதும் கலங்கினார்; நண்பர்கள் இரங்கினர்; பகைவர்கள் இகழ்ந்தனர். அந்நியர் ஆரவாரித்தனர். அச்சமயத்தில் கொழும்பிலிருந்த சில நண்பர்கள் அவருக்கு உதவிசெய்ய முன்வந்தனர். சிதம்பரனாரே நேரில் கொழும்புக்குச் சென்று ஒரு பெரிய கப்பலை வாடகைக்குப் பேசிக்கொண்டுவந்தார். சுதேசக் கப்பல் வியாபாரம் தொடங்கிற்று. பிரிட்டிஷ் கம்பெனியார் எவ்வளவோ வழிகளில் இப்புதுக் கம்பெனியை ஒடிக்கப் பார்த்தனர். தூத்துக்குடி வியா

பாரிகள் அதற்கு இடங்கொடுக்கவில்லை. சுதேசக் கம்பெனி தலையெடுத்தது.

இவ்வாறு இரவல் கப்பலைக் கொண்டு நெடுநாள் சமாளிக்க முடியாது என்று கண்ட சிதம்பரனார், கப்பல்கள் வாங்க, வடநாடுசென்று பணம் திரட்டு வதில் ஈடுபட்டார்.

இவ்வாறு அவர் வடநாட்டில் அலைந்துகொண்டி ருந்தபோது அவருடைய மகன் உலகநாதன் என்ப வன் நோய்வாய்ப்பட்டு இறக்கும் நிலையில் நின்றான். உறவினர் அவரை ஊருக்கு வந்து போகும்படி எழுதி னார்கள். அதற்கு அவர், "என்மகனை இறைவன் காப்பான்" என்று சொல்லித் தம் கருமத்திலே கண் ணாயிருந்தார். சில மாதங்களுள் அவர் கனவு நனவா யிற்று. அவர் பம்பாயில் 'காலியா' என்ற கப்ப லொன்றை வாங்கிக்கொண்டு அதனில் ஏறித் தூத்துக் குடி வந்து சேர்ந்தார். மற்றொரு கப்பல் 'லாவோ' என்ற பெயருடன் பிரான்சில் வாங்கப்பட்டது. இவ் வாறு இரு கப்பல்கள் வந்து சேர்ந்தவுடன் தூத்துக் குடி மக்கள் குதூகலித்தனர்.

தமிழ்ப் பத்திரிகைகளெல்லாம் சிதம்பரனாரைக் கொண்டாடின. புதுச் சேரியிலிருந்த பாரதியார் வாழ்த்து அனுப்பினார். இவ்வாறு நன்கு தொடங் கின கம்பெனிக்கு உள்ளிருந்தும் புறமிருந்தும் பல இன்னல்கள் வந்தன. மூலதனம் உதவிய பங்கு காரர்கள் சிதம்பரனாருக்கு உண்டாகும் புகழைக் காணச் சகியாமல் அவரைப் பல இன்னல்களுக்குள் ளாக்கினர். பிரிட்டிஷ் நாவிகேஷன் கம்பெனியார் தம் தொழிலுக்கு நஷ்டம் வருவதைக் கண்டு பலவித மாகப் புதிய கம்பெனியை அழிக்க முயன்றனர்.

போலீஸாரும் பிரிட்டிஷ் கம்பெனிக்குச் சாதமாக வேலை செய்தனர். சிதம்பரம்பிள்ளையை எப்படியாவது அடக்கி விடவேண்டுமென்று அவர்கள் சமயம் பார்த்திருந்தனர்.

**கனல் மூள்கிறது**

சிதம்பரனார் மக்களிடையே ஊக்கம் பெருகுவதற்காக அடிக்கடி சந்து பொந்துக்களி லெல்லாம் கூட்டங் கூட்டி மக்களின் மனதில் சுதேச உணர்ச்சி வேரூன்றும்படி செய்து வந்தனர். மக்கள் தங்கள் வழக்குகளைத் தாமே தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றும், கைத்தொழிற் பள்ளிகளை நிறுவி ஆங்கே தொழிலாளர்கள் தொழிற் கல்விபெற வேண்டுமென்றும், தங்கள் சொத்துக்களை அந்நியர் பறித்துப் போகாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தினர். ஞான சங்கம் என்ற ஒரு சங்கத்தை நிறுவி அதனிற் பலரையும் சேரச்செய்து மேலே கூறின திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வரவும் அவர் முயன்றார்.

இவற்றைக் கண்ட வெள்ளையருக்கு அச்சமுண்டாயிற்று. 'வந்தேமாதரம்' என்ற கோஷம் அவர்கள் செவிக்கு நாராசம் போலப் பட்டது. இதற்குள் வ. வே. சு. ஐயர், சுப்பிரமணிய சிவா, பத்மநாபன் என்ற தீவிர வாதிகள் சிதம்பரனாரோடு கூடி அரசியல் பிரசாரத்துக்கு ஊக்கமளித்து வந்தனர். போலீஸ்காரரும் ஜில்லாக் கலெக்டரும் சிதம்பரனாரோடு பல முறைபேசியும் அவர் தம் போக்கிலிருந்து மாறவில்லை. நகர மக்கள், தொழிலாளர் முதலியோர் யாவரும் அவர் பக்கத்தில் நின்றனர். போலீசார் கூட்டங்

கூடலாகாதெனத் தடுத்துப் பார்த்தனர். ஆனால் கூட்டங்கள் நடந்து கொண்டே வந்தன.

இப்படி சிதம்பரனருக்கும் அரசாங்கத்தாருக்கும் இடையே பிறந்த மனக்கசப்பு, மந்தமாருதமாக, காற்றாக, பெருங்காற்றாக, புயலாக, கடும் புயலாக, முடிவில் சண்ட மாருதமாகப் பெருகிற்று. வடக்கே வங்காளத்தில் பிரபல தேசியவாதியாயிருந்த பெபின் சந்திர பாலர் என்றவரை அம்மாகாண அரசியலார் 6 மாதம் சிறைக் காவல் செய்து பிறகு விடுவித்தனர். அந்த நாளைத் திருநெல்வேலி ஜில்லா முழுமையும் கொண்டாட வேண்டுமென்று சிதம்பரனரும் அவருடைய நண்பர்களும் ஏற்பாடு செய்தனர். அந்நாளை யொட்டி ஒரு தரும வைத்தியசாலை, ஒரு தருமப் புத்தகசாலை, ஒரு பேச்சுப் பழகும் பள்ளி என்னும் நிலையங்களையும், சுயராச்சியம் என்ற பத்திரிகையும் தொடங்குவதாகத் தெரிவித்தனர். இவற்றையெல்லாம் அறிந்த போலீஸார் அந்த நாட் கொண்டாட்டத்தை எப்படியாவது தடுக்கவேண்டுமென்று தீர்மானித்தனர். சிதம்பரனரும் அவருடைய நண்பர்களும் அன்றைய கூட்டங்களில் கலந்து கொள்ளலாகாது என்று கட்டளையிட்டனர். சிதம்பரனரும் அவ்வுத்தரவை மீறினர்.

பெருந்தீ

அதை அறிந்து ஜில்லாக் கலெக்டர் அவரைத் திருநெல்வேலிக்கு வரவழைத்து அங்கே அவரை விசாரித்தார். சிதம்பரனர் சிறிதும் அஞ்சாமல் பேசினர். கலெக்டர் அவரை, ஜில்லாவை விட்டு வெளியேறவோ, அல்லது இனி அரசாங்கத்திற்கு எதிராகப்

பேசுவதில்லை என்று வாக்களித்து அவ்வாறு இருப்பதற்காக ஜாமின்தரவோ வேண்டும் என்றார். இச்சம்பாஷணையின் ஒரு பகுதிதான் இவ்வரலாற்றின் தொடக்கத்தில் காணப்பெறுவது. சிதம்பரனார் ஒன்றுக்கும் சம்மதிக்கவில்லை. ஆகவே கலெக்டர் அவரைச் சிறைக்கனுப்பினார். சிவா, பத்பநாபர், சிதம்பரனார் மூவரும் பாளையங்கோட்டைச் சிறையில் அடைக்கப்பட்டனர். அன்று 1908 மார்ச்சு மாதம் 12-ஆம் நாள்.

இச்செய்தி திருநெல்வேலி முழுவதும் காட்டுத் தீபோல் பரவிற்று. அந்நகர் போர்க்களமாக மாறி விட்டது. கடைகளெல்லாம் மூடப்பட்டன. எங்கும் கூட்டம். எங்கும் கலகம். ஆஷ் என்ற டிப்டி கலெக்டர் பெரும் போலீஸ் படையுடன் வெளிவந்து கூட்டத்தார்களை அடக்க முயன்றார். தடியடிகள் நிரம்பவும் நடந்தன. போலீஸார் துப்பாக்கியால் சுட்டனர். சில போலீஸாரும் மக்களால் காயப்படுத்தப் பட்டனர். மக்களிலும் நால்வர் உயிரிழந்தனர். பலர் காயப்பட்டனர். அவ்வாறு மார்ச்சு 13-ஆம் நாள் திருநெல்வேலி அல்லோல கல்லோலப்பட்டது. கவர்னருக்குத் தந்திகள் பறந்தன. மூன்று நாட்களுக்குப் பின்பே கலகம் அடங்கிற்று. எங்கும் போலீஸ் ஆட்சி. பலர் கைது செய்யப்பட்டனர்.

**'தீ மூண்டு எரிகிறது'**

மார்ச் மாதம் 26-ஆம் நாள் சிதம்பரனார் மீதும் அவருடைய இரு நண்பர்கள் மீதும் இராஜத்துரோக வழக்குப் போட்டார்கள். வழக்கை ஜில்லா அடிஷனல் மாஜிஸ்டிரேட் முதலில் விசாரித்து, பிறகு

அதனைச் செஷன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பினர். ஜூலை மாதம் 7-ஆம் நாள் தீர்ப்பு கூறப்பட்டது. சிவாவுக்குப் பிரசங்கம் செய்ததற்காகத் தீவாந்தர தண்டனை; சிதம்பரனர் அவருக்கு உதவி செய்ததற்காக இருபது ஆண்டுகள் கடுஞ்சிறைவாசம்; ஒரு பிரசங்கம் செய்ததற்காக இருபது ஆண்டுகள் தீவாந்தரவாசம்;" என்று தீர்ப்புக்கள் அளிக்கப்பட்டன.

இக்கொடுந்தண்டனையை இருவரும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டனர்.

**நாடெல்லாம் தீ !!**

இந்தியா முழுவதும் இச்செய்தி பறந்தது. அதே வாரத்தில் தான் லோகமான்ய திலகரும் பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதியதற்காக ஆறு வருடம் தீவாந்தர தண்டனையும், பதினுயிரம் ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார். இவ்விரு நிகழ்ச்சிகளும் இந்தியமக்கள் யாவர் மனத்திலும் அச்சத்தையும் வெறுப்பையும் மூட்டின. பத்திரிகைகளெல்லாம் தாக்கி எழுதின. அப்படியெழுதியதற்காகச் சில பத்திரிகைகளை அரசாங்கத்தார் தண்டித்தார்கள்.

இந்தியா முழுவதும் ஒரே கொந்தளிப்பாயிற்று. சில ஆங்கிலேயர் கூட அரசாங்கத்தின் கொடுமையைத் தாக்கிப் பேசினர். இங்கிலாந்தில் பல நல்லோர்களின் மனம் புண் அடைந்தது. அப்போது இந்தியா மந்திரியாயிருந்த மார்லி பிரபு இந்திய இராஜபிரதிநிதியான மிண்டோ பிரபுவுக்கு எழுதிய கடிதத்தில் தண்டனையின் கொடுமையையும் அநீதியையும் பற்றிக் கடுமையாக எழுதினர். மிதமிஞ்சிய கொடுமை எல்லாருடைய மனத்தையும் தாக்கிற்று.

சிதம்பரனர் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்தார். அங்கே தீவாந்திர தண்டனை 6 ஆண்டுகளெனவும், சிறைவாசம் 4 ஆண்டுகளெனவும் குறைக்கப்பட்டன. இவ்விரண்டையும் ஒருங்கே அனுபவிக்கலாம் என்றும் கூறப்பட்டது. எப்படியாஞல் என்ன? செல்வக்குடியில் பிறந்து, தமிழறிவை யெல்லாம் பெற்று, வக்கீல் தொழில் புரிந்து, மக்களின் அடிமைத்தளையை அறுப்பதற்காகக் கப்பலோட்டி, தொழில் கற்பித்துத் தமக்கென வாழாமல் பிறர்க்குறியரான அண்ணலார் உலகம் உய்யும் பொருட்டு முதலில் கோவையம்பதியிலும் பிறகு கண்ணனூரிலும் சிறைவாசம் செய்தனர்.

**தவம் ; கடுந்தவம்**

அங்கு அவர் காலுக்குக் கரும்பொற் சுழல்கள் பூட்டப்பட்டன. உண்பதற்குச் சட்டியும் கலயமும் கொடுக்கப்பட்டன. கேழ்வரகு கூழ் அருந்த அளிக்கப்பட்டது.

சிறையில் தினந்தோறும் சணல் கிழி இயந்திரம் சுற்றியதால் கைத்தோல் உரிந்தது. அதைப்பார்த்து ஜெயிலர் இரங்கி, இயந்திரம் சுழற்றுவதற்குப் பதிலாகச் செக்கிழுக்கச் செய்தார்.

**சிறிது ஓய்வு**

சில நாட்கள் கழித்து ஹைக்கோர்ட்டிலிருந்து உத்தரவு வந்தது. அதன் பயனல் கொடிய சிறைவேலை ஒழிந்தது. சொந்த உணவும், சொந்த உடையும், சொந்த படுக்கையும் வந்தன. மனம்போல வேலை செய்ய இடம் கிடைத்தது. காலையும் மாலையும்

சிறைக்குள்ளே உலாவலாம்; நூல்கள் படிக்கலாம்; எழுதலாம். அறிவிற் சிறந்த சிதம்பரனார் அக்காலத்தில் சில ஆங்கில நூல்களைத் தமிழிலே மொழிபெயர்த்தார். சில அற நூல்களை எழுதினார் ஒரு சமயம் அவர் சென்னை இராஜதானிக் கலாசாலையில் தமிழ்ப் புலமை நடத்தி வந்த சாமிநாதையர் அவர்களுக்குத் தமக்குத் தமிழிலுள்ள சில ஐயங்களை விளக்குமாறு விண்ணப்பிக்க அவரும் அவ்வாறே செய்தனர். இச் செய்தியைப் பற்றி ஐயரவர்களே பின்வருமாறு எழுதியுள்ளார்.

"பிரஸிடென்ஸி காலேஜில் மிஸ்டர் ஜெ. எச். ஸ்டோன் இருந்த காலத்தில் ஒருசமயம், காலஞ் சென்ற தூத்துக்குடி வ. உ. சிதம்பரம் பிள்ளை சிறையிலிருந்து திருக்குறளிற் சில சந்தேகங்களை எனக்கு எழுதியனுப்பி விடையெழுத விரும்பினர். சிறையிலுள்ள அவருக்கு நான் கடிதம் எழுதுவது உசிதமாக இருக்குமோ வென்று ஸ்டோன் துரையைக் கேட்டேன். 'கடிதம் எழுதவேண்டும். சிறைச் சாலைக்குள் ஒருவரது பழக்கமும் இல்லாமல் கஷ்டப் படுபவர்களுக்கு நாம் உதவி செய்வது அவசியம். ஆனால் கடிதத்தை நீங்கள் எழுதி நேரே அனுப்ப வேண்டாம். எழுதி என்னிடம் கொடுங்கள்; நான் சிறையதிகாரி மூலம் அவருக்கு அனுப்பிவிடுகிறேன்" என்றார். நான் அங்ஙனமே செய்தேன்."

இவ்வாறு சிதம்பரனார் தம் சிறைவாசத்தை வீணாக்காமல் தமிழ்க்கல்வியிற் செலவிட்டார். என்றாலும் சிறைவாசம் இன்பமாயிருக்குமோ? எத்தனையோ இன்னல்கள்; இகழ்ச்சிகள்; துன்பங்கள்;

இவ்வாறு தமிழ் வீரர் கோவை சிறையிலே நாட்டின் விடுதலைக்காகக் கடுந்தவம் புரிந்து கொண்டிருந்தபோது அவர் மூட்டிய தேசியத் தீ முன்னிலையிலும் நாடெங்கும் விபரீதமாக எரியத் தொடங்கிற்று. சாத்வீக முறையில் முயற்சிப்பதால் சிறைவாசமே கிடைப்பதன்றி நாட்டுக்கு நன்மை யொன்றும் விளையவில்லையே என்றெண்ணிய சில இளைஞர்கள் பொறுமை இழந்து வலிய முறையில் இறங்கலாயினர். இது யாதாகுமோவென்று முதியோர்கள் கலங்கினர். நாட்டின் பல மூலைகளிலும் பலாத்காரங்கள் தோன்றின. சில வெள்ளையர் ஆங்காங்கே உயிரிழந்தனர். திருநெல்வேலியும் அந்நிலைக்கு விலக்காகவில்லை. சில அறிவிலிகள் ஆஷ் என்ற ஆங்கிலேய கலெக்டரை ஒரு நாள் சுட்டு வீழ்த்தினார்கள். இம்முறை சிதம்பரனருக்கு உடன் பாடில்லை.

**விடுதலை**

1912ல் சிதம்பரனருக்கு விடுதலையாயிற்று. நான்காண்டுகள் அவர் கொடுஞ்சிறையில் வசித்து வந்தார். பிறகு அவர் சென்னையில் சிலகாலம் தங்கிப் பிறகு கோயில்பட்டிக்குச் சென்று தம் வக்கீல் தொழிலை நடத்தலானர். நாட்டின் நிலைமையும் இக்காலத்துக்குள் மாறிவிட்டது. சிதம்பரனருக்கு அம்முறையில் நம்பிக்கையில்லை. மகாத்மாவிடம் அவருக்கு அளவற்ற மதிப்புண்டு; எனினும் அவருடைய முறையில் நம்பிக்கையில்லை. ஆகவே முன்போலக் காங்கிரஸில் உழைப்பதினின்று அவர் பின் வாங்கினர். விடுதலையான பின் இருபத்துநாலாண்டுகள் அவர் உயிருடன் வாழ்ந்துவந்தாரெனினும் அவர் தம் வாழ்க்

கையை அடக்கமாகவே நடத்திவந்தார். தமிழ் நூல்கள் படித்தலும், இயற்றலுமாகிய பணிகளிலுமே அவர் காலங்கழித்தனர். அவர் 'மெய்யறிவு' 'மெய்யறம்' 'மனம்போல வாழ்வு' முதலான நீதி நூல்களையும் 'தொல்காப்பியம்' என்ற சிறந்த இலக்கண நூலையும், 'திருக்குறளையும்' பதிப்பித்தார்.

**புகழ்**

இவ்வாறு தம் வாழ்க்கையையே தமிழுக்கும் நாட்டுக்கும் அர்ப்பணம் செய்த வீரத் தமிழரைத் தமிழகமும் இந்தியாவும் என்றும் புகழோடு கொண்டாடும். 1949 ஆம் ஆண்டில் இந்திய கவர்னர் ஜெனரலான மேன்மை தங்கிய ஸ்ரீ மான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தூத்துக்குடித் துறை முகத்தில், இந்தியாவுக்கும் மலேயாவுக்கும் இடையிலே செல்லத்தக்க முதல் இந்தியக்கப்பலுக்கு 'வ. உ. சிதம்பரம்' என்று நாமம் சூட்டிக் கடலில் ஓடவிட்டபோது நம் சிதம்பரனாரின் புகழுடல் மறுமுறையும் இவ்வுலகில் நடமாடலாயிற்று.

---

## 3. பாட்டுக்கு ஒரு புலவன்

1947-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ஆம் நாள் நாம் சுதந்திரம் பெற்றோம். நூற்றைம்பது ஆண்டுகளாக அந்நியரின் ஆட்சியில் கட்டுண்ட நம் பாரத மாதா அன்று விடுதலை அடைந்தாள். நாட்டு மக்களெல்லாம் குதூகலித்தார்கள். எங்கும் ஆட்டம்; எங்கும் பாட்டு; இந்திய நாடு முழுமையும் ஒரே முழக்கம். மக்கள் அன்று தத்தமக்குத் தெரிந்த தேசிய கீதங்

களைப் பாடினர். வங்காளம், மத்திய பிரதேசம், பஞ்சாபு, பம்பாய் ஆகிய மாகாணங்களெல்லாம் பாடின-



சி. சுப்ரமணிய பாரதி

எவற்றைப்பாடின? அவர்களுக்கு இரண்டே பாட்டுக்கள் தாம் தெரியும். 'வந்தே மாதரம்', 'ஜனகணமன',

என்பவை அவை. மகாத்மா காந்தி சில பஜனைப் பாடல்களைக் கற்றுக் கொடுத்திருந்தார். அவற்றுள்ளும் 'வைஷ்ணவ ஜனதோ' 'ரகுபதி ராகவ' இந்த இரண்டு பாடல்களே அவர்களுக்கு மனப் பாடமாயிருந்தன. இந்த நான்கு பாடல்களைத் திரும்பத் திரும்ப அவர்கள் பாடினார்கள். நம் தமிழ் நாட்டிலோ ஒரு மகான் தம் தீர்க்க தரிசனத்தால் இந்த நன்னாள் வரப்போவதை முன்னமேயே உணர்ந்து, அதற்கெனவே அடுக்கடுக்காகப் பல பாடல்களைப் பாடி வைத்திருந்தவர்போலப் பாடி வைத்திருந்தார். சுதந்திரப் போரை மக்கள் நடத்திய காலத்தில் அவர்களுக்கு அப்பாடல்களெல்லாம் மனப்பாடமாயிருந்தன. சுதந்தரதினம் வந்தது. குழந்தைகள், பெரியோர்கள், ஆண்கள், பெண்கள், உத்தியோகஸ்தர், தொழிலாளிகள் யாவரும், 'வந்தே மாதரம்', 'பாருக்குள்ளே நல்ல நாடு' 'பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்', 'தாயின் மணிக்கொடி பாரீர்!' 'ஆடுவோமே—பள்ளுப் பாடுவோமே!' 'விடுதலை! விடுதலை! விடுதலை!' 'செந்தமிழ் நாடெனும் போதினிலே' என்று இன்னோரன்ன நூற்றுக்கணக்கான பாடல்களைப் பாடி அந்நாளைக் கொண்டாடினர். இவ்வளவு முன்னுணர்ச்சியுடன் இவ்வளவுப் பாடல்களைப் பாடியளித்த வள்ளல் யாவர்? அவர் வாழ்க்கை எத்தகையது? அவரால் நாடு அடைந்த நன்மை யாது? அவரை நாம் நம் பொக்கிஷம் என்று கொண்டாடக் காரணம் என்ன? என்ற இத்தகைய கேள்விகளுக்குக் கீழே விடை தருகிறோம்.

**தோற்றம்**

நம் கதை இன்றைக்கு ஏறக்குறைய எழுபது தாண்டுகளுக்கு முன் தொடங்குகிறது. தென்னிந்தி

யாவிலே பெரும் புகழுடன் விளங்கி வந்த ஜமீன் களுள் எட்டையாபுரம் என்றது மிக மேன்மையுடன் விளங்கிற்று. அதனை ஆண்டு வந்த மகாராஜா அவர்கள், பண்டைத் தமிழ் மன்னர்களைப் போல், பலகலைகளிலும் அறிவு படைத்து விளங்கினர். அவருடைய சபையில் பல புலவர்கள் வீற்றிருந்தனர். அவர்களுள் தலை சிறந்து விளங்கியவர் சின்னசாமி ஐயர் என்ற ஒருவர். அவருக்குத் தமிழுடன் ஆங்கில மும் தெரியும்; தர்க்கம், கணிதம் என்ற கலைகளில் அவர் தமக்கு இணை எவருமில்லையெனத் திகழ்ந்தார். அவருக்குப் புதல்வராக 1882-ஆம் வருஷத்தில் ஒரு மகான் தோன்றினர். அவரே வயது வந்தபின் பல அருமையான பாடல்களையெல்லாம் பாடிய பெரியார். அவரையே தமிழுலக முழுவதும் இன்று பாரதியார் என்று கொண்டாடுகிறது. இவருடைய பிள்ளைத் திருநாமம் சுப்பிரமணியன் என்பது.

## இளம்போக்கு

சுப்பிரமணியர் ஐந்து பிராயத்தினராயிருந்த போதே அவருடைய தாயார் இறந்து போனர். தாயற்ற பிள்ளையை வளர்க்க வீட்டில் பல உறவினர் இருந்தனர். ஆதலால் அவர் கவலையற்றவராகவே வளர்ந்து வந்தார். ஆனல் சின்னசாமி ஐயரோ மிகுந்த கடுமைக்காரர். தம்மைப்போல் தம் பிள்ளை கணிதத்தில் நிபுணராக வேண்டுமென்று அவர் கருதி, குழந்தை எப்போதும் புத்தகமும் கையுமாக இருக்க வேண்டுமென்று விரும்பினர். பிள்ளைக்கோ கட்டுப் பாட்டில் விருப்பமேயில்லை. ஊர்ப் பிள்ளைகளெல் லாம் ஆடியும் பாடியும் காலங்கழிப்பதையும் தாம்

மட்டும் புத்தகத்தோடு அழவேண்டி யிருப்பதையும் அவர் வெறுத்தார்.

**விளையும் பயிர்**

பள்ளிக்கூடப்படிப்பின் கதியும் இதுவேதான். அதிலும் அவர் மனம் செல்லவில்லை. ஏழெட்டு வயதினராயிருந்த போதே அவருக்குக் காவடிச் சிந்துகளிற் பல பாராமல் தெரியும். கம்பீரமான குரலும் சங்கீத ஞானமும் அவருக்கு இயற்கையிலேயே அமைந்திருந்தன. குழந்தை இனிமையாகப் பாடுவதைக் கேட்டுப் பெரியோர்களெல்லாரும் மகிழ்வர். வயது முதிர்ந்தவர்கள் கூடி ஏதாவது வேதாந்த விஷயம் பேசிக்கொண்டிருந்தால் அங்கே நம் சுப்பிரமணியத்தைக் காணலாம். இவரும் அவர்களுடைய பேச்சிலே கலந்து கொள்வார். இவற்றைச் சின்ன சாமி ஐயர் பார்க்க வேண்டியதுதான் தாமதம். தந்தைக் கஞ்சித் தனையர் எடுப்பார் ஓட்டம். அவருக்குத் தகப்பனுடன் இருக்கவே பிடிக்கவில்லை. அவருடைய பாட்டனர் அவ்வூரிலேயே வாழ்ந்து வந்தார். நம் இளைஞர் தம் தகப்பனுருக்குப் பயந்து பாட்டனர் வீட்டுக்கு ஓடி விட்டார்.

**பட்டம்**

சுப்பிரமணியத்தைக் காண எட்டையாபுரம் மகாராஜாவுக்கு மிகுந்த ஆவல். அவர் அடிக்கடி குழந்தையைத் தம் அரண்மனைக்கு அழைத்து அவரைப் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்வார். இளங்குழந்தை மிகத் தெளிவாய்ப் பேசுவதையும் அவர் கேட்டு ஆனந்தப்படுவார். அவர், குழந்தை தானே கட்டிப் பாடும் கவிதைகளைக் கேட்டு இன்புறுவார். அவரே

சுப்பிரமணியத்துக்குப் பாரதி என்ற பட்டத்தைச் சூட்டினார் என்பர்.

### இளங்காதல்

பாரதியாருக்கு வயது பதினைன்கு ஆயிற்று. பாரதியாருக்குப் பள்ளிப் படிப்பு ஏறாவிட்டாலும் அவருடைய கவித்துவம் உதய சூரியனின் ஒளியைப் போல் மேலோங்கி வந்தது. அவருக்கு விவாகமும் ஆயிற்று. இளங்காதல் அவருடைய இளங்கவிதையைத் தூண்டிற்று. "தேடக்கிடையாத சொர்ணமே, உயிர்ச் சித்திரமே, மடவன்னமே" என்றெல்லாம் காதலியைக் குறித்து அவர் பாடத் தொடங்கினார். ஏழு வயதினரான மனைவிப் பெண்ணுக்கு இவையெல்லாம் என்ன தெரியும்!

### முதல் துக்கம்

பாரதியாருக்குக் கிருஷ்ண சிவன் என்ற ஓர் அத்தை புருஷன் உண்டு. அவர் பழங்கால மனிதர். சிவபக்தி நிறைந்தவர். ஆனால் பரம ஏழை. அவர் தம் மனைவியாருடன் காசிக்குச் சென்று அங்கே வாழலானார். காசிக்குச் சென்றபின் அவருடைய வாழ்க்கை சீரடைந்தது. சிவமடம் என்ற ஓரிடத்தில் சுகமாக வசித்துவர அவருக்கு வாய்ப்பு கிடைத்தது. அவர் அவ்வாறு அங்கே வாழ்ந்து கொண்டிருக்க, எட்டையாபுரத்தில் சின்னசாமி ஐயர் பற்பல குடும்ப நஷ்டங்களை யடைந்து, வறுமையுற்று, முடிவில் இறந்தும் போனார். பாரதியாருக்கும் அவர் தந்தைக்கும் இடையே அன்பு என்றுமே இருந்ததில்லை. தகப்பனாரின் பணப்பித்தையும், கொடுமைக் குணங்களையும் அவர் என்றுமே பொறுத்து வந்தார். ஆனால்

தம்மைக் காப்பாற்றிவந்த அவரும் இறந்துபோகவே அவர் மனம் உருகினார்.

**காசிவாசம்**

இந்நிலையில் பாரதியாருக்கு அத்தையின் உதவி அனுகூலமாயிருந்தது. அத்தை அவரைக் காசிக்கு அழைத்துக் கொண்டு அருமையாய்ப் பாதுகாக்கத் தொடங்கினார். அங்கே அவருக்கு ஒருகுறைவுமில்லாமல் கிருஷ்ணசிவன் பார்த்துக் கொண்டார். அங்குள்ள கலாசாலையிற் சேர்த்து ஹிந்தி, ஸம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளில் அவர் நல்ல தேர்ச்சி பெற்றார். ஆனால் அவருடைய மனப்போக்கு அங்கு அவருக்கு முற்றிலும் மாறத் தொடங்கிற்று. அங்குள்ள மக்களின் ஆசாரங்களை அவர்பின் பற்றலானார். தலையைக் கிராப் செய்து கொண்டார்; மீசை வளர்த்தார்; கண்ட இடங்களில் உண்டார். இவ்வாறு வெளி ஒழுக்கங்கள் ஒரு விதம் மாறிக் கொண்டுபோக, அக உணர்ச்சி பிறிதொரு முகமாகப் பக்குவப்பட்டு வந்தது. கங்கைக் கரையிலே நெடுநேரம் இருந்து பார்ப்பதாலும், அதன் நீரிலே முழுகி விளையாடுதலாலும், அதன் மீது படகுகளிலே தோழர்களுடன் உல்லாசப் பிரயாணம் போவதாலும் அக உணர்ச்சி தூய்மையுற்றது. இயற்கையின் பெருமைகளெல்லாம் அவருக்குத் தெள்ளெனத் தெளிந்தன. பராசக்தியின் பால் பக்தி உண்டாயிற்று. எல்லாம் அப்பரம்பொருளின் தோற்றங்களே என்ற பாவம் உண்டாயிற்று. வெளி வேறுபாடுகளில் வெறுப்புக்கொண்டார். அக அழகில் ஆனந்தங்கண்டார்.

**ஷெல்லிதாசன்**

1902 ஆம் ஆண்டு அவர் திருநெல்வேலி திரும்பி வந்தார். அவர் தலையையும் உடையையும் கண்டும், அவர் ஜாதி வேற்றுமை சிறிதும் பாராட்டாமல் எல்லோருடனும் சரிநிகராகக் கலந்து பழகி வருவதைப் பார்த்தும், மக்களின் சம்பிரதாயங்களையும் இழித்துக் கூறிய பேச்சுக்களைக் கேட்டும்,ஊரார் பிரமித்தனர்.

என்றாலும், எட்டையாபுரம் சமஸ்தானாதிபதி பாரதியாரிடம் கொண்ட மோகம் போகாமல் அவரை அழைத்துத் தம்மிடம் வைத்துக்கொண்டார். அக் காலத்தில் பாரதியார் தமிழ், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் முதலிய மொழிகளிலுள்ள அரிய நூல்களைப் படித்தல், விமர்சனம் செய்தல், முதலிய செயல்களில் காலங் கழித்து வந்தார். தமிழில் நல்ல ஊற்றமுண்டாயிற்று. மகாமகோபாத்தியாயர் ஐயரவர்கள் பதிப்பித்து வெளியிட்ட சங்க நூல்களையும் சிலப்பதிகாரம் முதலிய காவியங் களையும் அவர் ஊன்றிப் படித்தார். 'ஷெல்லிதாசன்' என்று தமக்குப் புனைபெயரிட்டுக் கொண்டு பல கட்டுரைகளை எழுதியும் பாடல்களைப் பாடியும் பத்திரிக்கை களுக்கு எழுதிவந்தார். ஆங்கிலக் கவிஞர்களான ஷெல்லி, கீட்ஸ், பைரன் ஆகியோர்களி யற்றிய கவிதைகளின் கருத்துக்களையும் பாவங்களையும் தமிழில் வெளிப் படுத்தி வந்தார். இக்காலத்தில் அவர் மனம் நாஸ்திகத்தில் சென்றிருந்தது என்பர் சிலர்.

**மனமாற்றமும் முயற்சிகளும்**

அரசியல் விஷயத்தில் அவர் மனம் புரட்சிகரமாயிருந்தது. நாட்டில் காங்கிரஸ் இயக்கம் வலுவடைந்தது. திலகர், லஜபதிராய், பால் முதலியோர் ஆங்கில அரசிய

னுக்கு எதிராக மிகவும் வலிந்து பேசி வந்த காலம். இளைஞர் மனம், அப்பெரியோர்கள் சென்ற முறையிலே சென்றது சட்ட விரோதமான செயல்களே நாட்டன்பு காட்டும் வழிகள் என்பது அவர்கள் மனதில் பட்டது. ஆங்கிலேயர்களும் கொடிய வலுமுறைகளைக் கையாண்டு வந்தனர். பாரதியார் மனமும் இக் குழப்பங்களுள் ஈடுபட்டது.

பாரதியார் சில மாதங்கள் மதுரையில் சேதுபதி ஹைஸ்கூலில் தமிழாசிரியராக இருந்தார். அவருடைய மனோவேகத்துக்குப்பள்ளிக்கூட ஆசிரியத் தொழில் போதாதாயிற்று. சென்னையில் ஜி. சுப்பிரமணிய ஐயர் நடத்தி வந்த 'சுதேசமித்திரன்' பத்திரிகாலயத்தை அவர் சார்ந்து, அப் பத்திரிகையின் வாயிலாகப் பல கட்டுரைகளையும் பாடல்களையும் வெளியிட்டு வந்தார். அவர் சுடச்சுட எழுதும் பாடல்களைப் படித்துப் பலர் அவரை ஊக்கி வந்தனர். அவர்களுள் தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களும் ஒருவர்.

சுதேசமித்திரனிலும் அவர் நீண்ட காலம் இருக்க முடியவில்லை. அவருடைய சுயேச்சைமனம் ஒருகட்டுப் பாட்டுக்கும் அடங்கி யிராதன்றோ? அவருடைய எண்ணங்களைத் தங்குதடை யின்றி அப்பத்திரிகையில் எழுத முடிய வில்லை. "என்று தணியுமிந்த சுதந்திர தாகம்?" என்று அவர் மனம் வெதும்பினர்.

அவர் சுதேசமித்திரனை விட்டு வேறொரு தமிழ்ப் பத்திரிகையின் ஆசிரியரானர். அதுவும் அவர் மன விரிவுக்கு ஏற்றதாக இல்லை. 1907 இல் 'இந்தியா' என்னும் பத்திரிகையைத் தொடங்கினர்.

**நாடெங்கும் வேகம்**

1907-ஆம் ஆண்டு இந்திய வரலாற்றில் ஒரு கொடிய காலம். லாலா லஜபதிராய் நாடு கடத்தப் பட்டார்; வ. உ. சிதம்பரம் பிள்ளை மீது இராஜத் துரோக வழக்கு தொடரப்பட்டது; சூரத்தில் திலகர் கட்சிக்கும் கோகலே கட்சிக்கும் பிணக்கு. நாடெங் கும் ஒரே வேகம்.

சென்னைக் கடற்கரையில் பல கூட்டங்கள் கூடும். பாரதியார் அக் கூட்டங்களி லெல்லாம் பேசுவார். அவர் ஆவேச மொழிகளால் கேட்பவர் மனம் அப்படியே உருகிவிடும். அவர் தம்முடைய வீரப்பாடல்களை உரத்த குரலில் பாடும்போது கேட்ப வருக்கு மயிர்க் கூச்செறியும்.

**சூரத் காங்கிரஸ்**

பாரதியாரும் வ. உ. சிதம்பரம் பிள்ளையும் சூரத் காங்கிரஸுக்குச் சென்றிருந்தனர். முற்போக்கா ளரின் தலைவரான திலகரைக் காங்கிரஸிலிருந்து அகற்றிவிடவேண்டுமென்று மிதவாதிகள் முயன் றனர். அம்முயற்சியில் பல தடியடிகளும் நிகழ்ந்தன. அக் கூட்டத்திற்குச் சென்று திரும்பி வந்தபின் பாரதியாரின் அரசியல் உழைப்புககள் வலுத்தன. எங்கும் கூட்டம்! எங்கும் பிரசாரம்! எங்கும் ஆரவாரம்! எல்லா இடங்களிலும் பாரதியாரின் தலைமை!

**புதுவைப் பிரவேசம்**

சிதம்பரம் பிள்ளையின் மீது இராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பெற்று அவர் தண்டனைக்

குள்ளானூர். அவருடன் சேர்ந்திருந்த சில நண்பர் கள் மீதும் குற்றம் சாட்டப்பட்டது. பாரதியார் மீதும் 'வாரண்டு' எழுந்தது. அச்சமில்லை யச்ச மில்லை அச்சமென்ப தில்லையே! என்று பாடியவர்க்கு அச்சமும் உண்டாகுமோ? அவர் அஞ்சவில்லை, எனி னும் சிறைக்குச் சென்றால் தம் மனவிருப்பப்படி பாடவும் எழுதவும் இயலாதே யென்றெண்ணினூர். அவருடைய நண்பரொருவர் அவரை ஒருவருக்கும் தெரியாமல் புதுச்சேரியில் கொண்டு போய் விடுவதாகக் கூறவே, அவர் அவ் யோசனைக்கு இசைந்தார். புதுச்சேரி அந்நியர் ஆட்சியிலிருந்ததால் ஆங்கிலே யர் அங்குப் போய் அவரைப் பிடிக்க இயலாது என்று அவர் எண்ணினூர்.

ஆனல் புதவை புகுந்தும் பாரதியாரின் தொல்லை நீங்கவில்லை. சென்னைப் போலீஸார் புதுவைப் போலீஸார் மூலமாய் அவருக்குத் துன்பமிழைக்க எண்ணினூர். அவர் அடைக்கலம் புகுந்திருந்த இடத் தில் இருக்க முடியாதபடி அவ்வீட்டாரை அவர்கள் துன்புறுத்தினர். பாரதியார் மனம் புழுங்கிற்று.

சொல்லொணுத் துயரை அவரடைந்தார்.

திருவல்லிக்கேணியில் கிருஷ்ணமாச்சாரி என்ற நண்பர் பாரதியாருக்கு உண்டு. அவர் பாரதியாரிடம் உயிர் நட்பு கொண்டிருந்தார். அவர் புதுச்சேரிக் குச் சென்று பாரதியார் எப்படியிருக்கிறூர் என்று பார்க்க வந்தார். அவருக்குப் புதுவையில் சில உற வினர்களும் நண்பர்களும் உண்டு. அவரைக் கண்ட வுடன் பாரதியாருக்குப் போன உயிர் வந்தது

போலாயிற்று. கிருஷ்ணமாச்சாரியாரை அவருடைய நண்பர்கள் 'குவளைக் கண்ணன்' என்று அழைப்பர். அவரைக் கண்டபோது ஸ்ரீ கண்ணபிரானே தம்மைக் காக்கக் குவளைக் கண்ணனாகப் புதுவை வந்தார் என்று பாரதியார் கருதினார். அச் சந்தர்ப்பத்தை மனத்தில் வைத்துக்கொண்டே அவர் பாடிய கண்ணன் பாட்டில் 'கண்ணன் என் சேவகன்' என்று பாடினர் போலும்.

குவளைக் கண்ணனார் பாரதியார் தங்குவதற்குரிய தகுந்த ஏற்பாடுகளை யெல்லாம் செய்துவைத்தார். பாரதியாரின் புதுவை வாழ்க்கை செவ்வையாகத் தொடங்கிற்று. 'இந்தியா' பத்திரிகையை அவர் அங்கிருந்தே நடத்தலுற்றார். பல நண்பர்கள் அங்குக் கூடினார் சிறந்த தேசியவாதிகளான வ. வே. சு. ஐயரும், அரவிந்தகோஷரும் புதுச்சேரிக்கு வந்தனர். தேசாபிமானிகள் பலர் அங்கு வந்து கூடினார். பாரதியாரின் பத்திரிகையும் நடந்து வந்தது.

**தொல்லை மேல் தொல்லை**

ஆனால் இந்தச் சுகவாசம் நீடித்திருக்கவில்லை. பிரிட்டிஷ் இந்தியாவில் கொடிய அடக்குமுறை தாண்டவமாடிற்று, பாரதியாரின் உறவினர் பலரை அவர்கள் ஊர்களிலே போலீஸார் தொந்தரவு செய்தனர். பாரதியாருக்குப் பணமோ கடிதமோ அனுப்புபவர்களுக்குக் கொடிய தண்டனை விதிக்கப்பட்டது. பாரதியார் வீட்டில் நண்பர்களுக்குக் குறைவில்லை. ஆனால் உண்ணச்சோறு கிடையாது. வறுமை தாண்டவமாடிற்று. இரகசிய போலீஸார் எப்பொழுதும் தொல்லைப்படுத்திக் கொண்டிருந்தார்கள். அச்

சமயம் புதுவையில், 'தேர்தல்' என்றால் பெருங்குழப்பந்தான். இவ்வளவுதான் அநியாயம் நடக்கும் என்று சொல்லமுடியாது. கொலை, திருட்டு, ஆள் தூக்குதல், எதுவும் இயல்பே.

பாரதியார் இளமையிலே சிறிதுகாலம் நாஸ்திகர்போல் நடந்துவந்தாரேனும் புதுவைக்கு வந்த பின் அவரைப் போன்ற தீவிர கடவுள் பக்தர் எவரும் இலர் என்றவாறு மாறினார். பராசக்தி அவர் கண்முன் எப்பொழுதும் நிற்பள். அவர் எப்பொழுதும் நெற்றியில் அம்பிகையின் பிரசாதமான குங்குமம் தரித்திருப்பார். பராசக்தியே உலகம் என்றெண்ணினார். எல்லாம் அவள் செயலென்றுணர்ந்தார். அவளையே பாடி ஆறுதலடைவார்.

**கவிதை ஊற்று பொங்கலாயிற்று**

இவ்வறுமை நிலையில்தான் பாரதியாருக்குக் கவிதாசக்தி அதிகமாக ஊறிற்று. எத்தனையோ கற்பனைகள் அவர் மனத்தில் எழுந்தன. 'பாஞ்சாலி சபதம்' 'ஞானரதம்' 'குயிற்பாட்டு', 'கண்ணன் பாட்டு' என்ற அருமையான நூல்கள் புதுவை வறுமையிலே பூத்த மலர்கள். கவிதையில் மனம் ஊன்றியிருக்கும் போது அவருக்குப் புற உலக நினைவே இராது.

இக்காலத்தில்தான் அவருக்குச் சிறந்த தத்துவ ஞானம் உண்டாயிற்று. குள்ளச்சாமி, யாழ்ப்பாணத்துச் சாமி, கோவிந்தசாமி என்ற ஆசிரியர்கள்பால் தாம் ஞானோபதேசம் பெற்றதாக அவர் எழுதியுள்ளமை அவருடைய மனம் பலவித அனுபவங்களால் பக்குவமடைந்த வரலாற்றைக் கூறுவதாகும். பாரதியா

ருக்கு யோகப் பயிற்சியும் உண்டு. அதனால் அவர் உடல் சில சமயங்களில் இளைத்துவிடும்.

### புதுவையினின்று வெளியேற்றம்

இவ்வாறு ஏறக்குறைய பன்னிரண்டாண்டுகள் பாரதியார் புதுவையிற் காலங்கழித்தார். 1919 இல் அவர் புதுவையில் தங்குவதிற் சலிப்புற்று, 'நடந்தது நடக்கட்டும்' என்றெண்ணி அந்நகரை விட்டுச் சென்னை நோக்கிப் புறப்பட்டார். வழியிலே கூட ஊரில் போலீஸார் அவரைப் பிடித்துக் கொண்டனர். பிறகு அவரை, அவர் விருப்பப்படி ஏதேனும் ஓர் ஊரிற் சென்று தங்கலாம் என்று கூறினார்கள். அவர் கடையநல்லூர் சென்று அங்கே தம் குடும்பத்துடன் தங்கலானார்.

### கடைய வாசம்

அவ்வூரிலே அவருக்குப் போதிய வேலையில்லை. சுதேசமித்திரன் பத்திரிகைக்குக் கட்டுரை எழுதுவதும், கற்பனை ஊற்றெடுக்கும் போதெல்லாம் பாடுவதுமே அவருடைய வேலைகள். எஞ்சிய நேரமெல்லாம் ஊரைச் சுற்றியுள்ள மலைகளிலும் மேடுகளிலும் ஏறி இயற்கையின் வனப்பை ஊன்றிக் கவனித்துத் திரிவர். ஜாதி வேற்றுமையில்லாமல் ஏழைகள் வீடெல்லாம் சென்று அம்மக்களுக்கு உதவி புரிவார்; அங்கேயே உண்பார். ஊரில் நடக்கும் திருவிழாக்களிலும் பஜனைகளிலும் தாமும் கூடிக்கொள்வார். ஒரு நாள் பஜனையில் வழக்கமாகப் பாடிவரும் பாகவதருக்குப் பாட முடியாமல் போய்விட்டது. உடனே பாரதியார், 'நந்தலாலா' என்ற பாட்டை அங்கே

இயற்றிப் பாடப் பிறரும் அவரைப் பின்பற்றி ஆனந்தத்துடன் பாடத் தொடங்கினார்கள்.

**சென்னைக்கு மாற்றம்**

இவ்வாறு கடையத்தில் வாழ்ந்து கொண்டிருந்த போது சென்னைச் சுதேசமித்திரன் பத்திரிகையில் அவருக்கு ஓர் உதவியாசிரியர் பதவி கிடைத்தது. ஆகவே அவர் சென்னைக்கு வந்து திருவல்லிக்கேணி யில் தங்கலானார். அக்காலத்தில் அவர் உடலும் மனமும் ஓய்வை நாடியிருந்தன. அவர் தினந் தோறும் பார்த்தசாரதி கோயிலுக்குச் செல்வது வழக்கம். ஒரு சமயம் அக்கோயில் யானைக்கு மதம் பிடித்திருந்தது. அதைக் கட்டி வைத்திருந்தார்கள். பாரதியார் அதற்குத் தினந்தோறும் பழம், தேங் காய் முதலியன கொடுப்பது வழக்கம். யானைக்கு மதம் பிடித்ததை அறியாமல் அவர் வழக்கம்போல் தம் கையுறையை நீட்டினார். அந்த யானை உடனே அவரைப் பிடித்துக் கீழே தள்ளிவிட்டது. அவர் அதன் நான்கு கால்களுக்கிடையே மூர்ச்சையுற்று வீழ்ந்தார். அதனை யறிந்து அவர் நண்பர்கள் சென்று அவரை மெதுவாய் எடுத்து வைத்தியசாலை யில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். சில நாட் களில் அவர் குணமடைந்தார்.

**மறைவு**

ஆனால் அந்நிகழ்ச்சிக்குப்பின் அவர் நெடுநாள் உயிருடன் இருக்கவில்லை. 1921-ஆம் ஆண்டு செப் டம்பர் மாதம் 21-ஆம் நாள் அவர் இவ்வுலகத்தை விட்டுப் பிரிந்தபோது தமிழுலகம் துன்பக்கடலில் ஆழ்ந்தது.

**இயற்கையும் தோற்றமும்**

பாரதியாரின் இயற்கையையும் உருவத் தோற்றத்தைப்பற்றியும் அவருடைய நண்பரான சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீனிவாசன் எழுதுவதைக் கீழே குறிப்போம்.

"பாரதியை நேரில் காணவும் நெருங்கிப் பழகவும் அவருடைய அந்திம காலத்தில்தான் எனக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. புதுவையிலிருந்து புறப்பட்ட பிறகுதான், ஒருநாள் காலை 10 மணி இருக்கும். ஆபீஸில் தபால் பார்த்துக் கொண்டிருந்தேன். கன வேகமாய் ஒரு ஜட்கா வண்டி ஆபீஸை நோக்கி வந்தது. ஆபீஸ் பெயரைப் பார்த்ததும், 'நிறுத்து' என்று கூவினார் வண்டியிலிருந்தவர். நிற்கிறவரையில் தாங்கவில்லை. குறுக்குக் கம்பியைத் தள்ளிக்கொண்டு கீழே குதித்தார். தள்ளின கம்பி திரும்பி வந்து சொக்காயில் மாட்டிக் கொண்டது. அலக்ஷியமாகக் கையை உதறினார். சொக்காயின் கை கிழிந்து விட்டது. அதையும் கவனிக்கவில்லை. ஓடோடியும் உள்ளே வந்தார். நான் இருந்த அறைக்குக் குறுக்குக் கதவுகள் இருக்கக் கண்டு, சற்று தயங்கினார். மெள்ளக் கதவைத் தட்டினார்; பதில் இல்லை; கதவுக்குமேல் தலையைவிட்டு உள்ளே பார்த்தார்; என்னைக் கண்டதும் சிறிது லஜ்ஜைப்பட்டார். "யார்?" என்று நான் கேட்டேன். "நான்தான் சுப்ரமணிய பாரதி" என்றார். "வாருங்கள், உள்ளே 'வாருங்கள், உட்காருங்கள்" என்றேன்.

அன்று கண்ட பாரதி இன்றளவும் என் அகக் கண்முன் நின்றுக் கொண்டே இருக்கிறார். நடுத்தர

உயரம்; ஒற்றை நாடி! மாநிறம் படைத்த மேனி; புரி புரியாய்ச் சுற்றிய வால் விட்ட தலைப்பாகை; அகன்ற நெற்றி; அதன் மத்தியில் காலணா அளவு குங்குமப் பொட்டு. அடர்ந்த புருவங்கள் உருண்ட கண்களைக் காத்து வந்தன. நிமிர்ந்த நாசி வாடின கன்னங்களை விளக்கிக் காட்டியது; முறுக்கிய மீசை மேல் உதட்டை மறைத்தும், உறுதியிழந்த உயிர்நிலையை கீழ்உதடு காட்டி விட்டது. உடல் மீது பித்தான் இல்லாத ஷர்ட்டு; அதை மூட ஒரு அல்பாகா கோட்டு; வண்டியிலிருந்து குதித்தபோது அதுவும் கிழிந்து விட்டது. நாற்காலியில் உட்கார்ந்தார்; நாவெழவில்லை; அறையைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தன; என்னையும் ஏற இறங்கப் பார்த்தன. வெகுண்ட கண்கள்; வேதனை வடித்த கண்கள்; சாந்தம் நிறைந்த கண்கள்; வசியம் மிகுந்த கண்கள்; அவை என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விட்டன. அன்று நான் பாரதிதாஸனாக மாறினேன். பழகப் பழக நேசம் பாசமாக மாறிற்று.''

**பண்புகளும் கவிதைகளும்**

பாரதியாரிடம் பழகினவர்கள் அவருடைய சிறந்த குணங்களைப்பற்றிக் கொண்டாடுகிறார்கள். வறுமை குசேலரைச் செம்மையுறச் செய்தது போலப் பாரதியாரையும் செய்தது. நெருப்பிலிட்ட பொன் மினுக்கேறுவதுபோல வாழ்க்கைத் துன்பங்கள் அவருடைய தூய உள்ளத்துக்குத் துல்லியத்தையே அளித்தன. பேராசை, பொறாமை, பொய்மை முதலிய தீக் குணங்கள் அவரிடம் என்றும் அணுகினவல்ல; அவர் தம் மனைவி மக்களிடம் என்றும் அன்பு

காட்டியே வந்தார். தம்மிடம் வெறுப்பும் கோபமும் கொண்ட உறவினரிடமோ, நண்பர்களிடமோ அவர் மனங்கசந்ததில்லை. ஒருவர் ஒருமுறை பாரதியார் நண்பர்போல் நடித்து அவரைப் பிடித்துப் போலீஸாரிடம் ஒப்படைப்பதற்கு ஆகவேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்து விட்டார். தற்செயலாய் இச் சூழ்ச்சியை யறிந்த மற்றொருவர் அங்கே வந்து அவர் பாரதியாரைத் தந்திரமாக மீட்டு வந்தார். அவ்வாறு வந்தவர் சொல்லவே பாரதியாருக்கு உண்மை புலப்பட்டது. பிறிதொரு நாள் அச்சூழ்ச்சிக்காரர் பாரதியாரைவந்து காண, அவரிடம் சிறிதும் வேற்றுமை காட்டாமல் அன்புடன் அவர் அளவளாவிக் கொண்டிருந்தார். அவருடைய மனைவியார் இத் துன்பக்காட்சியைக் காணச் சகியாமல் முணு முணுக்கப் பாரதியார், மனைவியை நோக்கி,

"புகை நடுவினில் தீயிருப்பதைப்
புவியில் கண்டோமே - நெஞ்சே!
பகை நடுவினில் அன்புருவான நம்
பரமன் வாழ்கின்றான் - நெஞ்சே!
தின்னவரும் புலிதன் னையுமன்பொடு
சிந்தையிற் போற்றிடுவாய் - நெஞ்சே
அன்னை பராசக்தி அவ்வுருவாயினள்
அவளைக் கும்பிடுவாய் - நெஞ்சே!
பகைவனுக் கருள்வாய் - நெஞ்சே!
பகைவனுக்கருள்வாய்"

என்று பாடி முடித்தார். அப்பாடலைக் கேட்ட அம்மனிதர் முகம் கடுகாய்ச் சிறுத்தது. வெட்கம் அவர் உயிரைக் குலைத்தது. இவ்வளவு சாதுவும் ஞானி

யையுமா நாம் படுமோசம் செய்யத் துணிந்தோம், என்று அவர் வெட்கித் தலை குனிந்தார்; அவர் கால்களில் விழுந்து தம் குற்றத்தைக் கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

பாரதியார் வறுமையால் தவித்த போதெல்லாம் கடவுளின் கருணையிலும் கற்பனையின் மோகத்திலும் அவர் தம் வசமிழந்தார் அவர் தாம் தொல்லைப்படும் போதெல்லாம் அவர் தம்மைத் தனி மனிதராக நினைத்து வருந்தியதில்லை. தம்மைப்போல் பரிதவிக்கும் பல்லாயிரக் கணக்கான ஏழை மக்களைக் குறித்தே அவர் வேண்டுவார். ஜாதி வேற்றுமை, தொழில் வேற்றுமை, ஆண் பெண் வேற்றுமை ஒழிய வேண்டுமென அவர் பாடுபட்டார். "எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓரினம்" என்பது அவருடைய கொள்கை.

அவர் மனத்தில் அச்சமேயில்லை; 'பயமெனும் பேய்தனை யடித்தோம்—பொய்மைப் பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்' என்று அவர் எக்களிக்கிறார். 'இந்தியா அந்நியனைக் கண்டு படிந்திருந்தலாலேயன்றோ அவன் ஓட ஓட வெருட்டுகிறான்' என்று அவர் வினவுகிறார்.

அந்நியர் ஆட்சியால் இந்தியா செல்வத்திலும், பண்பாட்டிலும் தேய்ந்து ஒடுங்கி நிற்பதை அவர் கண்டு உள்ளம் உருகினார். தம் சொந்த நாடும் மொழியும் உலகில் இணையற்றனவாய் அமைய வேண்டியிருக்க அவை இந்நிலைக்கோ ஒடுங்கவேண்டுமென்று அவர் ஏங்கினார். தம் சொந்த மொழியையும் ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் மக்கள் மறந்து

அந்நிய மொழியினிடமும் ஒழுக்கத்தினிடமும் பண்பாட்டினிடமும் மோகங்கொண்டு நடப்பதை அவர் வெறுத்தார். மக்களுக்கு மொழிப் பற்று, நாட்டுப் பற்று இவை உண்டாகவேண்டுமென் றெண்ணி அவர் அவற்றைப் பற்றிப் பல பாடல்களைப்பாடி மக்களின் மனத்தே அவை வேரூன்றச் செய்ய முயன்றார்.

தீர்க்க தரிசனத்துடனும் மனவுறுதியுடனும் நாட்டுக்கு வரப்போகும் நல்ல காலத்தை வந்ததாகவே கண்டு அவர் பாடி முழக்கினார். "ஆடுவோமே-பள்ளுப் பாடுவோமே! ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோ மென்று" என்று அவர் அன்றே பாடி ஆடினார். "தாயின் மணிக்கொடி பாரீர்' என்று கனவிலே கொடியேற்றி அவர் வணங்கினார்.

இவ்வாறு உலகத் தொண்டிலே அவர் மனம் ஊன்றி நின்றாலும் அவரிடம் தெய்வபக்தி குறையவில்லை. 'எல்லாம் இறைவன் செயல்' என்பது அவருடைய திடமான நம்பிக்கை. 'எல்லாம் அவன் உருவமாகவே' அவர் கண்டார். தமக்கு அறிவும் ஆற்றலும் கொடுக்கும் வண்ணம் இறைவரைக் கெஞ்சுவார். உரிமையுடன் கடவுளிடம் கோபித்துப்பேசுவார். அவருக்குப் பராசக்தியினிடம் ஈடுபாடு அதிகமிருந்தது என்றாலும், எல்லாத் தெய்வங்களையும் அவர் ஒன்றுபோலவே பாவித்தார். கவிதையெழுதி உலகுக்குப் பயன்படச் செய்வதிலும் பரம்பொருளைப் பாடி இன்புறுவதில் தாம் ஆனந்தம் கொள்வதாக அவர் கூறுகிறார்.

**கவிதைமாண்பு**

இனி அவருடைய கவிதைகளின் மாண்புகளைக் காண்போம். சாதாரணமாகப் பாரதியாருடைய

சுதந்திரப் பாடல்களே நாடெங்கும் நிரம்பியுள்ளன அவற்றைப் பாடி மக்கள் தங்கள் சுதந்திர தாகத்தைத் தீர்த்துக்கொள்கின்றனர். ஆனால், சுதந்தரம் அடைந்து, மக்களின் ஆத்திரம் தணிந்தபின் அப்பாடல்கள் இன்று அடைந்துவரும் சிறப்புடன் கொண்டாடப்படுமா என்பது ஐயந்தான். அவை காலத்துக் கொட்டிய பாடல்கள்; காலமாறு பாட்டையொத்து அவற்றின் பெருமையும் தாழ்மையும் மாறும்.

ஆனால் கவிஞர் அப்பாடல்களோடு நின்றுவிடவில்லை. தாய்மொழியைப் பற்றியும் தாய்நாட்டைப் பற்றியும் அவர் மனமுருகிப் பாடிய பற்றுப் பாடல்கள் என்றும் நிற்பன. "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்" "வள்ளுவன் தன்னை உலகினுக்கே - தந்து, வான்புகழ் கொண்ட தமிழ்நாடு, நெஞ்சை, அள்ளும் சிலப்பதிகாரமென்றோர்மணி யாரம் படைத்த தமிழ்நாடு" என்பன போன்ற சொற்கள் தமிழுள்ளவளவும் நிற்பனவே.

குயில் பாட்டு முழுவதும் கற்பனையே. பழுத்த கற்பனை. கண்ணன் பாட்டும் பெரும்பாலும் அத்தகையதே. ஆழ்வார்கள் காட்டிய வழியையும் விஞ்சிற்று. பாஞ்சாலி சபதம் இன்றுள்ள நாட்டின் நிலைமையைப் பழங் கதையைத் திரித்துச் சித்தரிப்பது. இவையெல்லாம் என்றும் நிற்கும் பாடல்கள். இவற்றின் பாவங்களும், சுவைகளும், சித்திரங்களும் நன்கு நுகரக்கூடியவை. இவற்றிலேயே பாரதியாரின் புகழ் தங்குகிறது.

பாரதி ஒரு கவிவீரர். அவர் நம் பொக்கிஷம். அவர் பிறந்த எட்டையபுரத்தில் அவருக்குக் கோயில் கட்டி

யும், அவரது திருநாளைக் கொண்டாடியும், அவரைப் போற்றும் நாம், அவரது பாடல்களைப் பயின்று, அவற்றைப் பின்பற்றி வாழ்க்கையில் நடந்து கொள்வோமாக.

---

## 4. கொடைக்கடம் பூண்ட கோமான்

'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்றனர் நம் ஆன்றோர். தோன்றிய பின் புகழெய்தலைக் காட்டிலும் தோன்றும் போதே புகழுடன் தோன்றுவது சிறப்புடையதன்றோ? இத்தகைய தோற்றம் நம்மவர்களுட் சிலருக்கே அமைவதாகும். அத்தகைய வாய்ப்புப் பெற்ற ஒரு சான்றோரை நாம் இந்நூற்றாண்டிலே நம்மிடையே பெற்றதும் நமக்கொரு பெருமதிப்பாகும். அப்பெரியார் புகழிலே தோன்றிப் புகழிலே வளர்ந்த வரலாற்றை இனிக் காண்போம்.

செந்தமிழ் நாடென விளங்கும் பாண்டி வள நாட்டின் ஒரு பகுதியை இன்றும் 'நாட்டுக் கோட்டைச் சீமை' என்பார்கள். அப்பகுதியிலே தனவணிகர் எனப் பெயர் பெற்ற ஒரு வகுப்பினர் மிகப் பழங்காலந் தொட்டே வாழ்ந்து வருகின்றனர். அவர்களை 'நகரத்தார்' என்றும் 'நாட்டுக் கோட்டைச் செடிமார்களை, தனவணிகர்' என்றும் அழைப்பதுண்டு. செட்டி நாடு என்பது தொண்ணூற்றாறு ஊர்களைக் கொண்டதென்றும், அந்நாட்டினர் தம்மை ஒன்பது நகரத்தினர் அல்லது கோயிலராகப் பிரித்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்களென்றும் வரலாறு கூறும்.



செட்டிநாட்டு மன்னர் ராஜா, ஸர். அண்ணாமலைச் செட்டியார்

தமிழகத்தில் சிலப்பதிகாரம், மணிமேகலை என்ற நூல்களில் 'செட்டி' என்னும் பெயர் வந்துள்ளது. இவர்கள் வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். உள்நாட்டு வாணிகம், அயல் நாட்டு வாணிகம் ஆகியவெல்லாம் இவர்கள்பாலிருந்தன. இவர்களுட் சிறந்தவர்களுக்கு மன்னன் 'எட்டி' என்னும் பட்டம் சூட்டிப் போற்றி வந்தான். சிலப்பதிகார காலத்தில் வாழ்ந்து வந்த மாசாத்துவான், மாநாய்கன் என்ற செட்டியார்கள் மிகுந்த செல்வவான்களாக வாழ்ந்த வரலாற்றை நாம் அந்நூலிற் காண்கிறோம். பிற்காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்து வந்தபட்டினத்தடிகளும் அவ்வகுப்பைச் சார்ந்தவரே. இவ்வாறு தமிழகத்தில், அதனிலும் சிறப்பாகக் காவிரிப்பூம் பட்டினத்தில் தனவணிகர்கள் மிக மேன்மையாக வாழ்ந்து வந்தனர். அந்நகர வணிகர்களே ஒரு காலத்தில் பாண்டிநாடு சென்று தொண்ணூற்றாறு ஊர்களில் வாழத் தொடங்கினார்கள் என்றும் கூறப்படுவதுண்டு.

இவ்வாறு வந்த நகரத்தார்களுள் ஒன்பது நகரங்கள் அல்லது கோயில்கள் உண்டென்று முன்பு கூறினோம். அவற்றுள் இளையாற்றங்குடிக் கோயில் என்பது ஒன்று. அது ஏழு பகுதிகளைக் கொண்டது. அவற்றுள் ஒன்று பட்டினத்தடிகளின் வழி வந்தது. பட்டினத்தடிகள் சிவ பெருமானையே மகவாகப் பெற்று, முடிவில் துறவு பூண்டொழுகி வந்தார் என்னும் வரலாற்றைத் தமிழர் யாவரும் அறிவர். அம்மரபிலே கானாடுகாத்தான் என்ற நகரிலே திரு ச. ராம முத்தையா செட்டியார் என்ற பெருந்தகையாளர் ஒருவர் தோன்றினார். அவர் திரு, அறிவு,

ஆகிய பல நலன்களையும் பெற்று நாட்டிற்கே நடு நாயகமாய் விளங்கி வந்தார். அவர் தமக்கு வழி வழியாக வந்த சிவ பக்தியிலே சிறந்து, கோயில் என்று வழங்கும் சிதம்பரத்திலே பல அறப்பணி களைச் செய்தார். தில்லையம்பலத்தைப் புதுக்கியதும், அக்கோயிலின் மூலத்தானத்தைக் கட்டியதும், அவ் வூரில் அன்னசாலையொன்றை யமைத்ததும் அவ ருடைய புகழை என்றும் அழியாமல் நிறுத்தின. அவருடைய புண்ணிய விசேடத்தாலும் தமிழ் நாடு செய்த தவப்பயனுலும் அவருக்கு அண்ணுமலை என்ற அருமைப் புதல்வர் ஒருவர் தோன்றினர். அப்பெரு மகனுரே நம்முடைய வரலாற்றுத்தலைவர்.

இவ்வாறு தோன்றும்போதே புகழுடன் தோன் றிய அண்ணுமலை அவர்கள் பிறந்தது 1881-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 30-ஆம் நாள். அண்ணு மலையாருக்குச் சிதம்பரம் செட்டியார், இராமசாமி செட்டியார் என்ற இரு மூத்த உடன் பிறந்தவர்கள் உண்டு. அவ்விருவரும் தத்தம் வழிகளிலே மிகச் சிறப்புற்று வாழ்ந்தவர்கள். சிதம்பரம் செட்டியார் உரிய பிராயம் வந்து பெரியவரானபின் செட்டி நாட் டில் நல்ல சாலைகள் இல்லாமையை உணர்ந்து அவற் றிற்குப் பல வகைகள் செய்தார். இராமசாமி செட்டி யார் சிதம்பரத்தில் தம் பெயரால் ஓர் உயர்தரக் கல்விச் சாலையை நிறுவினதோடு, அரசியல் விவ காரங்களிலும் புகுந்து சிறந்த பணியாற்றி வந்தார். அரசியலார் அவருக்குத் ‘திவான் பகதூர்’ என்னும் பட்டத்தை அளித்தனர்.

நம் வரலாற்றுத் தலைவரான அண்ணுமலை யாரே பிற்காலத்திலும் எவரும் எட்டாத உயர்

படியை அடைந்தவர். அதற்கேற்ப அவருடைய இளமையும் அமைந்தது. 'கடைக்குட்டி' யாதலால் அவரே பெற்றோர்க்குச் செல்லப் பிள்ளையாயினர். அவரைப் பெற்றோர்கள் கண்ணுங் கருத்துமாய்ப் போற்றி வந்தனர். இளமையிலேயே அவருக்கு மிகுந்த சுறுசுறுப்பும் உற்சாகப் போக்கும் இருந்து வந்தன. தாம் கருதியதை முடிக்க வேண்டுமென்ற பிடிவாதமும் அவரிடம் நிறைந்து கிடந்தது. ஒரு முறை அவருடைய பெற்றோர்கள் நான்கு வயதின ராயிருந்த அண்ணாமலையாரை வீட்டில் விட்டு விட்டு வெளியே செல்வதற்கு எவ்வளவோ பாடுபட்டும் இயலாமல் போய்விட்டது.

நம் இளவலுக்குப் பிராயம் ஏழாயிற்று. அவருடைய தந்தையார் தம் குலத்துக் கேற்ற முறைப்படி வைதிக முறையில் அவருக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கினர். அக்காலத்துக் கல்வி முறையின்படி அண்ணாமலையாருக்குத் தமிழ், கணிதம், ஆகிய இரண்டுமே ஒழுங்காகக் கற்பிக்கப்பட்டன. வாழ்க்கை முறை, வைதிக ஒழுக்கங்கள் இவை செவ்வனே புகட்டப் பெற்றன. தந்தையாரே மகனாரின் கல்வியை மேல் பார்த்து வந்தார். அண்ணாமலையாரின் கணிதப் பயிற்சியும், ஆராய்ச்சி வன்மையும், நினைவு மறவாமையும் எவரையும் வியக்கச் செய்தன. பிறருடன் பழகுதலில் அவர் மிகுந்த தேர்ச்சி பெற்றார். தம் நிலையிலிருந்து சிறிதும் மாறாமலும் பிறர் மனம் நோகாமலும் அவர் தாம் எடுத்த காரியங்களைச் சாதிக்கும் வல்லமை பெற்றார். ஏழைகளிடம் அவருக்கு இயல்பாகவே அன்பு உண்டாயிற்று.

தனவணிகர்கள் எல்லோரும் பெரும்பாலும் நிதியாளர்கள். அவர்களுக்கு இந்தியாவிலும் அயல் நாடுகளிலும் பல 'தவணைக் கடைகள்' உண்டு. நம் இளவலாரும் தவணைக் கணக்குகள் பார்ப்பதில் நிபுணரானார். அவர், தம் தந்தையாருடனேயே யிருந்து வளர்ந்து வந்ததனாலும் அவருடைய அலுவல்களுக்கெல்லாம் உதவி, வந்ததாலும் வியாபாரிகளுக் கடிதங்கள் எழுதுவதிலும் அவருக்கு நல்ல தேர்ச்சி உண்டாயிற்று. அவர் பதினைந்து வயதினராயிருந்த போதே நிதிக் கணக்கு எழுதுவதில் தமக்கு நிகரற்றவர் எவருமிலர் என்ற பெயரைப் பெற்றார்.

அண்ணாமலையாருக்குப் பத்தொன்பது பிராயமானபோது அவருடைய தந்தையார் புகழுடலெய்தலாயினர். பிறகு குடும்பத்திற் பிரிவினை உண்டாயிற்று. அண்ணாமலையார் கானாடுகாத்தானிலேயே தங்கிக் கொண்டு தம் குடும்ப காரியங்களையும் தொழிற்றுறைகளையும் கவனிக்கலாயினர். அயல் நாடுகளிலுள்ள தம் கடைகளுக்குச் சிறந்த நிபுணர்களையே தேர்ந்து அவர் அனுப்புவார். வியாபாரத்தின் ஒவ்வொரு சிறிய பகுதியையும் அவர் தாமே கவனித்து வருவார். 'எதற்கும் ஒரு முறை; எதற்கும் ஓர் ஒழுங்கு; எதற்கும் தம் கவனம்' என்பதே அவர் பின் பற்றி வந்த கொள்கை. சோம்பலுக்கு அவர் சிறிதும் இடம் கொடார். வஞ்சகர்களும், சோம்பேரிகளும் அவரிடம் ஒரு நாள்கூடக் காலந்தள்ள மாட்டார்கள்.

இவ்வாறு கண்ணுங் கருத்துமாய்த் தம் தொழிலைக் கவனித்து வந்ததால் அவருக்குச் செல்வம் பெருகிக் கொண்டே வந்தது.

ஆக்க மதர்வினுய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை

என்பது தமிழ்மறையன்றோ? செல்வம் பெருக்கெடுத்த பின் சிலர் சுகவாழ்வை நாடுவர். நம் அண்ணுமலை யாரோ அத்தகையர் அல்லர். செல்வத்திற் கேற்ப உயர் வாழ்வை அவர் விரும்பினரே யெனினும், கால் நீட்டிக் கொண்டு சோம்பி வாழ்வதை அவர் விரும்ப வில்லை. அவர் தம் பெருமைக்குத் தக்கபடி தம் இல்லத்தை விரித்துக் கட்டினுர். பிற்காலத்தில் அண்ணுமலை நகரிலும், சென்னையிலும் இணையற்ற மண்டபங்களையும் மாளிகைகளையும் கட்டப்போவ தற்கு அறிகுறியாக அக்காலத்தில் அவர் கானுடுகாத் தானில் தம் இல்லத்தை அமைத்தார். அவருக்குப் பெருமை வளர்ந்த காலத்தில் அந்த இடத்திற்குச் செல்லாத பெரியமனிதரோ புலவரோ இல்லையென்று சொல்லலாம்.

அண்ணுமலையாருக்குப் பிரயாணத்தில் மிகுந்த விருப்பம் இருந்தது. இந்தியாவின் பல பகுதிகளுக் கும் அவர் சுற்றுப்பிரயாணம் சென்ருர். பர்மா, இலங்கை, மலேயாநாடுகளுக்கும் அவர் சென்று திரும் பினர். ஆங்குள்ள நகர அமைப்புக்களையும், அரசியல் முறைகளையும், மக்களின் ஒழுகலாறுகளையும் அவர் ஆங்காங்கே ஊன்றிக் கவனித்து வந்தார். 1910-இல் அவர் ஐரோப்பாக் கண்டத்துக்குச் சென்று அங் குள்ள நாடுகளை யெல்லாம் கண்டார். அப்பொழுது இங்கிலாந்திற் பல மாதங்கள் தங்கி, அங்குள்ள கிரா மங்களிலும் நகரங்களிலும் தல அரசாட்சி எவ்வாறு நடைபெறுகிற தென்பதை நன்ருக அறியலானுர்.

அங்குள்ள மக்கள் தங்கள் வீடுகளையும் தெருக்களையும் ஊர்களையும் எவ்வாறு வைத்துக் கொண்டிருக்கிறார்களென்பதைப் பார்த்து, நம் நாட்டு மக்களுக்கு இவ்வுணர்ச்சி உண்டாகுங்காலம் உண்டோ? என்று அவர் ஏங்கினார். அந்நாட்டு அரசியல் முறைகளும் அப்பணிகளில் ஈடுபட்டுள்ளவர்களின் நேர்மையும் திறமையும் அவர் மனத்தை ஈர்த்தன.

அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்தவுடன், நாட்டுக்கு ஏதேனும் ஒரு துறையில் உழைக்க வேண்டுமென்ற அவா அவருக்கு உண்டாயிற்று. அதற்கேற்ற வண்ணம் காரைக்குடி என்ற ஊரின் பஞ்சாயத்துப் போர்டு தலைமை அவருக்குக் கிடைத்தது. அப்பதவியை மிகச் சிறந்த வழியில் பயன் படுத்தித் தம் வல்லமையாலும் ஆற்றலாலும் பொது மக்களுக்கு நன்மை பயக்க அவர் பல வழிகளிலும் முயன்றார். காரைக்குடிக்குப் புத்துயிர் உண்டாயிற்று; ஊரில் ஒரு புது மலர்ச்சி தோன்றிற்று. அவ்வூருக்கு ஆகவேண்டிய பொதுநலச் செலவுகளில் ஒரு பகுதியை அவர் தம் சொந்தப் பணத்தைக் கொண்டே செலவிட்டார். ஊரார் உறங்கி எழுவதற்கு முன்பே, இரட்டைக் குதிரைகள் பூட்டிய தம் 'கோச்சில்' அண்ணாமலையார் கானாடு காத்தானிலிருந்து காரைக்குடிக்குச் சென்று அங்கு ஆகவேண்டிய பஞ்சாயத்து மேற்பார்வைகளையெல்லாம் முடித்துக் கொண்டு அவர் தம் ஊருக்குத் திரும்பிவிடுவார்.

இவ்வாறு மூன்றாண்டுகள் கழிந்தன. சிறியதோர் நகரமெனினும் காரைக்குடி அண்ணாமலையாருக்குச் சிறந்த பயிற்சி யளித்தது. மக்களுடைய

மனப் போக்குகளெல்லாம் அவருக்குத் தெரிய வந்தன. நிர்வாகம் என்பதில் எத்தனை நுணுக்கங்கள் உண்டென்பதை அவர் உணர்ந்தார். எல்லோருக்கும் நல்லவராகவும் ஆகித் தம் நெறியில் நிற்பதற்குரிய பயிற்சியை அவர் பெற்றார். பஞ்சாயத்து வழியாய் ஊருக்குச் செய்யவல்ல நற்செயல்கள் எவ்வளவோ உண்டென்பதையும் அவர் கண்டு கொண்டார். ஆகவே, தம் ஊரான கானாடு காத்தானுக்கும் தாமாகவே ஒரு யூனியன் அமைத்துக் கொடுத்தார். பிறகு அவருக்கு ஜில்லா போர்டிலும் ஓரிடம் கிடைத்தது. அதனையும் மிகுந்த பொறுப்புடன் ஏற்று ஜில்லாவுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்வதில் முனைந்து நின்றார். இவ்வாறு அவர் இவ்வாண்டுகளிற் பெற்ற பயிற்சி பிற்காலத்தில் அவர் மேற்கொண்ட பேரலுவல்களுக்குப் பெருந்துணையாய் நின்றன.

உலகத்தில் நீதி நன்கு வழங்க வேண்டுமென்பதில் நம் அண்ணாமலையாருக்குப் பெரு விருப்பமுண்டு. ஒருமுறை சில திருடர்கள் அரசாங்கத்துத் தபாற்பைகளைக் கொள்ளையிட்டு அவற்றுடன் ஓடிவிட்டனர். இச்செய்தி அண்ணாமலையாரின் செவிகளில் விழுந்தது. அவர் உடனே சில நண்பர்களுடன் சென்று பல விடங்களிலும் ஆராய்ந்து முடிவில் மனித நடமாட்டமில்லாத ஓரிடத்தில் திருடர்களைக் கண்டு விட்டார். இவர்களைக் கண்டவுடன் கைப்பொருள்களை அப்படியே எறிந்து விட்டுத் திருடர்கள் ஓடிவிட்டனர். அண்ணாமலையார் அப்பொருள்களையெல்லாம் எடுத்து அப்படியே ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுக்கு அனுப்பி விட்டார். இதனால் அவருடைய தைரியமும் பொது

நலச் சேவையும் நாடெங்கும் பரவலாயின. துரைத் தனத்தார் அவரைப் பெரிதும் பாராட்டினர்.

இவ்வாறு அண்ணாமலையாரின் புகழ் பெருகவே, அரசியலாரும் அவரை மதிக்கத் தொடங்கி அவருக்கு 'ராவ் பகதூர்' என்ற பட்டத்தைச் சூட்டினர். அன்றுமுதல் நம் வீரர் ராவ்பகதூர் அண்ணாமலை செட்டியார் என்று வழங்கலாயினர்.

ராவ் பகதூர் செட்டியார் அவருக்கு 1916-இல் சென்னைச் சட்ட சபையில் ஓர் அங்கத்தினர் பதவி கிடைத்தது. அதுமுதல் அவர் தம் காலத்தைச் சென்னையிலும் கானாடுகாத்தானிலுமாகச் செலவிடத் தொடங்கினர். தம் கிராமத்திலிருந்து கொண்ட வண்ணமே தம் தொழிலையும் சுற்றுப்புறப் பொது நலச் சேவையும் செய்து வந்த நம் அண்ணலுக்கு இப்பொழுது விரிந்த சேவைசெய்ய வாய்ப்புக் கிடைத்தது. இக்காலத்தில் அவருடைய செல்வமும் செல்வாக்கும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தன.

நம் அண்ணலாரின் பெருமை தொழில் முன்னேற்றத்திலும் செல்வப் பெருக்கிலும் மட்டும் அமைந்திருந்தாலே அவருக்கு உலகம் போற்றும் புகழும் உண்டாகிவிடும். ஆனல் அவர் அவற்றுடன் நின்றுவிடவில்லை. ஈதலொன்றே உண்மைப் புகழ்தரும் என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். உண்மையான வீரம் படைத்தவருக்கே ஈதலும் இயற்கையாகும் என்பதை நம் பண்டை வள்ளல்களின் வரலாறுகளிலிருந்து அறிகிறோம்.

பணைகெழு வேந்தரை யிறந்தும்
இரவலர்க் கீயும் வள்ளியோன்

என்று பாரி என்ற வள்ளலைக் குறித்து நம் ஆன்றோர் கூறினரன்றோ! அவ்வண்ணமே செல்வத்தைச் சேர்க்கும் ஆற்றல் படைத்த கையாலேயே அதனை ஈயும் வண்மையைத் பெற்றதனாலேயே அவருடைய புகழ் என்றும் மங்காமல் ஒளி வீசுவதாயிற்று.

தனவணிகர்கள் இயல்பிலேயே தருமவான்கள். அவர்கள் சிறந்த சிவபக்தர்களாகவும் திகழ்ந்தமையினால் அவர்களுடைய தருமங்களெல்லாம் சமயச் சார்புடையனவாகவே இருந்து வந்தன. புதிய தேவாலயங்களை நிறுவுதல், பழுதுபட்ட பழைய ஆலயங்களைப் புதுப்பித்தல், கோவில்களிற் பல கட்டளைகளை அமைத்தல், அவை சரியான முறைப்படி பரிபாலனம் பண்ணப்படுவதற்கு ஏற்பாடுகள் செய்தல், குளம் முதலியன வெட்டல், அன்ன சத்திரங்களைத் தோற்றுவித்து அவற்றை நடத்தல், வேதம், ஆகமம், தேவாரம் முதலியன ஓதுவதற்குரிய பாடசாலைகளை அமைத்தல் ஆகிய பல துறைகளில் அவர்களுடைய அறங்கள் சென்று வந்தன. கடந்த நூற்றாண்டில் நாட்டின் சமய வாழ்க்கைக்கு அவர்கள் புரிந்து வந்த உதவி அளவிடற்கரியது.

அவர்கள் செல்வம் ஈட்டுவதிலும் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தார்களென்று முன்பே சொன்னோம். அவ்வாறு அவர்கள் ஈட்டும் பொருளில் ஒரு பகுதியை 'மகமை' யென்று ஒதுக்கி வைத்து, அதனைக் கொண்டே மேற்கூறிய வகைகளில் அவர்கள் தரு

மம் புரிந்து வந்தார்கள். ஒரு கடையை ஓரிடத்தில் தொடங்கும்போது ஏதேனும் ஒரு தலத்தில் எழுந்தருளியுள்ள கடவுளின் பெயரால் ஒரு தொகையை வரவு வைத்துக்கொண்டே கணக்கெழுதத் தொடங்குவது அவர்களுடைய வழக்கம். இவ்வாறு அடக்கமும் தெய்வ பக்தியுங்கொண்டு செய்யும் வியாபாரம் வளர்ச்சியடைவதற்குத் தடை யாது? ஆகவே அவர்களுடைய இலாபம் பெருகப் பெருகத் தருமத் தொகையும் பெருகிக் கொண்டேவரும்.

இவ்விதம் அறம் செய்தலைக் குல ஒழுக்கமாகக் கொண்டவர்களுள் அண்ணாமலையாரின் குடும்பத்தினரும் சேர்ந்தவரே. அவருடைய தந்தையார் சிதம்பரத்திலும் பிற விடங்களிலும் செய்து வந்த அறச் செயல்களைப்பற்றி முன்பே கூறினேன். அவருடைய மூத்த சகோதரரும் இங்கிலையிலேயே நின்று சிதம்பரத்தில் பல தருமங்களை நடத்தி வந்தார். இவரும் தம் முன்னோர் சென்ற வழியிலேயே சென்று வந்தார். சிதம்பரத்தில் ஸ்ரீ கோவிந்தராஜர் சந்நிதியைப் புதுப்பிக்க இவர் மூன்று லட்ச ரூபாய்கள் செலவிட்டார். ஆனால் இவருடைய பகுத்தறிவின் முதிர்ச்சியாலும், அந்நியநாடுகளில் சென்று பெற்று வந்த தேர்ச்சியாலும் இவர் மனத்தில் பிற அறங்களை விடக் கல்வியறமே சிறந்ததென்று தோன்றிற்று.

மதுரையில் அமெரிக்கன் கல்லூரிக்கு மாணவர் விடுதி அமைக்க வேண்டிய பொருளனைத்தையும் அவரே ஈந்தார். அந்நகரிலேயே உள்ள மற்றொரு கலாசாலை கட்ட முப்பதினாயிரம் ரூபா நன்கொடையாக அவர் கொடுத்தார்.

சிதம்பரத்தில் வள்ளலாரின் தமையனார் ஓர் உயர்தரக் கல்விச்சாலை நிறுவி நடத்திவந்தார். அண்ணாமலையாருக்குத் தாமும் ஒரு காலேஜ் வைத்து நடத்த வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. அச் சமயத்தில் அவருடைய தமையனாரும் காலமாகவே சிதம்பரத்தில் அவர் நடத்தி வந்த உயர்தரக் கல்விச் சாலையை யொட்டி ஒரு காலேஜை நிறுவுவதென்று அவர் தீர்மானித்து அவ்வாறே செய்து முடித்தார்.

1918-ஆம் ஆண்டில் சிதம்பரத்தில் ஸ்ரீ மீனாட்சி காலேஜ் என்ற ஒரு கல்விச்சாலை உதயமாயிற்று. ஐந்தாண்டுகளுள் அக்காலேஜ் நன்கு பெருகி விட்டது. அதன் புகழ் நாடெங்கும் பெருகப் பல திசைகளி னின்றும் மாணவர் அங்குவந்து குழுமினர். அதனை யொட்டி மீனாட்சி தமிழ்க் கல்லூரி என்ற ஒன்றும் மீனாட்சி வடமொழிக் கல்லூரி என்ற ஒன்றும் நிறுவப் பெற்றன. தமிழ்க் கல்லூரிக்கு மகாமகோபாத்யாய டாக்டர் சாமிநாதையர் தலைவராக நியமிக்கப்பட்டார்.

இவ்விதம் ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகிய மும் மொழிகளும் முழங்கி வந்ததைக் கண்ட அண்ணாமலையாரின் மனம் மேலோங்கிச் சென்றது. ஏன் ஒரு பல்கலைக்கழகத்தை அங்கே நிறுவலாகாது? என்று அவர் எண்ணினர். "எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர், திண்ணியராகப் பெறின்" என்ற பொய்யாமொழியின் வாக்குப்படி அவர் திண்ணியராதலால் அவர் எண்ணியபடியே காரியமும் கைகூடிற்று. அவர் அக்கழகத்திற்காக 20 லட்சம் ரூபா கொடுப்பதாக வாக்களித்தார்; அரசாங்கமும் 20 லட்சம் ரூபா அளித்தது. பல்கலைக்

கழகத்திற்காக ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இவ்வாறு 1929-ஆம் ஆண்டிலே சிதம்பரத்தை ஒட்டிய திருவேட்களம் என்ற திருப்பதிக்கு அருகே அண்ணாமலைநகர் என்ற நகரமும் அண்ணாமலை பல்கலைக் கழகம் என்ற வித்தியா பீடமும் தோன்றலாயின.

அண்ணாமலை நகரம் மிக அழகான இடம். வரிசை வரிசையான தெருக்களும், அரண்மனைகள் போன்ற கல்வி மண்டபங்களும், அழகான சிங்காரத் தோட்டங்களும், மாளிகைகளும், விடுதிகளும், விளையாடும் இடங்களும், பூஞ்சோலைகளும் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாதவை. இனிய நவீன வாழ்க்கைக்கேற்ற எல்லா வசதிகளும் அங்கு உண்டு. இவ்வாறு வெறும் காடாய்க் கிடந்த ஓரிடத்தை இந்திரலோகமாக்கிய அண்ணாமலையாரின் திறத்தை எவ்வாறு புகழ்வது.

கழகத்தில் பல கலைகள் கற்பிக்கப்பட்டன. இசைக்கு ஒரு தனியிடம் கொடுக்கப்பட்டது. தமிழ்க் கல்வி உச்ச நிலையடைந்தது. இந்தியாவின் பல பகுதிகளினின்றும் மாணவர் ஆயிரக் கணக்காக அங்குத் திரளலாயினர். இன்று அது உலகிலுள்ள புகழ் பெற்ற பல்கலைக் கழகங்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது. அதன் நிர்வாகம் அனைத்தையும் வள்ளலாரே மேற்கொண்டு கவனித்து வந்தார். அவர் உலகத்தில் எப்பகுதியிலிருந்தாலும அக்கழகத்தில் நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளும் அவருக்குத் தெரிவிக்கப்படும்.

இவ்வாறு அற உலகத்திலே அவர் முன்னேற முன்னேற அவருடைய தொழில் வருவாயும் புகழும்

முன்னேறிக் கொண்டே வந்தன. 1920-ஆம் ஆண்டு அவர் இந்திய இராஜாங்க சபையின் அங்கத்தின ராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அதே ஆண்டில் இந்திய இராஜப்பிரதிநிதி அவர்கள் அண்ணாமலை யாரை இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியா என்ற பிரபல நிதிச் சாலைக்கு ஒரு டைரெக்டராக இருக்கச் செய்த னர். நிதி நிர்வாகத்தில் அண்ணாமலையாரை விஞ்சி யவர் எவரும் இலராதலால் அந்நிதிச்சாலை இவ ருடைய உதவியால் முன்னினும் மேன்மையுற்று விளங்கிற்று

அவருடைய திறமையையும் வள்ளன்மையையும் கண்டு அரசாங்கத்தார் அவர்மீது பட்டங்களை குவித் துக் கொண்டேயிருந்தனர். 1912-இல் அவருக்கு ராவ் பகதூர் பட்டம் கிட்டியதென்று முன்பே கூறி னோம். 1922-இல் அவருக்குத் திவான் பகதூர் என்ற பட்டத்தையும், அடுத்த ஆண்டில் 'ஸர்' என்ற பட் டத்தையும் அவர்கள் சூட்டினார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சட்டம் நிறைவேறியவுடன் அரசி யலார் அவருடைய வள்ளன்மையைப் பாராட்டிப் பரம்பரை ரீஜா என்ற பட்டத்தை அவருக்குக் கொடுத்தார்கள். 1932-இல் சென்னைச் சர்வகலா சங்கத்தார் அவருக்கு டாக்டர் என்ற கௌரவப் பட் டத்தை அளித்தனர். இவ்வாறு பெருந்தகையார் தம் உழைப்பாலும் குணத்தாலும் தமது நாற்பத் தோராம் பிராயத்துக்குள் 'ராஜா ஸர் அண்ணமலை செட்டி யார், செட்டி நாட்டு மன்னர் எல். எல். டி.' என்ற பிற ரெவரும் எய்தமுடியாத பெரும் பெயரை ஏற்று விளங்கினர்.

இச்செய்தியை உணர்ந்த தமிழ் நாடு மகிழ்ச்சியில் கூடிற்று. கோவிலூர் என்ற விடத்தில் நாட்டின் மகிழ்ச்சியைக் காட்ட ஒரு மகாநாடு கூட்டப் பெற்றது. மகா கனம் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரி அவர்கள் அம்மகா நாட்டிற்குத் தலைமை தாங்கினர். அவர் அண்ணாமலையாரின் சிறந்த சமூகத் தொண்டை மிகவும் பாராட்டிப் பேசினர்.

இவ்வாறிருக்குங் காலத்தில் நகரத்தாருக்குப் பர்மா மக்களாலும் அவ்வரசாங்கத்தாராலும் பல இன்னல்கள் உண்டாயின. அவற்றையெல்லாம் இங்கிலாந்திலுள்ள மேலதிகாரிகளுக்கு எடுத்துரைத்துப் பரிகாரம் தேடவேண்டுமென்றெண்ணி 1935-ஆம் ஆண்டில் ராஜா அவர்கள் இங்கிலாந்துக்குச் சென்றார்கள். அங்கு அவர் தம் இனத்தாரின் இன்னல்களையெல்லாம் உரியவரிடம் நன்கு எடுத்துப் பேசி ஓரளவு நன்மையும் பெற்றார்.

இப்பிரயாணத்தில் இராணியாரும் உடன் சென்றிருந்தார்கள். தனவணிகர்கள் சாதாரணமாகத் தம் மனைவியாரை அயல் நாடுகளுக்கு அழைத்துச் செல்வதில்லை. ராஜா அவர்கள் மாதர்களுக்கும் ஏற்றமளிக்க வேண்டுமென்று இவ்வாறு செய்தது நாட்டு மக்களுக்கே ஒரு புதிய விழிப்பை உண்டாக்கிக் கொடுத்தது. இங்கிலாந்தில் தம் அலுவல்களை முடித்துக் கொண்டு அவர் அமெரிக்காவுக்கும் ஐரோப்பிய நாடுகள் பலவற்றிற்கும் சென்று வந்தார். அவர் போன விடங்களிலெல்லாம் காட்சிகளைக் கண்டு களிப்பதோடு நின்று விடவில்லை. ஆங்காங்கே தாம் அறிய வேண்டுவன யாவற்றையும் அறிந்து குறித்துக் கொண்டார். பல பல்கலைக் கழகங்களையும் அவர்

பார்வையிட்டு, ஆங்காங்கு நடைபெறும் சிறப்பு முறைகளை யெல்லாம் அவர் குறித்துக்கொண்டார். அந்நாடுகளில் ஏழை மக்களின் துயரம் எவ்வாறு தீர்க்கப் பட்டு வருகிறது என்பதையும் அவர் ஆராய்ந்தார்.

பிரெஞ்சு நாட்டுக்கு அவர் சென்றபோது அந்நாட்டுக்குரிய இந்தோ சைனு என்னும் பிரதேசத்தில் குடியேறிய இந்திய மக்களின் துயரங்களை யெல்லாம் பிரெஞ்சு அரசியலாருக்கு எடுத்துக்காட்டி அவர்களிட மிருந்து பல உறுதி மொழிகளைப் பெற்றுக் கொண்டார்.

இவ்வாறு ராஜா அண்ணுமலை செட்டியார் அவர் கள் தம் காலத்தில் எள்ளளவும் வீணுக்காமல் உயிர் வாழ்ந்திருந்தார். உலகத்தில் நிற்பது புகழொன்றே என்பதை அவர்கள் உண்மையில் அறிந்து அதனை அறவழியிலே பெறுவதற்கு ஆயுள் முழுவதும் அவர் பாடுபட்டார். அவர் கட்டிய கட்டிடங்கள் அவருடைய நுண்ணறிவையும் திட்டமிடும் ஆற்றலையும் காண்பிக் கின்றன. அவருடைய அறச் செயல்கள் அவருடைய மனத்தின் மாண்புகளை விளக்குகின்றன. எத்தனையோ வைத்தியசாலைகள், மாணவர்விடுதிகள், கல்விச் சாலைகள் முதலியவற்றிற்கு அவருடைய பணம் உதவியாயிருந்தது.

அவருடைய தமிழ்ப்பற்றே தமிழகத்தில் ஒரு பல் கலைக் கழகத்தை நிறுவச் செய்தது. பெருஞ்செலவில் சென்னையில் தமிழிசைச் சங்கம் என்ற ஒரு கலைக்கழகத்தை நிறுவி அது என்றும் நடை பெறுவதற் குரிய வழிகளை வகுத்தார். 1933-இல் சென்னையில் கூடிய தமிழ் அன்பர் மகாநாட்டில் புத்தகக் கண் காட்சிச் சாலையை அவர் திறந்து வைத்தபோது அவர்

நிகழ்த்திய பேருரை அவருக்குத் தமிழ் முன்னேற்றத்தைப் பற்றிய ஊக்கம் எவ்வளவு உண்டென்பதைக் காட்டிற்று. தமிழ்ப் புலவர்களைக் காண்பதிலும் அவர்களோடு அளவளாவுதலிலும் அவர்களுக்கு மரியாதை செய்வதிலும் அவருக்குப் பெருவிருப்பு உண்டு.

ராஜா அவர்களின் பெருமைகளுக் கெல்லாம் காரணம் அவருடைய ஒழுக்கமும், அவர் கையாண்ட பழக்க வழக்கங்களுமேயாகும். அவர் கோடீசுவரராயிருந்தும் சிறிதும் ஆடம்பரமான வாழ்க்கையை மேற் கொள்ள வில்லை. மிக எளிய உடையும் உணவுமே அவருக்குகந்தவை. எக்காரியத்தையும் முன்கூட்டி ஆராய்ந்தே அவர் அதனில் இறங்குவார். எவருடனும் அன்புடன் பேசுவார். அவருடைய குண நலங்களைப் பற்றி மகாமகோபாத்யாய ஐயரவர்கள் பின்வருமாறு எழுதினர்:—

"இவர்கள்பால் எவ்வளவோ சிறந்த குணங்கள் காணப்படினும் காலத்தை வீண்போக்காமை, காரியத்திலே கண்ணுயிருத்தல், தரமறிதல், யாரிடமும் சுலபமாகவும் இன் சொல்லோடும் பழகுதல், யோசித்து நிதானமாகப் பேசுதல், எண்ணியவற்றை எண்ணியபடியே நிறை வேற்றுதல், சோம்பலின்மை, நிர்வாகத் திறமை என்பவை இவர்களிடமுள்ள சிறப்பியல்புகள். சிறிது நேரம் சம்பாஷித்தாலும் உபயோகமான பல அரிய விஷயங்களை நாம் இவர்களிட மிருந்து தெரிந்து கொள்ளலாம்"

ராஜா அவர்களின் அரியகுண மேம்பாட்டைப் பற்றிமற்றொரு பெரும் புலவரான மகாமகோ பாத்

நியாயபண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் அவர்கள் கூறுவதையும் காண்போம்:—

"கனம் ராஜா ஸர் அவர்கள் வணிகத் துறையில் நிகரற்ற திறமை படைத்தவர்கள்; பொருளீட்டுதற் குரிய வினைத்திறங்களைப் பகுத்துணர்வதிலும் அவ்வு ணர்வைச் செயல் முறைகளில் பயன் படுத்துவதிலும், அங்ஙனம் நெறியறிந்தீட்டிய பொருளை உலகத்திற்குக் காலம் அறிந்து ஒப்புரவறங்களைச் செய்வதிலும் தமக்கு ஒப்பாக எவரையும் கூறமுடியாத நிலையில் சிறப்புப் பெற்று விளங்குபவர்கள்; இன்னோரன்ன செயற் கருஞ் செயல்களால் இவர்களுடைய புகழ் இந்நிலவுலக முழுதும் பரந்த ஒளி செய்வதாயிற்று. திருவுடையார் அறிவுடையராதலும், அறிவுடையார் திருவுடையராத லும் எளிதில் அமைவனவாகா. நம் ராஜா அவர்கள் திருவும் அறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவர்கள். அறிவுடையார் குழுவில் திறம் படப் பேசும் சொல்வன் மையும், எச்செயலையும் வரையறுத்துக் காலம் கட வாமல் நிறைவேற்றும் மதிவலியும், நிருவாக முறையில் பேராற்றலும் நன்குபடைத்தவர்கள். ஈட்டியபொருளை வழியறிந்து அறஞ்செய்து புகழ் வளர்க்கும் பெருமை இவர்களுக்கே உரியது.

இவ்வாறு புலவர் பெருமக்களால் ஏற்றப் பெற்ற அருங்குணங்களை இளமாணவர்கள் பெரிதும் மதித்துப்பின்பற்ற வேண்டும். ஒருவர் தம் முயற்சியாலே எத்தகைய உயர்வையும் பெறலாம் என்பதற்கு ராஜா அவர்களின் வரலாறு நல்ல சான்றாகும்.

---

## 5. அரசியல் சதுரர்



எளிய கிராமமொன்றிலே, நடுத்தரமான வைதிக குலத்திலே தோன்றி, சாதாரணமான கலாசாலைப் படிப்புப் பெற்று பல்லோரைப்போல ஒரு தொழில் துறையில் பயின்று வந்த சாமானியர் ஒருவர் இந்திய ராஜ்யத்திற்குத் தலைமை நிலையைப் பெற்று உலக மெல்லாம் போற்றும்படி அப்பதவியைத் தாங்கினர் என்றால், அவரிடம் ஏதோ ஒரு நுண்ணிய ஆற்றல் அமைந்து கிடக்க வேண்டுமன்றோ? அத்தகைய ஆற்றல் வாய்ந்த ஒருவர் நம் தமிழகத்திலே பிறந்து தமிழையே பேசி, தமிழிலேயே பல புத்தகங்களையும் எழுதி நம்முடனே இன்று வாழ்ந்து வருகின்றனர் என்பது ஒவ்வொரு தமிழனுக்கும் பெருமிதத்தை யளிப்பதன்றோ?

**தோற்றம்**

இத்தகைய பெருமைகள் வாய்ந்தவர் நம் இராஜாஜி என்று நாம் கூறாமலே விளங்கும். இராஜாஜியை நம்முள் பல்லோரும் பார்த்திருப்போம். அவரை நேரிற் கண்டாலோ, அல்லது அவரது படத்தைப் பார்த்தாலோ இவ்வளவு மேன்மை இவரிடம் எங்குள்ளது என்று வியப்பே நமக்குத் தோன்றும். உயரமற்ற உருவம்; உருவம் மிக மெல்லியது. ஆழ்ந்து உள்ளடங்கின கண்கள்; ஆனால் பருத்தவை; அவை எவ்வாறிருக்கின்றன என்று எவரும் எளிதிற் காண முடியாது; ஏனெனில் பச்சைக் கண்ணாடி அவற்றை என்றும் மூடியிருக்கும்; முக்கோண வடிவமான முகம்; தலை பெரியது; நெற்றி அகன்றது; மூக்கு நீண்டு பருத்தது. சிறிதளவு வளைந்து காணும். கன்

னங்கள் ஒட்டியவை; வாய் பெரியது; கைகள் நீண் டவை; உடை மிக எளியது; வைதிக முறையினது;



சி. ராஜகோபாலாச்சாரியார்

அரையிலே பஞ்சகச்சம்; உடலிலோ நீண்ட முழுக் கை ஜிப்பா; அதன்மேல் ஒரு தோளில் மடிப்பு விரி

யாத ஒரு துண்டு ; கால்களில் நாட்டுப்புறச் செருப்பு. நடக்கும் போதும், பேசும்போதும் படபடப்புச் சிறிதும் இல்லாத அமைதி. குரல் ஒருவகை அழுத்தமும் உரமும் கொண்டது ; ஆனல் உரக்கக்கத்தும் ஆற்றலற்றது. முகத்தில் எப்பொழுதும் யோசனை ; எவரும் நெருங்குவதற்கு ஒருவகை அச்சமும் மரியாதையும் உண்டாக்கத்தக்க தோற்றம். கண்கள் மிகக் கூரியவை ; முன் நிற்பவர் உள்ளத்தையே ஊடுருவும் சக்தி வாய்ந்தவை.

இத்தகைய உருவத்தில் உயர்வுக்கு ஏற்ற இயல்புகள் என்ன இருக்கின்றன? அவர் யார்? என்று அறியாதவர்க்கு அவருடைய தோற்றத்தில் யாதொரு விசேஷமும் காணப்படாது. அவருடைய பிறப்பு வரலாற்றைக் காண்போம்.

**வரலாறு**

சேலம் ஜில்லாவிலே ஓசூர் என்பது ஒரு பெரிய கிராமம். இந்த ஊரிலே வைணவ அந்தணர் குடும்பங்களுள்ளே நல்லான் சக்கரவர்த்தி குடும்பம் என்பது ஒன்று. பண்டைக்காலத்திலே நல்லான் என்ற பெயருடைய ஒரு பெரியவர் இருந்ததால் அக்குடும்பத்துக்கு அப்பெயர் வந்தது என்பர். நல்லான் என்ற பெயரைப் பற்றிய வரலாறு இன்பகரமானது. அப்பெரியார் அவ்வூருக்கருகில் ஓடிவரும் ஆற்றில் மிதந்து வந்த அநாதைப் பிணமொன்றை யெடுத்து, அதனை உரிய சடங்குகளுடன் கொளுத்தினார். ஜாதி தெரியாத ஒரு பிணத்தை அவர் தொட்டுச் சடங்குகள் செய்ததனால் அவரைச் சேர்ந்தவர் அவரை ஜாதியிலிருந்து விலக்கி அவர் செய்யும் சுப அசுப காரியங்களுக்கு உதவி செய்யாமல் ஒதுங்கி நின்றார்கள். அக்

காலத்தில் அவர் செய்யவேண்டிய திதியொன்று வர, அவர் அதற்கு வேண்டிய அந்தணரை எவ்வாறு பெறுவதென்று திகைத்து நின்றபோது, ஸ்ரீ மகா விஷ்ணுவே அந்தணராகத் தோன்றி அவர் செய்ய வேண்டிய திதியை முடித்து வைத்தனராம். அதை யறிந்த அப்பெரியார் கடவுளை வணங்கி நன்றி கூற, அப்பெருமான் "ஊருக்குப் பொல்லான் எனக்கு நல்லான்" என்று கூறியருளி சென்றனராம். அன்று முதல் அக்குடும்பம் நல்லான் என்ற பெயர் பெற்றது. சக்கிரவர்த்தி என்ற பெயர் பிறருக்கு ஞானோபதேசம் செய்ய உரிமை பெற்ற குடும்பத்துக்கு உரியதாகும்

**பிறப்பு**

இத்தகைய பழம் பெருமை வாய்ந்த குடும்பத்திலே சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் 1878-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9-ஆம் நாள் தோன்றினர். அவருடைய தகப்பனர் ஸம்ஸ்கிருதக்கல்வியும் வைதிக ஒழுக்கங்களும் செறிந்து அவ்வூரார் எல்லோராலும் போற்றிவரப் பெற்றவர். அவர் அவ்வூர்க் கிராம முனிசீபாகவும் சிறந்த கல்விமானுகவும் இருந்ததால் அவ்வூரின் தலைமையே அவரிடம் இருந்தது என்னலாம். இராஜகோபாலாச்சாரியார் பிறந்தவுடன் ஜோதிடர் சிலர் அவருடைய அங்க அடையாளங்களையும் ஜாதகத்தையும் பார்த்து "இவர் உண்மையான சக்கரவர்த்தியாகவே" ஆவார் என்று கூறினராம்.

**கல்வி**

இராஜகோபாலர் இளமை முதற்கொண்டே கல்வியில் சிறந்த ஆர்வம் காட்டி வந்தார். சிக்கனமாகக் காசுகளைச் செலவிடுவார். எந்த வேலையையும் தாமே

செய்து முடிப்பார். கலாசாலைப் படிப்புக்கு முதலில் பங்களூருக்கும் பிறகு சென்னைக்கும் அவர் சென்றார். சென்னையில் இராஜதானிக் கலாசாலையிற் படித்துப் பீ. ஏ. பட்டம் பெற்று வக்கீல் தொழிலுக்குரிய கல்வியையும் கற்றுத் தேர்ச்சி யுற்றார். சென்னையில் அவர் தங்கியிருந்தபோது ஸ்வாமி விவேகானந்தர் சென்னைக்கு வந்து சில நாட்கள் மாணவர் விடுதியில் தங்கியிருந்தார். இராஜாஜிக்கு அச்சமயம் அப்பெரியாருடைய தொடர்பு உண்டாயிற்று. அதன் பயனால் அவருக்குத் தேசபக்தி, ஆன்ம அறிவு முயற்சி, தியாக புத்தி முதலியன தோன்றின.

**தொழில்**

வக்கீல் கல்வியில் தேர்ந்தபின் அவர் சேலத்துக்குச் சென்று தொழில் நடத்தலானார். புதிதாக வக்கீல் தொழிலை ஏற்றுக் கொள்பவருக்குச் சடுதியில் பெயரும் புகழும் உண்டாவனவல்ல. ஆனால் இராஜாஜியின் அதிருஷ்டமே தனியானது.

**தொழில் ஊற்றம்**

அவர் வக்காலத்து பெற்ற முதல் வழக்கிலேயே வெற்றி பெற்றார். அதுவும் சேலம் நகரில் நீண்ட காலமாகப் பெரிய வக்கீல் என்று பெயர் பெற்று வந்த ஒருவருக்கு எதிரில் அவர் வாதாடி வென்றார். அவருடைய புகழ் அன்றே ஓங்கத் தொடங்கி விட்டது. அக்காலத்தில் சேலம் விஜயராகவாச்சாரியார் என்ற ஒரு பிரபல வக்கீல் சேலத்தில் இருந்து வந்தார். அவர் பிற்காலத்தில் காங்கிரஸ் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றவர். அவரை எதிர்த்து நிற்க எந்த வக்கீலும் அஞ்சுவர். இராஜாஜி பல தடவை

கள் அவருக்கு எதிராக நின்று வாதித்து வெற்றி பெற்றிருக்கிறார். அதற்குக் காரணம் அவருடைய நுண்ணறிவும் பேச்சுத் திறமையுமே. அவருக்குச் சட்டங்களின் நுட்பங்களெல்லாம் தெரியும். சிறி பவை என்று பிறர் புறக்கணித்திருப்பவை யாவற் றையும் அவர் கவனித்துப் பார்த்திருப்பார். முதலில் எதிராளியின் பேச்சிலுள்ள குற்றங்களையெல்லாம் அலசிக் காட்டிவிட்டுப் பிறகு தம் கட்சியின் சிறப்புக் களை ஒன்றன் பின்னொன்றாய் அடுக்கி வருவார். இவ் வாறு பேசும் திறமை அவருக்கு நாள் தோறும் முன் னேறி வந்தது.

1900-ஆம் வருஷம் அவர் சேலத்தில் வக்கீல் தொழில் ஆரம்பித்தார். 1918-ஆம் வருஷம் வரை யில் அவர் சேலத்திலேயே இருந்தார். இப்பதினெட் டாண்டுகளுக்குள் அவருடைய சீரும் சிறப்பும் மிகப் பெருகலாயின. செல்வ வருவாய் அதிகமாயிற்று. 1917-இல் அவருக்குச் சேலம் நகர் முனிசிபல் தலை மையும் கிட்டிற்று.

இராஜாஜி தாம் மேற்கொண்ட எத்தொழிலையும் மிகத் திறம்பட ஆற்றுவார். மக்களைப் பார்த்த நிலை யிலேயே அவருடைய குணநலன்களை அவர் கண்டு கொள்வார். ஒரு முறை ஒரு காகிதத்தைப் பார்த்த வுடனேயே அதனிலிருக்கும் செய்திகள் யாவும் அவர் மனத்தில் விளக்கமாகப் படும். எதையும் ஆராய்ந்தே செய்வார். பேசும்போதும் காரியங் களைச் செய்யும் போதும் மிகக் கண்டிப்பாக இருப் பார். தமக்கெனவோ, தம்மைச் சேர்ந்தவர்க்கென வோ ஓரம் செய்யும் இயல்பு அவரிடம் எந்நாளும்

இல்லை. சோம்பலென்பது அவர் இருக்கும் இடத்தி
லேயே இராது.

இத்தகைய குண நலன்களும் நீண்ட அனுபவ
மும் ஏற்பட்டபடியால் முனிசிபல் நிர்வாகத்தில் அவ
ருக்கு நல்ல பெயருண்டாயிற்று. பிற்காலத்தில்
அவர் தாங்கிய பெரிய பதவிகளுக்கு ஆரம்ப
பயிற்சிச் சாலையாக அம் முனிசிபல் தலைமைவேலை
ஆயிற்று. அவருடைய ஆட்சியில் நகரம் உருவத்
தில் விரிந்தது; சுகாதாரம், கல்வி முதலானவை
நல்ல முன்னேற்றமடைந்தன.

**சீர்திருத்த மனம்**

இராஜாஜிக்கு இளமை முதற் கொண்டே சமூ
கச் சீர்திருத்தங்களில் பேரவா உண்டு. தீண்டாமை
ஒழிப்பு, கட்குடி நிறுத்தல் ஆகிய இரண்டு துறை
களில் உழைத்துப் பயன் கண்டவர் இவரினும் வேறு
எவரும் இலர் என்று கூறலாம். மகாத்மா காந்தி
அரசியல் உலகத்தில் தோன்றுவதற்கு முன்பே
இராஜாஜி தீண்டாமையை ஒழிப்பதில் தீவிர முயற்சி
காட்டினர். தீண்டாதவர்களைத் தெருக்களுக்குள்
வரச்செய்தல், கல்விச்சாலைகளிலும் உணவு விடுதி
களிலும் சேர்த்து உடனிருக்கச் செய்தல், சமபோஜ
னம் ஆகியவற்றை இவர் தாமேயிருந்து பல தடவை
கள் செய்து காட்டினர். அதனால் வைதிகர்களுடைய
கோபமும் உறவினர்களின் வெறுப்பும் இவருக்கு
உண்டாயின. அவற்றுள் ஒன்றையும் அவர்
பொருட்படுத்த வில்லை. வைதிகர்கள் அவரைப்
பகிஷ்காரமும் செய்தனர். அதனாலும் அவர் மனம்
கலங்கவில்லை. தமக்கு நேர்மையான தென

தோன்றிய ஒன்றைச் செய்ய அவர் என்றும் பின் வாங்கியதில்லை; உலகமே எதிர்த்தாலும் அதற்கு அவர் அஞ்சுவதுமில்லை.

**அரசியல் பிரவேசம்**

இராஜகோபாலாச்சாரியாரின் பெருமை அவர் இயற்றிய அறிவு நூல்களிலா அல்லது சமூகச் சீர்திருத்தங்களிலா, அவரது அரசியல் புரட்சிகளிலா, அல்லது அரசியல் நிர்வாகச் சிறப்பிலா அமைந்திருக்கிறது, என்று பிரித்துச் சொல்வது இயலாத காரியம். இரைச்சல் போடாமல், படாடோபமில்லாமல், பூனை போல் நடந்துகொண்டே தாம் மேற்கொண்ட எத்துறையிலும் முதன்மை பெறும் வாய்ப்பு அவருக்கே அமைந்துள்ளது. இவ்வாய்ப்பு வெறும் அதிருஷ்டத்தாலமைந்ததன்று; தேர்ந்த உழைப்பாலும் நுண்ணறிவாலும் சமயோசித புத்தியாலுமே ஆனது. அவ்வாறு அவர் எடுத்துக் கொண்ட துறை ஒவ்வொன்றும் அவருக்கு முதன்மையை அளித்தாலும் அவற்றுளெல்லாம் பெரியதும், நீடித்ததும், அவருக்கும் உலகத்துக்கும் பெரும் பயனை அளித்ததும் அரசியல் துறையேயாகும்.

சேலத்தில் இராஜாஜி வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தபோது இந்தியக் காங்கிரஸில் தீவிரவாதிகள் திலகர் என்றவரின் தலைமையின் கீழ்ச் சிறந்த வேலைகள் செய்து வந்தனர். அவரைப்பின் பற்றித் தமிழகத்தில் பாரதியாரும், சிதம்பரம் பிள்ளையும் மேலான பணியாற்றி வந்த வரலாறுகளை முன் பாடங்களில் பார்த்தோம். இராஜாஜியின் மனமும் அத்துறையிலே சென்றது. அவர் பாரதியாருக்கும்

சிதம்பரனாருக்கும் தம்மாலான உதவிகளைச் செய்து வந்தார். சேலத்திலும் தீவிரக் கட்சியினரிடையே இவரும் அடிக்கடி விளங்குவார். ஒரு முறை மித வாதக் கட்சியான மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் சேலத்துக்குச் சென்று மக்களிடம் தம் கட்சியின் சார்பாகப் பேசியபோது இராஜாஜி அம்மேடையி லேறிச் சாஸ்திரியாருக்கு எதிராகப் பேச மக்களெல் லாம் அவரையே சார்ந்தனர்.

இவ்வாறு இராஜாஜி அரசியல் விஷயங்களிற் சிற்சில நேரங்கள் கலந்து கொள்ளத் தொடங்கிய காலத்தில், காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் புரிந்து வரும் அருமையான தொண்டுகளைப் பற்றிய செய்தி கள் பத்திரிகைகளில் வந்து கொண்டிருந்தன. இரா ஜாஜிக்குத் தம்மை அறியாமலே காந்தியடிகளிடம் ஒருவித பிரேமை உண்டாயிற்று. அடிகளைப் பற்றிய செய்திகளையும் அவர் ஒன்று விடாமல் கற்றுத் தேர்ந்து அவர்களுடைய கொள்கைகளில் ஈடுபட்டார்.

**நாட்டின் நிலை**

இக்காலத்தில் இந்திய அரசியலார் ரௌலட் சட்டம் என்ற ஓர் அநீதிச் சட்டத்தை ஏற்படுத்தி, அதன் கீழ் மக்களை நியாயமில்லாமல் கடுந்துன்பப் படுத்திக்கொண்டிருந்தனர். பஞ்சாப் படுகொலை என்ற பெரிய அநியாயமும் இக் காலத்தில் நிகழ்ந்தது. இவையெல்லாம் மக்கள் மனத்திற் பெருங் கொந் தளிப்பை உண்டாக்கி வந்தன. தலைவர்கள் நாடெங் கும் சுற்றி மக்களின் மனத்தை அரசாங்கத்திற்கு எதிராகத் திருப்பத் தலைப்பட்டனர். மகாத்மா காந்தி இந்தியாவுக்குத் திரும்பிவந்து தம் ஸத்யாக்ரக

சோதனையைச் செய்யத் தொடங்கினர் (1919). சென்னையிலும் தலைவர்கள் மிகத் தீவிரமாக உழைத்து வந்தனர். இந்தக் கொந்தளிப்பில் இராஜாஜியின் மனம் சிறிய நகரமான சேலத்தில் இருக்கக் கொள்ளவில்லை.

**சென்னைக்கு வருதல் - இராஜாஜியும் காந்திஜியும்**

அவர் சென்னைக்கு வந்து தம் வக்கீல் தொழிலை நடத்த முயன்றார். அங்கே அரசியல் வேலைகளிலும் அதிகப் பங்கெடுத்துக் கொண்டார். மகாத்மா தம் ஸத்யாக்கிரகப் போராட்டத்தைத் தொடங்குவதற்கு முன் நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து வரும்போது சென்னையிலிருந்த ஹிந்துப் பத்திரிகாசிரியரான கஸ்தூரிரங்க ஐயங்காரும் இராஜாஜியும் அவரைச் சென்னைக்கும் அழைக்க, அவர் அவ்வாறே வந்து இராஜாஜியின் மாளிகையில் தங்கினர். இராஜாஜி அவருக்கு விருந்தினராக நின்று உபசரித்தபோதும், சில நாட்கள் வரையில் மகாத்மா தாம் கஸ்தூரிரங்க ஐயங்காரின் விருந்தினராகவே இருந்து வந்ததாகக் கருதினாராம். அவ்வளவு அடக்கமும் படாடோப மின்மையும் இராஜாஜியிடம் இருந்தன. இச்சம்பவத்தைப்பற்றி மகாத்மா எழுதியுள்ளதைப் பார்ப்போம்.

"சென்னையில் அவரது (இராஜாஜியின்) விருந்தினராகவே தங்கினேம். ஆனல் இரண்டு மூன்று நாட்களுக்குப் பின்பே நான் இதனை உணர்ந்தேன். மகாதேவதேசாய் தாம் எனக்கு உண்மை நிலையைத் தெரிவித்தார். இராஜகோபாலாச்சாரியார் தமது இயற்கையான சங்கோஜ குணத்தால் எப்போதும்

பின்னணியிலேயே நின்ருர். ஆனல் மகாதேவ் எனக்கு விஷயத்தைத் தெரிவித்தார். "இந்த மனிதரிடம் தாங்கள் பழக்கம் செய்து கொள்ளவேண்டும்' என்று அவர் சொன்னர். அவ்வாறே நான் செய்தேன். போராட்டத்திற்குரிய திட்டங்களைப் பற்றி நாங்கள் நாள்தோறும் விவாதித்தோம்.

**சென்னையில் சத்தியாக்கிரகச் சபை**

மகாத்மா காந்திஜியின் விஜயத்தின் விளைவால் சென்னையில் ஒரு சத்தியாக்கிரகச் சபை நிறுவப்பட்டது. அதற்கு இராஜாஜியே காரியதரிசியானர். பல பெரியோர்கள் இதன் அங்கத்தினராயினர்.

**உலகப் போரும் இந்தியக் கோரிக்கையும்**

1918-இல் உலக மகாயுத்தம் நடந்த செய்தியை நாம் நினைப்பு மூட்டிக் கொள்ளவேண்டும். கெய்ஸர் என்ற ஜர்மனி மன்னர் ஆங்கிலேயர்மீது கொடும் போர் செய்து கொண்டிருந்தார். அச்சமயம் ஆங்கிலேயருக்கு இந்தியாவின் உதவி பெரிதும் வேண்டியிருந்தது. இந்தியக் காங்கிரஸின் தலைவர் பெஸண்டு அம்மையார் 'இந்தியாவுக்கு ஹோம்ரூல்' வேண்டுமென்று கிளர்ச்சி செய்து கொண்டிருந்தனர். சில தீவிரவாதிகள், 'இந்தியாவிற்குச் சுய ராஜ்யம் கொடுத்தாலல்லாமல் போரில் ஆங்கிலேயருக்கு உதவி செய்தலாகாது' என்று கூக்குரலிட்டுக் கொண்டிருந்தனர். அக்கூட்டத்திற்குத் தமிழகத்தில் காலம் சென்ற சத்ய மூர்த்தியும், இராஜாஜியும், சேலம் வரதராஜலு நாயுடுவும் தலைவர்களானர்கள். காஞ்சீபுரத்தில் ஒரு மகாநாடு நடந்தது. அதனில் பெஸண்டு அம்மையார் கட்சி தோல்வியுற்றது. சத்திய மூர்த்தியின் கட்சி வலுப்

பெற்றது. இராஜாஜியின் செல்வாக்கு ஏறத் தொடங்கிற்று.

**காந்திஜியின் முன்னேற்றம்**

1920-ஆம் ஆண்டில் மகாத்மா காந்தியின் ஒத்துழையாமைத் திட்டத்தை ஆராயத் திருநெல் வேலியில் ஒரு கூட்டம் நடந்தது. பல தலைவர்கள் அவருடன் சேர அஞ்சிப் பின் வாங்கினர். இராஜா ஜியே அதனைத் தாங்குவதாக முன்வந்தார். அவ ரைப் பலர் ஆதரித்தனர். அவருடைய தீர்மானமே வெற்றியுற்றது. மகாத்மா வகுத்த திட்டத்தின்படி தமிழ் நாட்டில் சத்யாக்கிரகம் தொடங்குவதெனத் தீர்மானிக்கப்பட்டது. அதே ஆண்டு கல்கத்தாவில் காங்கிரஸ் மகாசபை கூடி இதே தீர்மானத்தை நிறைவேற்றிற்று. அங்கும் வெற்றிக்குக் காரணம் இராஜாஜியே. இக் காரணத்தால் காங்கிரஸில் இருந்துவந்த பழந்தலைவர்கள் தங்கள் பதவிகளி லிருந்து விலகிக்கொண்டனர். இராஜாஜிக்கும் அவர் கட்சியினருக்கும் பொறுப்பு அதிகமாயிற்று.

**பஹிஷ்காரம்**

மகாத்மாவின் திட்டப்படி வக்கீல்கள் நியாயஸ் தலங்களிலிருந்து வெளியேற வேண்டுமென்றும், சர்க் கார் உத்தியோகஸ்தர்கள் தங்கள் உத்தியோகங்களி லிருந்து இராஜீநாமாச் செய்யவேண்டு மென்றும், மாணவர்கள் தங்கள் பள்ளிக்கூடங்களை விட்டு விட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. கட்குடி, தீண்டாமை ஆகியவை நாட்டிலிருந்து விலகவேண்டு மென்றும், எல்லோரும் கதரையே அணிய வேண்டு மென்றும் திட்டப்படுத்தப்பட்டது.

இவையாவும் அரசியலாருக்கு முரண்பாடான கொள்கைகள்: இவற்றை நிறைவேற்றுவதாலேயே பிரிட்டிஷாரிடமிருந்து இந்தியர் சுயராஜ்யம் பெற முடியும் என்றும் மகாத்மா வகுத்தார். நாடெங்கும் போராட்டம் தொடங்கிற்று. எங்கும் கோஷம்; எங்கும் முழக்கம்: எங்கும் மறியல்கள் தொடங்கின; போலீஸார் தடியடிப் பிரயோகம் நாடுமுழுவதும் எளிதாயிற்று. தலைவர்கள் சிறைச்சாலைகளை நிரப்பினர். இப்போராட்டத்தில் தமிழகத்தில் இராஜாஜியே முன்னணியில் நின்றார். அவர் எல்லா ஜில்லாக்களுக்கும் சென்று பிரசாரம் செய்தார்.

**சிறைவாசம்**

1921 டிசம்பர் 21-ஆம் நாள் இராஜாஜிக்கு முதல் சிறைவாசம் கிடைத்தது. அப்பொழுது அவருடைய உடல் நிலை நன்றாயில்லை. என்றாலும் நாட்டின் பொருட்டுத் தியாகம் செய்யக்கிடைத்ததை அவர் மிகவும் பாராட்டினார். சிதம்பரனார் சிறைவாசம் போன்றதன்று இராஜாஜியின் சிறைவாசம்; சிதம்பரனார் ஒரு குற்றவாளிபோல் தண்டிக்கப் பட்டார். இராஜாஜி ஒரு அரசியல் கைதிபோல் நடத்தப்பட்டார். அங்கே அவருக்கு வாழ்க்கை வசதிகளெல்லாம் அமைந்திருந்தன. தாம் சிறை செல்ல நேர்ந்ததைக் குறித்து, அவர் "நியாயத்தின் பொருட்டுச் சிறைபுகும் பேறு சிலருக்குத்தான் உண்டு, இக் கௌரவத்தையடைய நான் மிகவும் அதிர்ஷ்டசாலியே" என்று எழுதியிருக்கிறார்.

**நாட்டில் குழப்பம்**

இராஜாஜி சிறையில் இருந்த காலத்தில் நாட்டிற் பல சம்பவங்கள் நிகழ்ந்தன. சத்தியாக்கிரக முறை

யில் சிலர் இடர்ப்பட்டு நேர்மையான முறையில் நடந்து கொள்ளாததால், மகாத்மா காந்தி பொதுமக்கள் சத்யாக்கிரகம் செய்வதை நிறுத்தித் தனிப்பட்டவரே அதனைக் கையாளலாம் என்று கூறினர். அரசாங்கத்தாரின் அடக்கு முறை வலுவுற்றது. அவர்கள் மகாத்மாவுக்கு ஆறு வருஷக்காவல் அளித்து அவரைச் சிறையில் வைத்தனர். காங்கிரஸ் இனத்தவரிற் பலர் சத்தியாக்கிரக முறைக்கு எதிராகப் பேசலாயினர். பண்டித மோதிலால் நேரு, சித்தரஞ்சன தாஸர், வித்தல்பாய் படேல் முதலாயினோர் காந்திஜியின் வழிக்கு எதிரிடையாகச் சட்ட சபைகளிற் புகுந்து அரசாங்கத்தாரோடு போரிட வேண்டுமென வற்புறுத்தினர். இராஜாஜி மகாத்மாவை முற்றிலும் பின்பற்றுவர். ஆகவே அவர் தாம் சிறையிலிருந்து வெளிவந்தவுடன், மக்கள் சட்ட சபைக்குள் நுழைய வேண்டும் என்று கூறினவர்களுக்கு எதிராகப் பேசலாயினர். சில நண்பர்களும் அவருடன் கூடிக் கொண்டனர்.

இவ்வாறு காங்கிரஸில் கொள்கை வேற்றுமை காணப்பட்டமையால் மக்களிடையே மனக் குழப்பம் உண்டாயிற்று. சிறந்த தலைவர்கள் இராஜாஜியின் கருத்துக்கு எதிராக நின்றனர். 1922-இல் கயாவில் கூடிய காங்கிரஸ் மகாசபையில் இராஜாஜி தம் கருத்தை ஆணித்தரமாய்ப் பேச, அவருடைய வாதமே வெற்றி பெற்றது. இதன் விளைவால் தேசபந்து தாஸ் காங்கிரஸுக்குள்ளேயே 'சுயராஜ்யக் கட்சி' என்ற ஒன்றை வகுத்துக்கொண்டு அதனை நடத்திவரலாயினர்.

தாஸும், இராஜாஜியும் இரண்டு முரண்பட்ட கருத்துக்களைக் கொண்டு ஒருவருக்கு ஒருவர் எதிராக, நாடெங்கும் சென்று பிரசாரம் செய்யத் தொடங்கினர். காங்கிரஸுக்குள் பிளவு ஏற்பட்டது. அதனால் பலர் அந்த ஸ்தாபனத்திலிருந்து வெளியேறினர். 1923-இல் நடந்த காங்கிரஸுக்குத் தலைவராயிருந்த மௌலானா அபூல் கலாம் ஆஸாத் அவ்விரு கட்சிகளையும் ஒன்று கூட்ட முயன்றார். அக்காங்கிரஸ் கூட்டத்தின் முடிவாக மக்கள் சட்டசபையில் சேரலாமென்றும், மகாத்மாவின் பிற ஆக்கத்திட்டங்களும் செவ்வனே நடைபெற வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. இராஜாஜியும் இதற்கு ஒப்புக் கொண்டாரெனினும், தாம் சட்டசபைக்குச் செல்லாமலே, காந்திஜியின் ஆக்க வேலைகளாகிய கதர்ப் பெருக்கம், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு ஆகிய வழிகளிலேயே உழைப்பதாகத் தீர்மானங் கொண்டார்.

### காந்தி ஆசிரமம்

அதன்பொருட்டு அவர் சேலம் ஜில்லாவில் திருச்செங்கோடு என்ற இடத்தில் காந்தி ஆசிரமம் என்ற ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு ஆக்கத் திட்டங்களை நிறைவேற்ற உழைக்கலாயினர். சுற்றுப்புறங்களிலுள்ள கிராமங்களிலெல்லாம் மதுக் கடைகள் மூடப்பட்டன; கதர் உற்பத்தி மிகவும் அதிகமாகச் செய்யப்பட்டது; தீண்டாமை அறவே ஒழிக்க முயற்சிகள் கையாளப்பட்டன. இராஜாஜியின் தலைமையில் ஆச்சிரம வாசிகள் மிகுந்த கட்டுப்பாட்டுடன் அல்லும் பகலும் உழைத்து வந்தனர். இராஜாஜி தம் கொள்கைகளைப் பரப்புவதற்காகவும் தம் வேலை

களின் பயன்களைப் பிரசுரிப்பதற்கும் விமோசனம் என்ற ஒரு தமிழ்ப் பத்திரிகையை நடத்தி வந்தார். அவர் பிற ஆசிரமவாசிகளைப்போல தாமும் ஒரு குடிசையில் வசித்து எளிய வாழ்க்கையே நடத்தி வந்தார். அவருடைய சிறந்த திறனைக்கண்டு காந்தி மகானும் வியந்தனர். பாரத சர்க்கா சங்கம், காந்தி சேவா சங்கம், தமிழ் நாடு, ஆந்திர நாடுக் கதர் போர்டுகள், ஹரிஜன சேவா சங்கங்கள் முதலிய பல ஆக்கவேலைச் சங்கங்கள் அவருதவியை நாடின. அவர் கௌரவம் நாடெங்கும் ஓங்கிற்று.

**வேதாரணியம் உப்புச் சத்தியாக்கிரகம்**

1930-ஆம் ஆண்டில் காங்கிரஸ் தான் சட்ட சபையில் புகுந்து கொள்ளத் தீர்மானித்தது பிசகு என்பதை உணர்ந்து, காந்திஜியின் வழியிற் செல்வதே ஏற்றதாகும் என்ற முடிவுக்கு வந்தது. அவ்வாண்டுக் காங்கிரஸுக்குத் தலைமை வகித்த பண்டித ஜவஹர்லால் நேரு மகாத்மாவிடம் அரசியல் கிளர்ச்சித் தலைமையைக் கொடுத்துத் தாம் வெளியில் நின்றார். இராஜாஜியும் திருச்செங்கோட்டை விட்டு, அரசியல் வேலையில் புகுந்தார்.

1930 ஏப்ரல் 13-ஆம் நாள் மகாத்மா காந்தி தம் புகழ் பெற்ற தண்டிப் பிரவேச யாத்திரையைத் தொடங்கினர். பெருங்கூட்டமாகத் தண்டிக் கடற்கரைக்குக் கால் நடையாகச் சென்று உப்பு அள்ளுவதே இந்த யாத்திரையின் நோக்கம். இதுவே மகாத்மாவின் சாத்வீகப் போரின் முதற் பெரும் படையெடுப்பு. காந்திஜி தண்டியை நோக்கிப் புறப்பட்டதைப் போன்றே இராஜகோபாலாச்சாரி

யாரும் திருச்சிராப்பள்ளியிலிருந்து வேதாரணியத்தை நோக்கி உப்பள்ளப் பெரும் படையுடன் யாத்திரைப் பட்டார். காங்கிரஸ்காரருக்கு யாதோருதவியும் கொடுத்தலாகாது என்று ஜில்லாக் கலெக்டர் கடுமையான உத்திரவிட்டிருந்தும், மக்கள் அவர்களை மிகுந்த விருப்பத்துடன் வரவேற்றனர். இந்த யாத்திரை பதினைந்து நாட்கள் நடந்தது. குழந்தைகளும் பெண்டிரும் கூட இப்படையுடன் கூடிக்கொண்டனர். 1930, ஏப்ரல் 30-ஆம் நாளன்று இராஜாஜி பதினாறு தொண்டர்களுடன் உப்புச்சட்டத்தை மீறி உப்பை அள்ளினர். அதன் பயனாக அவருக்கு ஒன்பது மாதச் சிறைவாசம் கிடைத்தது.

இவ்வாறு இராஜாஜியால் வேதாரணியத்தில் ஏற்றிய தீ நாடு முழுவதும் காட்டுத் தீப்போல் பிடித்துக் கொண்டது. எங்கும் சத்தியாக்கிரகம்; எங்கும் மறியல்; எங்கும் அடக்கு முறை; எங்கும் தண்டனை; எங்கும் சிறைவாசம்.

**அரசியல் பிரவேசம்**

இவ்வாறு இந்தியா முழுவதும் சட்ட மறுப்பும் எதிர்ப்புமாகப் பெருக பிரிட்டிஷ் துரைத்தனத்தார் காங்கிரஸோடு ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். இதற்குக் காந்தி—இர்வின் ஒப்பந்தம் என்பது பெயர். இதன் விளைவால் சிறையிலிருந்த பலரும் விடப்பட்டனர். இராஜாஜியும் வெளிவந்தார். இவ்வொப்பந்தத்தின் பின் காங்கிரஸின் போக்கிற் சில மாறுதல்கள் தோன்றின. மோதிலால் நேரு, தாஸ், போன்றவர்கள் பத்தாண்டுகளுக்குமுன் சட்டசபையில் காங்கிரஸ்காரர்கள் புகவேண்டுமென்று கூறிய

போது இராஜாஜியே அம்முயற்சியை எதிர்த்து நின்றாரல்லவா? பத்தாண்டுகளுக்குப் பின் அரசியல் விஷயங்கள் சிறிது மாறுதலடைந்த பிறகு, சட்ட சபையில் புகுந்து, மந்திரிகள் ஸ்தானங்களையும் காங்கிரஸார் கைப்பற்றுவதால் மக்களுக்கு அதிக நன்மை செய்யலாமென்று தலைவர்களுக்குத் தோன்றிற்று. ஆகவே, தமிழ் மாகாணக் காங்கிரஸ் தலைவராயிருந்த இராஜாஜிக்குத் தகுந்த அபேட்சகர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களைத் தேர்தலில் வெற்றி பெறச் செய்ய வேண்டியது இன்றியமையாததாயிற்று. அது காறும் சட்டசபைகளிலே நின்று செல்வாக்குப் பெற்றவர்களும் பிரபுக்களுமான எதிர்ப் போட்டிக்காரர்களுடன் எதிர்த்து வெற்றி பெறுவது எளிய காரியமன்று. ஆனால் இராஜாஜியின் யுக்தியும் சத்தியமூர்த்தியின் பேச்சும் அக்காரியத்தை மிக எளியதாக்கிவிட்டன. காங்கிரஸ்காரர்கள் பெருவாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். என்றாலும் அவர்கள் பரபரப்புடன் பதவிகளை ஏற்கவில்லை. கவர்னர் தம் அரசியல் நிர்வாகத்தில் தலையிடுவதில்லையென்று வாக்களித்த பின்பே பதவியேற்கமுடியும் என்று கூறி ஒதுங்கியிருந்துவிட்டனர்.

முதன் மந்திரிப் பதவி

பிரிட்டிஷார் தம் ஆட்சியை அப்புறப் படுத்த வேண்டுமென்ற காங்கிரஸ்காரர்களைப் பதவியில் சேர்த்துக் கொள்ளவும் முடியவில்லை; சட்ட சபையில் பெருவாரியாக இருந்த அவர்களை ஒதுக்கவும் முடியவில்லை. ஆங்கில அரசாங்கத்தார் பலமுறை ஆலோசித்துக் காங்கிரஸுக்கு இணங்குவதன்றி

வேறு வழியில்லாமையால் காங்கிரஸின் விருப்பப் படியே செய்வதாக வாக்குறுதி செய்தனர். அதன் மேல் இராஜாஜி சென்னை மாகாணப் பிரதம மந்திரி வேலையை ஒப்புக்கொண்டனர்.

இராஜாஜி இரண்டேகால் ஆண்டுகள் நம் மாகாண ஆட்சியை நடத்தினர். அவர் தகுந்ததுணை மந்திரிகளை நியமித்து மிகவும் நன்றாக வேலை பார்த்தார். அவருடைய சூக்ஷ்ம புத்தியும், ஆலோசனையும், அவருடைய நிர்வாகசக்திக்குப் பெரிதும் துணை அளித்தன. எவ்வளவோ ஆயிரம் ஆண்டுகளாக நடந்து வந்த பழக்கவழக்கங்களை அவர் ஒரு நொடியில் புதிய சட்டங்களை இழைத்துச் சீர்திருத்தினர். குடியொழிப்பு, தீண்டாதார் ஆலயப்பிரவேசம், கல்விச்சாலைகளில் இந்தியைக் கட்டாயமாகக் கற்பித்தல், குடியானவர்களின் கடன் நிவாரணம் ஆகியவை அவருடைய சீர்திருத்தங்களிற் சிறந்தனவாகும். கிராமமக்கள் குடிநீர்த்திட்டம்; கால்நடை மேய்ச்சல் கட்டணம் குறைப்பு, சுகாதார முன்னேற்றம் முதலியவற்றிற்கும் அவர் சட்டங்களியற்றினர். குடியால் வரும்வரி நஷ்டத்துக்கு ஈடு செய்ய அவர் வியாபார வரி என்ற புதியதொரு வரியை இட்டார். இவ்வளவு பெரிய காரியங்களை நிறைவேற்ற இராஜாஜிக்கு அல்லாமல் வேறு எவருக்கும் இக்குறுகிய காலத்தில் சாத்தியமாகாது. அரசியல் உத்தியோகஸ்தர்கள்—வெள்ளைக்காரர்கள் இந்தியர் ஆகிய யாவரும்—இராஜாஜியின் உழைப்பையும் கண்டிப்பையும் கண்டு, மிகக் கவனத்துடன் வேலைபார்த்து வரும்போது இரண்டாவது உலகமகா யுத்தம் வந்து சேர்ந்தது. இந்தியர்களைக் கேட்காமலே ஆங்கிலேயர்

கள் இந்தியாவையும் போரில் சேர்த்துக் கொண்டபடியால், காங்கிரஸ் அரசாங்கத்தோடு ஒத்துழைக்க மறுத்தது. ஆகவே மந்திரிகளும் தம் பதவிகளை இராஜீநாமாச் செய்துவிட்டு வெளியேறினர். இராஜாஜியும் அவர்களுடைய மந்திரிகளும் இவ்வாறு வெளி வந்தார்கள்.

**காங்கிரஸுக்குள் முரண்**

இதற்குள் காங்கிரஸில் எதிர்பாராத ஒரு பெருங் குழப்பம் உண்டாயிற்று. காங்கிரஸில் சில தீவிர வாதிகள் காந்திஜியின் சாத்வீகப் போக்கில் வெறுப்புற்றனர். அவர்கள் உலகில் தோன்றிய போரை இந்தியாவுக்குப் பயன் படுத்திக்கொண்டு சுயராஜ்யம் பெறவேண்டுமென்று கூறினர். இக் கட்சிக்குத் தலைவராயிருந்தவர் பாபு சுபாஸ் சந்திரபோஸ். அவருக்கும் மகாத்மா காந்திக்குமிடையே கருத்து வேற்றுமைகள் அதிகம் வளர்ந்து வந்தன. இராஜாஜி மகாத்மா சார்பிலேயே நின்றார். என்றாலும் சமயம் வந்தபோது அவரை இடித்தும் கூறுவார். ஒவ்வொரு சமயத்தில் இருவரும் பிரிந்து நிற்பதும் உண்டு. பிரிட்டிஷ் அதிகாரிகள் யார் என்ன அறிவுரை கூறினும் கேட்காமல் தம் மனம் போனபடியே சென்று வந்தனர். இவ்வாறு காங்கிரஸின் இரு பிரிவுகளுக்கிடையிலும், அரசாங்கத்திற்கும் காங்கிரஸுக்கும் இடையிலும், முஸ்லிம் கட்சிக்கும் காங்கிரஸுக்கும் உண்டான முரணிலும் நின்று ராஜாஜி அரும்பணியாற்றி வந்தார். அவருடைய சிறந்த அரசியல் நுட்பத்தைக் கண்டு உலகமே வியந்தது.

**கடைசி முறைச் சிறைவாசம்**

அரசியலார் போர் நடத்தும் துறையில், காங்கிரஸ் ஒத்துழையாமையைக் கண்டு காங்கிரஸ் தலைவர்களை ஒருவர்பின் ஒருவராய்ச் சிறைசெய்யலாயினர். அண்மையில் மாகாணத்துக்கே முதல் அமைச்சராயிருந்து போலீஸ் படைகளையெல்லாம் தம் ஆளுகையில் வைத்திருந்த இராஜாஜி நான்காவது முறையாகப் போலீஸாரால் கைது செய்யப்பட்டார். அச்சமயம் அவர் தமிழ்நாட்டுக்கு விடுத்த ஒரு செய்தி மிக உருக்கமானது.

"ஜவாஹர்லால் நேருவும், வல்லபாய் படேலும் சிறையிலிருக்கையில் இந்தியா தன்னோடு இப்போரில் நிற்கிறது என்பது பொருத்தமற்ற காரியம். இந்தியாவினால் தாம் எவ்வளவு வசதிகளைப் பெறலாமோ அவற்றையெல்லாம் பெற்றுக் கொள்வதே அரசியலாரின் நோக்கம். மக்கட் பிரதிநிதிக்கு அதிகாரம் கொடுக்க அவர்கள் அஞ்சுகின்றனர். இது இவர்களுடைய திடமான உறுதி என்பது எனக்கு இது வரை தெரியாமலிருந்தது. இப்பொழுது தெரிகிறது. நான் வெறும் கனவு காண்பவனல்லன்; முரட்டுப் பிடிவாதமோ பிரிட்டனிடம் தோஷமோ எனக்கில்லை; பொது வாழ்க்கைப் பெருமையிலும் நான் மயங்கினவன் அல்லன்; நான் உறுதியாக ஊன்றி நடப்பவன்; என்னைக் கேவலப்படுத்தியிருக்கிறார்கள். நான் சண்டைக்காரனல்லன்; பொறுப்பும் அதிகாரமும் படைத்து அனுபவம் பெற்றிருக்கிறேன். சமாதானத்துக்கான நியாய வழிகளிலெல்லாம் முயன்று மனம் சலித்திருக்கிறேன். பிற நாட்டாரைப்போல் சுதந்திரமாகவும், கௌரவமாகவும் இந்திய மக்கள்

வாழவேண்டுமென்றே சந்தோஷமாகச் சிறைக்குச் செல்கிறேன். நாம் சாந்தமாகவும் உறுதியுடனும் இருப்போமானல் ஆண்டவன் அருள்புரிவான்."

இராஜாஜிக்கு ஒரு வருஷம் சிறைக்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அத்தீர்ப்பைக் கூறிய முஸ்லிம் மாஜிஸ்திரேட் தண்டனையைத் தழதழத்த குரலில் கூறிவிட்டுப் பகவத் கீதையிலிருந்து மூன்று சுலோகங்களைக் கோர்ட்டில் கூறிக் கலங்கினர். அச்சுலோகங்களின் தமிழ் மொழி பெயர்ப்புப் பின்வருமாறு:—அருச்சுனன் கூறுகிறார்: "என் அவயவங்கள் அயர்வடைகின்றன; என் நா வரள்கிறது; என் உடல் விதிர்விதிர்க்கிறது. மயிர் கூச்செறிகிறது; என் கைகளினின்று காண்டீபம் நழுவுகிறது; உடலில் வெப்ப முண்டாகிறது; என்னல் நிற்க முடியவில்லை; என் மனம் மருள்கின்றது." கிருஷ்ணன் கூறுகிறார்: "உனக்குச் செயல் புரியவே உரிமையுண்டு; அதன் நன்மை தீமைகளை எதிர் பார்க்க உனக்கு உரிமையில்லை; செய்யும் செயல்களின் பயனை எதிர்பாராதே; தொழிலைச் செய்யாமலும் இராதே." இக் கீதைச் சுலோகங்களை வடமொழியிலேயே கூறிப் பிறகு, 'தாங்கள் சீக்கிரமே விடுதலையாகித் தங்கள் உயர் பதவியை மீண்டும் பெறவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்' என்று அவர் கூறினர்.

இவ்வாறு தண்டனை விதிக்கும் நியாயாதிபதியின் மனமே உருகிற்றென்றால், அவரிடம் அன்பு கொண்டிருந்த பல்லாயிரம் மக்களின் மனமும் எவ்வாறிருந்திருக்கு மென்பதைக் கூறவேண்டியதில்லை.

இராஜாஜி தம் தண்டனைக் காலம் முடிந்ததும் சிறையிலிருந்து வெளிவந்தார். அவர் சிறையிலிருந்த காலத்தில் உலகப் போரில் பல நிகழ்ச்சிகள் நடந்தன. ஜர்மனி, ஜப்பான், இத்தாலி என்ற மூன்று நாடுகளும் பிரிட்டிஷ்காரருக்கும் அவர்களுடன் கூடிய நாட்டினருக்கும் பெரிய விபத்துக்களை உண்டாக்கி வந்தன. பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவுக்கு ஏதேனும் ஒரு வழியில் நன்மை செய்தாலன்றித் தமக்குப் போரில் துணைகிடைக்காதென்றெண்ணி ஸ்டாப்போர்ட் கிரிப்ஸ் என்றவரை இந்தியாவுக்கு அனுப்பினார்கள். இந்தியாவில் ஜனப் ஜின்னா என்ற முஸ்லிம் தலைவர் தாம் காங்கிரஸோடு ஒத்திருக்கச் சிறிதும் விரும்பவில்லையென்றும், இந்தியாவின் சில பகுதிகளைப் பிரித்துப் பாகிஸ்தான் என்று ஒரு தனி நாடாக அமைக்கவேண்டுமென்றும் பிடிவாதமாகக் கூறி வந்தார்.

கிரிப்ஸ் துரை வந்து இந்தியாவுக்கு நன்மை செய்யப் போவதாகக் காட்டிய திட்டமும் காங்கிரஸுக்குப் பிடிக்கவில்லை. இந்தியத் தலைவர்கள் பலரும் இச்சம்பாஷணைகளில் ஈடுபட்டனர். இராஜாஜி பலமுறை கிரிப்ஸுடன் பேசினார். பாகிஸ்தான் விருப்பினரான ஜனப் ஜின்னாவினிடம் பல முறை பேசினார். காங்கிரஸுக்கும் கிரிப்ஸுக்கும் மனம் ஒவ்வவில்லை; அவர் தம் ஊருக்குத் திரும்பிப் போனார்.

ஆனால் ஜின்னாவோ மிகப் பிடிவாதமாக விருந்தார். வழிவழியாய் ஒரு தேசமாக வந்த இந்தியாவை இரண்டாகத் துண்டிப்பதாவது என்று

எல்லா இந்தியத் தலைவர்களும் அஞ்சினர். இராஜாஜி ஒருவரே பாகிஸ்தானுக்கு இடங்கொடுக்காவிட்டால் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கிடைக்காதென்பதைக் கண்டார். அவர் பாகிஸ்தானைப் பிரித்து விடுவதற்கு ஒரு திட்டம் வகுத்தார். அத்திட்டத்தைக்கொண்டு காங்கிரஸ் தலைவர் எல்லோரிடமும் சென்று, பாகிஸ்தானைத் துண்டித்து விடுமாறு கேட்டுக்கொண்டார். ஒருவரும் அவர் சொல்லுக்கு இணங்கவில்லை. காந்திஜியும் அவர் கூறுவது சரியானதென்று ஒப்புக் கொள்ளவில்லை. இவ்வாறு இந்தியாவில் தாம் ஒருவராகவே நின்று இந்தியாவுக்குச் சுயராஜ்யம் பெறுவதற்குத் தாம் கண்டவழியைப் பிரசாரம் செய்தார். காங்கிரஸில் தமக்கு இடமில்லையென்று கண்டு அதனின்று முற்றிலும் விலகிக்கொண்டார். என்ன தைரியம்! என்ன ஆற்றல்!

முடிவில் 1947 ஆகஸ்டு 14-இல் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வந்தபோது இராஜாஜி கூறிய வழியிலேயே பாகிஸ்தான் அமைக்கப் பெற்று. இரண்டு நாடுகளுக்கும் சுயராஜ்யம் அளிக்கப்பட்டது. அப்பொழுதுதான் அனைவர் கண்களும் திறந்தன. இராஜாஜியின் தீர்க்க தரிசனத்தையும் சூக்ஷ்ம புத்தியையும் அனைவரும் கொண்டாடினர்.

**கவர்னர்**

சுயராஜ்யம் வந்தவுடன் இந்தியாவின் எல்லா நிர்வாகங்களையும் இந்தியரே ஒப்புக் கொண்டனர். பண்டித ஜவஹர்லால் நேரு இந்தியப் பிரதமராயினர். முன்பிருந்த மௌண்ட்பாட்டன் பிரபுவே தற்காலிகமாகக் கவர்னர் ஜெனரல் பதவியிலிருக்கலாமென்று

தீர்மானிக்கப்பட்டது. இராஜாஜி இந்திய வங்காளக் கவர்னர் ஆனார். வங்காளம் அச்சமயம் வகுப்புக் கலவரத்தால் கொந்தளித்துக் கொண்டிருந்தது. அந்நிலையை இராஜாஜி மிகவும் சாமர்த்தியமாகச் சமாளித்தார்.

**கவர்னர் ஜெனரல்**

மௌண்ட்பேட்டன் பிரபு தம் வேலையை இராஜீநாமா செய்து சீமைக்குச் சென்றபோது அப்பதவிக்கு ஏற்றவர் நம் இராஜாஜியே என்று கருதி அவரையே அதனில் அமர்த்தினர். முதன் முதல் இந்தியாவுக்குக் கவர்னர் ஜெனரலான இந்தியர் நம் இராஜாஜியே. பெயரால் சக்கரவர்த்தியா யிருந்தவர் பதவியாலும் சக்கரவர்த்தியானார். அந்த வைபவம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. உலகம் முழுமையும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பினர். சுயராஜ்யம் பெற்றதால் இந்தியா உலக முன்னணியில் நிற்கும் இடம் பெற்றது. அத்தகைய இந்தியாவுக்குக் கவர்னர் ஜெனரலாய் விளங்கிய இராஜாஜியின் உயர்வை நாம் என்னென்போம்.

**மந்திரி**

அப்பதவியையும் அவர் மிகத்திறமையுடன் வகித்து வந்தார். மந்திரிகளுக்கு உபதேசம் செய்பவராயும் அவர்கள் செய்யும் செயல்களுக்கெல்லாம் முடிவு கட்டுபவராகவும், இராஜ்ய ஆளுகையின் பொறுப்பினைப் பெற்றவராயும் இருக்க அவரிடம் எத்துணைக் குணநலனும் ஆற்றலும் இருக்கவேண்டும்? உரிய காலத்தில் அப்பதவியை விட்டு நீங்கி அவர் சென்னைக்கு வந்து தம் இல்லத்தில் தங்கித்

தம் மனத்துக்குகந்த முறைகளிற் செலவிடக் கருதி யிருந்தார். ஆனல் இந்திய அரசியலார் அவரை, அவ்வாறிருக்க விடவில்லை. அவருடைய விருப்பத் திற்கெதிராக அவரை மறுபடியும் மந்திரிப் பதவியை ஏற்றுக் கொள்ள வற்புறுத்தினர்கள். பதவியை ஏற்ற இராஜாஜி முதலிற் சின்னாள்வரையில் யாதொரு இலாகாவுக்கு மில்லாமல் ஒரு மந்திரியாக இருந்து வந்தார். பின்னர் "சர்தார் படேல்" இறந்ததி லிருந்து உள்நாட்டிலாகா மந்திரியாக இருந்து வரு கின்றார்.

இன்று இராஜாஜிக்குப் பிராயம் எழுபத்தி மூன்ருகிறது. இருந்தும் மிகுந்த சுறுசுறுப்புடனும் புத்திக் கூர்மையுடனும் அவர் தம் வேலையைப் பார்த்து வருகின்ருர். இன்று உலகச் சூழ்நிலை மிகச் சிக்கலாக விருக்கின்றது. இந்தியாவிலுள்ள பல கொடிய பிரச்சினைகள் தலையெடுத்து நிற்கின்றன. இந்நிலையில் இந்தியாவுக்கு உறுதுணையாயிருந்து அதனைக் காத்து முன்னேற்ற இராஜாஜியின் உழைப்பும் அறிவுத் திறனும் வேண்டும். இராஜா ஜியின் சரித்திரம் இந்தியாவின் இக்காலச் சரித்திரம் என்று கூறுவதே பொருந்தும். இறைவன் அவர் நீடூழி வாழ அருள்வாராக.

இராஜாஜி ஓர் அபூர்வ மனிதர்; அவரை ஒரு புதிர் என்றும் சொல்லலாம். டாக்டர் ஐயரவர்களின் கல்வியும் சிதம்பரம்பிள்ளையின் தியாகமும், பாரதி யின் கற்பனையும், செட்டி நாட்டு மன்னரின் திற மையும் இராஜாஜியிடம் ஒருங்கு காணப்பெற்றன. இராஜாஜிக்கு இவ்வளவு பெருமைகள் உண்டாக

அவரிடம் அமைந்த சிறப்புக்கள் யாவை? அவர் நல்ல கல்விமான். தமிழ், ஆங்கிலம் இவ்விரண்டிலு முள்ள அறிவு நூல்களையெல்லாம் அவர் நன்றாகப் படித்திருக்கிறார்; ஸம்ஸ்கிருதம், தெலுங்கு இவற்றின் நுட்பங்களையும் உணர்ந்திருக்கிறார். 'கற்க கசடறக் கற்பவை, கற்றபின் நிற்க அதற்குத் தக' என்றபடி, தாம் படித்த நூல்களால் பெற்ற அறிவை அவர் தம் வாழ்க்கையில் பயன்படுத்தியே வருகின்றார். அவர் தம் மனத்திற்கு ஒவ்வாத காரியங்களில் தலையிடமாட்டார். தமக்கு ஒத்த விஷயங்களில் எவ்வளவு அறிவு பெறக்கூடுமோ அவ்வளவையும் பெற்றுவிடுவார். சிறிய காரியமானாலும் அதற்கொரு திட்டம் வகுத்துக்கொண்டு அந்த முறைப்படியே செல்வார். முன் யோசனை இல்லாமல் அவர் எக் காரியத்திலும் இறங்குவதில்லை; முன் வைத்த காலைப் பின் வைப்பதும் இல்லை. எதையும் கூர்ந்து ஆலோசிக்கும் ஆற்றல் உள்ளதால் அவர் ஒரு முடிவுக்கு இலகுவில் வர மாட்டார். ஒரு முடிவுக்கு வந்துவிட்டால், உலகமே எதிர்த்து நிற்பதானாலும் அதற்கு அஞ்சமாட்டார். அவர் மனம் குழந்தையினதைப் போன்று மெல்லியது. துன்பப்படுகிறவர்களிடம் அவருக்கு இரக்கம் நிரம்ப உண்டு; ஆனால், காரியத்தில் தயை தாக்ஷிணியம் எவருக்கும் காட்ட மாட்டார். தாம் எப்போதும் சுறுசுறுப்பாயிருப்பார். எக் காரியத்தையும் தாமே செய்து கொள்ளும் ஆற்றல் அவரிடம் உண்டு. டில்லி அரண்மனையில் வசிக்கும் காலத்தும், திருச்செங்கோட்டுக் குடிசையில் வாழுங் காலத்தும் ஒரே வித வாழ்க்கையை நடத்தி வந்தார். எக்காரணம் பற்றியும் அநீதியான செயலை அவர் செய்யமாட்டா

ராதலால் அவர் தம் எச் செயலேக்குறித்தும் இரங்க வேண்டியதில்லே. தமக்காகவும் தம்மைச் சேர்ந்த வர்க்காகவும் நன்மை புரியவே பொதுச்சேவை ஏற்பட்டது என்ற எண்ணம் அவரிடம் எள்ளளவும் இல்லே.

அவர் பேச்சில் இனிமையோ விருவிருப்போ இராது, என்ருலும் அவர் பேசும் முறையும், காட்டும் காரணங்களும், கையாளும் உவமைகளும், கூறும் கதைகளும், ஆளும் பழமொழிகளும் அவருடைய சொற்பொழிவுகளுக்கு ஒரு தனிச் சக்தியைக் கொடுக்கின்றன. அழகுக்காகவோ அழுத்தத்திற்காகவோ அவர் ஒரு முறை சொன்னதை மறு முறை சொல்வதில்லே.

இவற்றிற்கெல்லாம் மேலே அவரிடம் திடமான கடவுள் நம்பிக்கை குடிகொண்டிருக்கிறது. பரம்பரையால் பெற்ற கடவுளறிவும், தம் கல்வியால் பெற்ற ஞானமும் ஒன்று கூடி அவரைச் சிறந்த மதத் தொண்டராக ஆக்கிவிட்டன. விஞ்ஞான நூல்களே யெல்லாம் படித்த விசேடத்தால் பௌதிக அறிவு அவரிடம் நிரம்ப அமைந்திருந்தும் அவற்றிற்கெல்லாம் மேலே ஒரு கடவுள் உண்டென்பது அவருக்கு நன்ருகத் தெரியும். பிறப்பினுலே வைணவராலும் அவர் நோக்கால் சமரஸப் பான்மை பெற்றவர். தூய மனமும், மாசற்ற ஒழுக்கமும் கடவுளன்பும், கூரிய அறிவும் கூடிவிட்டால் அங்கே எல்லாம் கைகூடிவிடுமல்லவோ?

**தமிழன்பு**

அவருடைய தாய்மொழி அன்பு இணையற்றது. தமிழ் நாட்டில் தமிழ் மக்களிடம் தமிழ் மொழியில்

பேசிய பெரிய மனிதர்களுள் இராஜாஜீ முதல்வர் எனலாம். குறள் கம்பராமாயணம், ஆழ்வாரின் அருளிச் செயல்கள் இவற்றில் அவருக்கு நல்ல அறிவு உண்டு. அவர் தமிழிலே எழுதி வெளியிட்டுள்ள பல நூல்களை இன்று நாம் காணலாம். அவை யாவும் எளிய நடையில் எழுதப் பெற்றிருப்பதாலும் அவருடைய உள் மனத்திலிருந்தே வெளிப்பட்டவையானதாலும் படிக்கிறவர் மனத்தை ஊடுருவித் தாக்குவனவாகும். வியாசர் விருந்து என்ற பெயருடன் வெளிவந்துள்ள தமிழ் பாரதம் ஓர் அற்புத சிருஷ்டியே. உபநிஷத பலகணி, கண்ணன் காட்டிய வழி ஆகியவை ஆன்ம போதனை நூல்கள். ஸோக்ரதர், மாரக்கஸ் ரேலியர் உபதேச மொழிகள் ஆகியவை அந்நிய நாட்டறிவைத் தமிழருக்காக ஆக்கியவை. சிசுபாலனம், தாவரங்களின் இல்லறம் என்பன அறிவு நூல்கள். குட்டிக் கதைகள் அவருடைய கற்பனை சக்தியைக் காட்டுபவை.

தமிழ் மொழியின் ஆற்றலில் இராஜாஜிக்குச் சிறந்த நம்பிக்கையுண்டு. எதனையும் தமிழினிற் சொல்லிவிடலாம் என்பது அவருடைய நம்பிக்கை. அதன் பொருட்டே கலைச்சொல் ஆக்க முயற்சியில் பெரிதும் முயன்று மேன்மையான பணியாற்றினர். ஆங்கிலத்திலுள்ள மொழிகளுக்கெல்லாம் தமிழ்ச் சொற்களைக் கண்டு எழுத வேண்டுமென்பதும், தமிழிலுள்ள பழமொழிகளையெல்லாம் தொகுத்து உலகத்துக்குக் கொடுக்க வேண்டுமென்பதும் அவருடைய நீண்ட நாள் அவா. தமிழில் வருமா? என்று அவர் எழுதியுள்ள ஒரு புத்தகம் அவருடைய ஆர்வத்தையும் ஆற்றலையும் ஒரு வகையாகக் காட்டுகிறது.

திருக்குறள் பொருட்பாலை அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். பல தமிழ்க் கதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். எட்டையா புரத்தில் பாரதிக்கு மண்டபம் திறந்து வைத்ததும், தூத்துக்குடியில் சிதம்பரம்பிள்ளை பெயரால் நாவாய் செலுத்தியதும் அவருடைய தமிழ்ப் பேரன்பைக் காட்டுகின்றன. அரசியலிலிருந்து கிடைக்கும் சிறி தளவு ஓய்வையும் அவர் தமிழுக்கே அர்ப்பணம் செய்கிறார். அவருடைய உழைப்பால் தமிழன்னை எத்துணையோ புதிய வனப்புக்களைப் பெறக் காத்திருக்கின்றாள்.

---

